# அடிசூடும் அரசு





மு. இராமசாமி இராசிபுரம்

# पुस्तकालय

## गुरुकुल कांगड़ी विश्वविद्यालय, हरिद्वार

वर्ग संख्या .......... आगत संख्या..........

पुस्तक-वितरण की तिथि नीचे अंकित है। इस तिथि सहित ३० वे दिन तक यह पुस्तक पुस्तकालय में वापिस आ जानी चाहिए। अन्यथा ५० पैसे प्रतिदिन के हिसाब से विलम्ब-दण्ड लगेगा। पुस्तक लेने के पहले पाठ्य पुस्तक की भली-भांति जांच कर लें। इश्यू होने के पश्चात फटी पुस्तक, विलुप्त पृष्ठो की कोई जिम्मेदारी पुस्तकालय की नहीं होगी।

முதல் பதிப்பு 16—7—1993
உரிமை ஆசிரியர்க்கு

திருவரங்கம் பதிப்பக நூல் 31
நாமக்கல் கம்பன் கழக 32 வது
ஆண்டு விழாவில் வெளியீடு செய்யப் பெற்றது.

விலை ரூ. 40—00

நூல் கிடைக்கும் இடம் :

"திருவரங்கம் பதிப்பகம்"
7, எல்லப்ப செட்டியார் குடியிருப்பு,
இராசிபுரம்-637 408.

அச்சிட்டோர் :

சன்-மூன் பிரிண்டர்ஸ்,
17, குண்டுப்பிள்ளையார் கோவில் தெரு,
அம்மாப்பேட்டை, சேலம்-3.

# புத்தக விவரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அடி சூடும் அரசு |
| ஆசிரியர் | : | மு. இராமசாமி |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| ஆண்டு | : | 16—7—1993 |
| மொழி | : | தமிழ் |
| உரிமை | : | ஆசிரியர் மு. இராமசாமி |
| தாள் | : | டெம்மி 7.2 |
| அளவு | : | 1x10 |
| பக்கம் | : | 256 |
| எழுத்து | : | 10, 12: 14, 18. புள்ளி |
| கட்டு | : | அட்டைக்கட்டு ஆர்ட்பேப்பர் |
| விலை | : | ரூ. 40—00 |
| வெளியீடு | : | திருவரங்கம் பதிப்பகம் |
| படிகள் | : | 1000 |
| அச்சிட்டோர் | : | சன்-மூன் பிரிண்டர்ஸ் அம்மாப்பேட்டை, சேலம்-3. |

# பொருள் அடக்கம்

ஸ்ரீ :

# நூல்முகம்

குரைகடலை அடல் அம்பால் மறுக எய்து
குலைகட்டி மறுகரையை அதனால் ஏறி,
எரிநெடுவேல் அரக்கரொடும் இலங்கை வேந்தன்
இன்னுயிர்கொண்டு அவன்தம்பிக்கு அரசும் ஈந்து,
திருமகளோடு இனிதமர்ந்த செல்வன் தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடம் தன்னுள்,
அரசுஅமர்ந்தான் அடிசூடும்அரசை அல்லால்
அரசாக எண்ணேன் மற்று அரசு தானே!

(பெருமாள் திருமொழி-7)

**பாரதநாடு:**

நம் புண்ணிய நாடு, பரதன் பெயரால் வழங்குகின்றது. அந்தப் பரதன் யார்? இந்தப் பெயருடன் வாழ்ந்தவர்கள் பலர் உண்டு. துஷ்யந்தனுக்கும் சகுந்தலைக்கும் மகனாகத் தோன்றி வளர்ந்து வாழ்ந்து விளங்கியவன் ஒரு பரதன். இப் பெருந்தகைக்குப் பிறந்த மக்கள் பலர். அவர்களில் ஒருவர் கூட, தமது தந்தையைப் போல, பண்பாலும் திறமையாலும் உயர்ந்தவர்கள் இல்லை. அதனால், அந்தப் பரதப் பெருந்தகை, தனக்குப் பிறகு, இந்த நாட்டை ஆளும் பொறுப்பைத் தனது மக்களுள் ஒருவரிடமும் ஒப்படைக்க விரும்பவில்லை, நாட்டை வளமாகவும் நலமாகவும் ஆளும் திறமையும் தகுதியும் உடைய ஒருவரை வேறு ஒரு குலத்திலிருந்து தேர்ந்தெடுத்தான் அப்பெருமகன்: அவரிடத்தில் நாட்டை ஆளும் பொறுப்பை ஒப்படைத்தான். 'தன் சந்ததியே அரச பதவி ஏற்க வேண்டும்' என்ற சுய நலப் போக்கு இல்லாமல், பரந்த மனப்பான்மையுடன், தகுதிக்கும் திறமைக்குமே முக்கியத்துவம் கொடுத்தவன் இந்தப் பரத வள்ளல். 'அரசபதவி, தக்தார் கைக்குத்தான் செல்ல வேண்டும்' என்ற கொள்கையில் மிக்கான் இந்தப் பேரரசன் மகாபாரத இதிகாசம் இந்தப் பரதன் புகழ்பாடும்.

சமணச் சான்றோர்களால் மதிக்கப்படுகின்ற பரதன் ஒருவன் உண்டு. அவனைப்பரதசக்கரவர்த்தி என்றே கூறுவர். 'பாங்குயர் பருதிவேல் பரதன்' என்று, இந்தச் சக்கரவர்த்தியைக் குறிப்பிடுகின்றது 'சூளாமணி' (397) என்ற சமண சமயக் காப்பியம். இவனும் நம் நாட்டை நன்கு ஆண்ட அரசர்களுள் ஒருவன்.

மற்றொருவர் பாகவதப் பெருநூலுள் கூறப்படுபவர். இவர் 'ஜட பரதர்' எனப்படுவார், இவர் பெரிய ஞானி. இவர், மண்ணுலக நாட்டை ஆளும் ஆசையை வெறுத்து, விண்ணுலக நாட்டை விரும்பி வாழ்ந்தவர். ஆசை, ஆத்ம ஞான வளர்ச்சிக்குப் பெருந் தடையாகத்தான் அமையும் என்ற கொள்கையர் இவர்.

**இராமாயணப் பரதன்:**

இந்தப் பரதர்களது முப்பெருங் கொள்கைகளையும் ஒரு சேரத் தனது வாழ்க்கையில் கடைப்பிடித்து வாழ்ந்து விளங்கிய பரதன் ஒருவன் உண்டு இந்தப் பரத நம்பியே, இந்நூலின் கதாநாயகன். ஏன் கதாநாயகன்?

இந்தப் பரதவள்ளல், 'கோசல நாட்டை ஆளும் தகுதியும் திறமையும் உரிமையும் உடையவன் தான்,' இராமபிரான் என்று உணர்ந்தவன்: அதற்கேற்பச் செயல்பட்டவன்: தானாக வந்த அரச உரிமையை, 'தீவினை என்ன' நீத்தவன்; ஆனால், தனது தெய்வமாக விளங்கும் இராமபிரானது அன்பு ஆணைக்குக் கட்டுப்பட்டு அரசுப் பொறுப்பையும் ஏற்றவன்.

முப்பெரும் பரதர்களது சீரிய கொள்கைகளையும் தன்னுள் அமைத்துக் கொண்டவனாய் வாழ்ந்து விளங்கிய பரதன் தானே யாவரினும்உயர்ந்தவனாவான்! இவன் தான், ஒன்றாக உலகத்து உயர்ந்த புகழினனாகத் தோன்றியவன். புகழொடு தோன்றியவன் தானே கதாநாயகனாகலாம்! இவன் புகழ்பாடும் காப்பியம் இராமாயணம்.

இராமாயணப்பரதன், ஆசையையும் வெறுத்தான்: அரசையும் ஆண்டான் எதனால்? இந்தியங்களை அவித்த ஞானி அவன். ஆசையின் வெறுப்பும், அரசாட்சியின் இருப்பும் ஒன்றுக்கு ஒன்று முரணானது. ஆயினும், இரண்டையும் ஒன்றாக இணைத்துக் கொண்டு வாழ்ந்து காட்டிய உத்தமன் இந்தப் பரதநம்பி. முடிசூடிக்கொண்டு ஆளவேண்டிய அரசை (இறைவன்) அடியைத் தலையில் சூடிக் கொண்டு ஆண்டதால்தான், இந்த முரண்பாடு பரதனிடம் அணுகாததாயிற்று. அரச முடி, அகங்காரத்தை வளர்க்கும்; ஆண்டவன் (திரு) அடி, வரும் அகங்காரத்தை வராதபடி தடுக்கும். இதனை உணர்ந்தும், உணர்ந்த வண்ணமே செயல்பட்டும் வாழ்ந்தவன் இந்தப் பரதவள்ளல். அதனால் அரச வாழ்விலும் வெற்றிகண்டான்: ஞானம்-பக்தி வாழ்விலும் வெற்றி கண்டான்.

**வாகை:**

இந்த வெற்றியை வாகைத்திணையுள் அடக்கும் தொல்காப்பியம். வாகைத் (வெற்றி) திணைகளின் வகைகளைத் தொகுத்துக் கூறும் தொல்காப்பியச் சூத்திரம் ஒன்றில் 'காட்டில் நீத்த பாலினானும்' என்ற இலக்கணத் தொடர் வருகின்றது, + இதற்கு உரை கூற வந்த நச்சினார்க்கினியர், 'அரசன் அரச உரிமையைக் கைவிட்ட பகுதியானும்', என்று உரை எழுதி, 'அது பரதனும் பார்த்தனும் போல்வார் அரசு துறந்த வெற்றி' என்று விளக்கம் கொடுப்பார் இதற்கு. மேற்கோளாகக் கொடுக்கப்பட்டுள்ள சங்க கால இராமாயணப் பாடல் ஒன்று. பரதனின் தூய செயலை நன்கு தெளிவாக்குகிறது.

**'கடலும் மலையும் நேர்படக் கிடந்த**
**மண்ணக வளாகம் நுண்வெயில் துகளினும்**
**நொய்தால் அல்ல தானே! இஃதுஎவன்**
**குறித்தனன் நெடியான் கொல்லோ? மொய்தவ**
**வாங்குசிலை இராமன்தம்பி ஆங்கவன்**
**அடிபொறை ஆற்றின் அல்லது**

+ புறத்திணை இயல் 76. நெடியான்—பரதன்

முடிபொறை ஆற்றலன் படிபொறை குறித்தே.'

இஃது, அரசு கட்டில் நீத்தபால். 'சிங்காதனம் துறத்தல்' என்று விளக்கம் தருகின்றார் பேராசிரியர். திரு. மு. இராகவ அய்யங்கார் அவர்கள்.

திருவடி என்பது என்ன? 'யான் எனது என்பது அற்ற இடமே திருவடியாம்' என்று கந்தர் கலி வெண்பா, திருவடிக்கு விளக்கம் தருகின்றது

திருவடியின் ஆட்சி என்றால். யான், எனது என்ற அகங்காரமமகாரங்கள் இல்லாத ஆட்சி என்று பொருள். பரதன், எந்தப் பதவிச் செருக்கும் இல்லாமல், இராம பக்தனாய், ஞானியாய் கோசல நாட்டை ஆண்டு வந்தான். இந்த ஆட்சியைப் பரதன் ஏன் ஏற்றான்? ஏற்பதற்குரிய சூழ்நிலை என்ன? அது எவ்வாறு உருவாயிற்று? உருவாகிய சூழ்நிலை அவனது அரும் பெருங்குணங்களை எவ்வகையில் வெளிப்படுத்தியது? வெளிப்பட்ட குணங்களின் பெருமையைக் கண்டவர்கள் அப்பெருமகனை எந்தெந்த முறைகளின் வாழ்த்தினர்? புகழ்மொழிகள் அனைத்தும் தாமே தன்னைத் தேடி வந்து சேருமாறு, அப் பெருமகன் செய்த செயல்கள் யாவை? **அடி தாங்கும் அரசாக** வாழ்ந்த இந்தப் பரத நம்பியின் அருஞ் செயல்கள், மக்களின் நல்வாழ்வுக்கு எவ்வாறு உதவுகின்றன? என்பவை பற்றி எல்லாம் ஆய்வு செய்வது இந்நூல்.

**இது ஏன்?**

நூல்களைக் கற்கவேண்டிய முறைகள் இரண்டு ஒன்று. நூல் தோன்றிய காலத்துக்கே, மானசீகமாகச் சென்று, அந்தக் காலச் சூழ்நிலைகளோடு, மனத்தை ஒன்ற வைத்துக்கற்று ரசிப்பது. மற்றொரு முறை, அந்த நூலில் சொல்லப்பட்ட கருத்துக்களை நமது காலத்துச் சூழ்நிலைகளுடன் இணைத்துப் பார்த்து, அது, நமக்கு எவ்வாறு பயன்படுகின்றது என்று உணர்வுடன் கற்பது.

கற்கும் முறையில் இரண்டாவதாக அமைந்தது தான், மக்களை வளம் பெற வாழச் செய்வது: நல முற வாழவைப்பது: பயன் படவும் பொலிவு பெறவும் விளங்கவைப்பது. இப்படி மக்களை உயர்நிலைக்கு அழைத்துச் செல்லும் முறையில் கற்கப்படும் நூலே வாழ்க்கை நூல் எனப்படும். அத்தகைய வாழ்க்கை நூலாக அமைந்த ஒன்று உண்டு என்றால், அது, கவிச்சக்கரவர்த்திகம்பன்பாடியருளிய இராமாவதாரக் காப்பியமே.

இந்தக் காப்பியந்தான், பல்வேறுபட்ட போக்குகளையும் நோக்குகளையும் கொண்ட வாழ்க்கையினராய மாந்தர்களைக் கதாப்பாத்திரங்களாகக் கொண்டுள்ளது. அதனால், மக்கள் எந்தத் துறை வாழ்வினராக யிருந்தாலும், அவர் இந்தக்காப்பியத்தைத் தம் காலச் சூழ்நிலையோடு இணைத்துக் கொண்டு கற்றால், தமது வாழ்க்கையைத்திருத்திக் கொள்ளலாம்: உயர்த்திக் கொள்ளலாம்.

இன்றைய காலப் போக்கில், மக்களது வாழ்வு, வளம் நிறைந்ததாக உள்ளதா! நலம் பெற்றதாக உள்ளதா? இப்படி ஒரு கேள்வி கேட்டுப் பார்த்தால் அதற்கு என்ன பதில் வரும். பொதுவாக, 'உடல் வளமும் இல்லை: உள நலமும் இல்லை' என்ற பதில் தான் வரும். வாழ்க்கைக்கு இன்றியமையாத இந்த இரண்டன் இன்மைக்குக் காரணம் என்ன?

பெரும்பான்மையான மக்கள் உள்ளத்தில் புகுந்த பேராசைப் பேய்தான்; நாட்டின் வளத்தையும் நலத்தையும் சாகடித்துக் கொண்டுள்ளது. இந்த ஆசைப் பேய், மனிதனது தன்னலத்தை அடிப்படையாக்கிக் கொண்டு. உள்ளத்தில் வேரூன்றிக் கொண்டு விட்டது. இந்தப் பேய், யாரையும் இன்று விட்டுவைக்கவில்லை. தொண்டர் முதல் தலைவர் வரை எல்லோரும் இந்தப் பேராசைப் பேய்க்கு ஆட்பட்டவர்களே.

பேயால் பீடிக்கப்பட்டவர்கள் பேசுவது அத்தனையும், வெறும் பிதற்றல்களாகத்தான் இருக்கும் அந்தப் பிதற்றலைக் கொண்டு, அவரைப் பிணித்திருக்கும் ஆசைப் பேய் எந்த வகையைச் சேர்ந்தது என்பதைக் கண்டறியலாம். பணம், பதவி, காமம், புலன் இன்பம், அறிவை அழிக்கும் போகம் முதலிய பல உருவங்களில் அந்த ஆசைப் பேய் தலை விரித்தாடுகின்றது நாட்டில். பிதற்றல், தனது உண்மை உருவத்தை வெளிப்படுத்திவிடும்.

ஆனால், இன்று மிகப் பெரும்பான்மையான மக்களை ஆட்டிப் படைத்துக் கொண்டிருப்பது பதவி ஆசைப் பேய்தான் பதவி என்ற ஒன்று பெற்றுவிட்டால், பிற எல்லாவற்றையும் பெற்றுக் கொண்டுவிடலாம்என்றதுணிவினால்தான்,பதவியை நோக்கி ஓடிக் கொண்டுள்ளார்கள் இன்றையமக்கள் ஓட்டத்தின் பயன் என்ன என்று கேட்டால், நிலையான பயன்கள் அத்தனையையும் இழந்து நிற்பது தான்!

இன்றைய மனிதன் நினைப்பதோ, தன் புகழ் பற்றிய வேட்டை: வாரி இரைப்பதோ வெறும் பொய்க் குற்றச் சாட்டை: கட்டுவதோ மிகமிக இழி செயல் கோட்டை. நினைத்தல்,சொல்லுதல்,செய்தல் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டவைகளே. மேலிடம் முதல் கீழிடம் வரை—தலைவர் முதல் தொண்டர் வரை அனைவருமே இப்படிப்பட்ட வாழ்க்கையினராகயிருந்தால், நாடு வளமும் நலமும் பெறுவது எப்படி?

நம் நாடு, வளமும் நலமும் நிரம்பப் பெறவேண்டுமே' என்ற தேசிய உணர்வின் உந்துதலால் உருவானதுதான் இந்த நூல். இதன் கதாநாயகனான பரதனது வாழ்க்கையை ஊன்றிக் கற்றால் போதும், தனி மனித வாழ்வும் சிறக்கும்: பொது வாழ்வும் உயரும்.

பரதனது வாழ்க்கையைக் கற்றவர்கள் கண்ட வர்கள் தம் வாழ்க்கையில் சிறப்புப் பெற்றது உண்டா உயர்வு அடைந்தது உண்டா? உண்டு.

**இளங்கோவடிகள்:**

சேரநாடு: வஞ்சிமாநகர்: அரண்மனை: அத்தாணிமண்டபம். அங்கு, அரசன் நெடுஞ்சேரலாதன் அரியாசனத்தில் அமர்ந்திருக்கின்றான். அரசனுடைய மக்கள் இருவரும் பக்கத்தில் அமர்ந்துள்ளனர். அந்த ஒரு நாள் (ஒப்பற்றநாள்) கணியன் (சோதிடன்) ஒருவன் அவைக்கு வந்தான். வந்ததும், சகோதரர் இருவரது திருமுகங்களையும் கவனித்தான். கவனித்ததும் அவன் கணிப்பாக ஒரு செய்தியைச் சொன்னான் அரசனைப் பார்த்து. அச்செய்தி அவையுள் இருந்த அனைவரையும் திகைப்பில் ஆழ்த்தியது. அனைவரையும் திகைக்க வைத்த செய்தி என்ன? இளைய சகோதரனுக்குத்தான், "அரசை வீற்றிருக்கும் திருப்பொறி உண்டு" என்பதுதான் கணியன் கணித்துச் சொன்ன செய்தி, 'அரச பதவி ஏற்க வேண்டும்' என்றசெய்தி, நன்மை தரும்செய்தியாகத் தோற்றவில்லை இளைய சகோதரனுக்கு. அதனால், உடனே, அப்பொழுதே, அந்த அவையை விட்டு அகன்றான் இளைஞன். அகன்றதும் தூய துறவுக் கோலம் பூண்டான். தூய்மை தவழும் தவக் கோலத்துடன்,

> 'குணவாயிற் கோட்டத்து அரசுதுறந்து இருந்த
> குடக்கோச் சேரல் இளங்கோ அடிகள்'

ஆக உயர்வும், சிறப்பும் பெற்றான் அந்த அருமைத் திருத்தம்பி.

கோசல நாட்டு, அயோத்தி மாநகர்த் தம்பி, தனக்கு வந்த அரசைத் துறந்து, பரதாழ்வானாக உயர்வு பெற்றான். சேரநாட்டு வஞ்சிமாநகர்த் தம்பி இளங்கோவடிகளாகச் சிறப்புப் பெற்றான். இளங்கோவடிகளுக்கு. இராமகாதைப் பரதன் முன்மாதிரியாக அமைந்துள்ளான்' என்பதை இதன் மூலம் உணரலாம்.

இளங்கோவடிகள், இராமகாதையை நன்கு உணர்ந்தவர் என்பதைத் தமது சிலப்பதிகாரக் காப்பியத்தில் ஆங்காங்குக் காட்டியுள்ளார்.

சிலப்பதிகாரக் காப்பியத்தலைவன் கோவலன், தனது சொந்த ஊராகிய புகாரை விட்டு வெளியில் வந்து விட்டான். அவன் சென்ற பிறகு, அந்தப் புகார் நகரம் எப்படிப் பொலிவு இழந்து கிடந்தது என்பதைக் காட்டுவதற்கு, இராமாயண நிகழ்ச்சி ஒன்று உவமையாக்கப் பட்டுள்ளது. மாதவியால் அனுப்பப்பட்ட கௌசிகன் வாயிலாக வருகின்றது இந்த உவமை.

'அரசே தஞ்சம் என்று அருங்கான் அடைந்த
அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்
பெரும்பெயர் மூதூர்ப் பெரும்பேது உற்றது.'+

கோவலன் பிரிந்த பிறகு புகார் நகரமக்கள் அடைந்த துன்பத்துக்கு, இராமபிரான் பிரிந்த பிறகு அயோத்தி நகர மக்கள் அடைந்த துன்பத்தை உவமையாக்கியுள்ளார் இளங்கோவடிகள்.

மேலும், கோவலன் அடைந்த துன்பவாழ்வுக்கு ஆறுதல் கூறவந்த கௌந்தி அடிகளும் இராமாயண நிகழ்ச்சியைத் தான் எடுத்துக் கூறுகின்றார்.

'தாதை ஏவலின் மாதுடன் போகி,
காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்
வேத முதல்வற் பயந்தோன் என்பது
நீ அறிந் திலையோ நெடுமொழி அன்றோ?'—

அதற்குமேலும், ஆய்ச்சியர் குரவையில்,

'மூவுலகும் ஈரடியான் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடும் கான்போந்து,
சோவரணும் போர் மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவிஎன்ன செவியே'

என்று இராமாயணம் பேசப்படுகின்றது. இவை எல்லாம், இளங்கோவடிகள் இராம காதையில் எவ்வளவு ஈடுபட்டிருந்தார் என்பதைக் காட்டு கின்றன.

---

+ சிலப்பதிகாரம்: மதுரை: புறஞ்சேரி -64-66, அருந்திறல்— இராமன்.
— ஊர்காண் காதை 46-49.

**மற்றொரு எடுத்துக்காட்டு:**

இராமகாதையால் திருந்தியவாழ்க்கையினரான சகோதரர்களைப் பாண்டிய நாட்டிலும் காணலாம். வரதுங்கராம பாண்டியனும், அதி வீரராமபாண்டியனும் சகோதரர்கள். இருவர்களும் நன்கு கற்றவர்கள்: நல்ல கவிஞர்கள். வரதுங்கன் கரிவலம் வந்த நல்லூரைத் தலைநகராக்கிக் கொண்டு அரசாண்டான். அதி வீரராமபாண்டியனுக்குத் தென்காசி, தலைநகர் 'திருக்கருவைப்பதிற்றுப் பத்து அந்தாதி' (குட்டித் திருவாசகம்) முதலிய பக்தி நூல்களை இயற்றியவன் அண்ணன் வரதுங்கன். 'நைடதம்' என்ற சிறந்த இலக்கிய நூலாசிரியன் அதி வீரராமபாண்டியன்.

நூல்பலகற்றிருந்தும், நூல்பல இயற்றியும் பக்தர்களாக வாழ்ந்தும் உலக ஆசையை அவர்களால் வெல்ல முடியவில்லை. அதனால் ஒருவர் மேல் ஒருவர் போர் தொடுக்க முற்பட்டனர் இவர்களை நல்வழிப்படுத்த எண்ணினார் இவர்களது தாயார். உடனே, இராமகாதைச் சகோதரர்களது, நிலையை எடுத்துக் காட்டும் ஒரு பாடலை எழுதி, இளையவன் அதிவீரராம பாண்டியனுக்கு அனுப்பி வைத்தார், அப்பாடல் இது:

'செஞ்சுடரோன் மைந்தனையும் தென்னிலங்கை வேந்தனையும்
பஞ்சவரில் பார்த்தனையும் பாராதே-விஞ்சும்
விரதமே பூண்டிருந்த மேதினியை ஆண்ட
பரதனையும் இராமனையும் பார்.'

என்ற இந்தப்பாடல் தம்பி அதிவீரராமபாண்டியனுக்கு அனுப்பப்பட்டது. பாடலின் பொருளைக் கண்டான் தம்பி. உடனே போர்ச் செயலை நிறுத்திவிட்டு அண்ணனிடம் ஓடினான்: பிழைக்கு மன்னிப்பு கேட்டான். அண்ணன், வரதுங்கனும் தன் பிழைஉணர்ந்து தம்பியை அணைத்துக் கொண்டான். இராமாயணச் சகோதரர்களாயினர் பாண்டி நாட்டுச் சகோதரர் இருவரும்.

பன்னரும் பெரும் புகழ்ப் பரதனது வாழ்க்கை நிகழ்ச்சி, அரச பதவியில் இருப்பவரையும், அப் பதவியை நாடிக் கொண்டிருப்பவரையும் நல்வழிப் படுத்தும் என்பதை இதன் மூலம் உணரலாம்.

இராமகாதை பரவிய நாட்டில் பதவிப் போர் நிகழக் கூடாது. இந்தப் புண்ணியக் கதை பரவாத இடத்தில் பதவி வெறி. சொந்தத் தந்தையையே சிறையில் அடைத்துக் கொல்லச் செய்யும்: சொந்த சகோதரனையே கண்ட துண்டமாகவெட்டிச்சிதைக் கச் செய்யும்: உற்றார் உறவினர்களது கண்களையும் பறிக்கச் செய்யும். இத்தனை வன்முறைகளையும் நிகழ்த்துவது அரச பதவி வெறி. அந்த வெறியை நெறிப்படுத்தி, தனி மனிதனை உயர்த்துவதும், நாட்டை வளம் பெறச் செய்வதும் இந்த இராம காதைதான். அதிலும், குறிப்பாக, சிறப்பாக, பொது வாழ்வினர்க்கு வழிகாட்டுபவன் பரத நம்பியே ஆவான்.

**'திறமார் பரதன் சிறப்பறியா வேந்தர்**
**உறவினனைச் சாய்ப்பர் உவந்து,'**
**'பதவிப் பெரும்பித்தம் பாரில் தொலைய**
**உதவிடும் இந்நூல் உகந்து.'**

**நன்றி**:

இந்நூலை, நாமக்கல் கம்பன் கழகம் 32வது ஆண்டு விழாவில் வெளியீடு செய்ய அனுமதியளித்த தலைவர் திரு. R. சுந்தரராஜு ரெட்டியார் உள்ளிட்ட உறுப்பினர் அனைவர்க்கும் எனது மனமார்ந்த நன்றி

இதனைக் குறிப்பிட்ட காலத்திற்குள் அழகுற அச்சிட்டுக் கொடுத்த, சன்-மூன் அச்சகத்தார் திரு. எஸ். சண்முகம் அவர்களுக்கு வாழ்த்துடன் கூடிய நன்றி.

**நிறைவு**:

'இந்நூலால் நான் வளமும் நலமும் பெற்றேன்' என யாராவது தெரிவித்தால், அவர்வாழும் திசை நோக்கித் தொழுது நன்றி உணர்வுடன் மகிழ்வேன்.

இராசிபுரம்,

அன்புள்ள அடியேன்.

**ம. இராமசாமி**

ஸ்ரீ:

# சமர்ப்பணம்

சுந்தர மறையையும் தூயயாழ் இசையையும்
சிந்துர வதனத் திருமகள் மொழியையும்
கேளாது ஒதுக்கிக் கிளர்ச்சியிற் கேட்டிட
நாளார் மறையை நயமுறத் தந்த
நவமுறும் கோதையின் நல்அமி சத்தால்
அவதரித் திட்ட அற்புத அம்மையார்;
இந்து மதத்தின் இடரைக் களைந்து
நந்தலில் வாழ்வை நயந்து வழங்கிய
தேவ ராயர் சிறப்புறப் பாடி
நாவலர்க்கு அளித்த நற்பெயர்க் கதையையும்,
அணிமே கலையார் ஆயத்து ஏத்தும்
மணிமே கலையார் மாண்புறு துறவையும்,
சந்தனத் தமிழால் செந்தழல் மூட்டி
இந்தியர் தாழ்ச்சியை எரித்த பாரதி
ஓங்கிய உணர்வில் உதித்தசெஞ் சுடரையும்
ஆங்கில மொழியில் அமைத்த அம்மையார்;
நலம்அமை பன்மொழி நயமுறக் கற்றதால்
புலமை வடிவாய்ப் பொலியும் அம்மையார்;
சிறியபுன் கடுகையும் சீரிய ஆசியால்
அரியமா மலையாய் ஆக்கும் அம்மையார்;
புலமையால் அடக்கம் பொலிவுறப் பெற்ற
நலம்அமை தந்தையார் நற்றிரு வுளத்திலும்,
நன்னயக் கண்ணன் நற்றிரு வருள் உணர்
அன்னையின் உளத்திலும், அரும்பெறல் உவகை
வளர்ந்திடப் பண்புடன் வளரும் அம்மையார்:

அன்புறு **பிரேமா நந்தகுமார்** எனும்
மன்புகழ் பெற்ற மாண்புறு அம்மையார்
தாமரைப் பதத்தில் சமர்ப்பணம் இந்நூல்
ஆம்லை வழங்கினேன் அடியேன் மகிழ்ந்தே.

# இராம ஜெயத் திருப்புகழ்

**பரதன் புகழ்:**

சருக்கரைஉ ணாதுவி டத்தினை
விருப்புறுவ ரோ? நிழல் விட்டெரி
தனிற்புகுவ ரோ? மலர் மெத்தையின் மருவாதே

தரைப்புரள்வ ரோ? நகர் கைத்தொரு
வனத்தடைவ ரோ? முடி வைத்துமொய்
சடைப்படுவ ரோ? மரு நற்றொடை புனையாதே

எருக்கணிவ ரோ? துகில் பற்றற
உடுத்திடுவ ரோ? விடு தொக்கினை
இரப்புறுவ ரோ? திரு வைத்தினி உயிர்போல

இருக்குமுனை நாடுத லற்றினி
இழுக்குடைய தேவர்த மைத்தொழு
திடர்ப்படுவ ரோ? வறி வுற்றவர் அருள்வாயே

உரைத்ததொரு வாய்மையி னிற்பது
நினைத்தழுக ணீரும டக்கமும்
உடுத்ததொரு சீரையு முற்றிரை நகர்சேரா

உரைத்தெளிவு நீடிய தெற்குறு
முகப்பொலிவு மீரெழு வற்சரம்
உறக்கமறு கோலமு நிட்டையும் உளனாகித்

திருச்சரண **பாதுகை** யைத்தினம்
முடித்தவபி டேகமெ னக்கொடு
சிறப்புடைய வேணித ரித்துயிர் விடுமாறு

செழித்தகனல் மூழ்கவொ ருப்படும்
அருட் **பரதனானவ** னுக்கொரு
திருத்தமைய னாகவ திக்கருள் பெருமாளே.

ஸ்ரீ :

அடித்தலம் இரண்டையும், அழுத கண்ணினான்,
'முடித்தலம் இவை' என, முறையின் சூடினான்
படித்தலத்து இறைஞ்சினன், பரதன் போயினான்
பொடித்தலம் இலங்குறு பொலம்கொள் மேனியான்

ஸ்ரீ :

(1)

# தலைமைப் பாத்திரம்

**முதன்மை :**

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு."

உலகிற்கு முதன்மையாகயிருப்பவர் யார் என்பதை வள்ளுவப் பெருந்தகையார் தமது முதல் குறளிலேயே தெரிவிக்கின்றார். அவர், உலக மக்களுக்கு மெய்ந்நெறி காட்ட வந்த ஞானப் பெருவள்ளல் அல்லவா?

ஆதிபகவன் தான், உலகின் முதன்மையாளன்: தலைமையாளன்: இந்த உண்மையை, 'உலகம், இறைவனை முதன்மையாக— தலைமையாக உடையது' என்று. முதன்மைக் குறள் அழகுபடக் கூறுகின்றது.

இறைவனது உலகத் தலைமை. இயல்பானது நிலையானது; நித்தியமானது ஆகும். இது, ஒருவர் கொடுக்க ஒருவர் பெறும் உலகியல் வாழ்வுத் தலைமை போன்றது அன்று, அநாதியானது. அமைவது எதனால்?

இறைவன் தானான தன்மையனாய் தனித்தும் நிற்கின்றான்; எல்லாப் பொருள்களோடும், இரண்டறக்கலந்தும் கிடக்கின்றான், அசையும் பொருள், அசையாப் பொருள் அனைத்திலும் அடங்கி இருப்பவன் அவன்.

'அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது, என்ற பேருண்மைக்கு நிலைக்களனாக யிருப்பதால், இறைவன் உலகத்தலைவனாக விளங்குகின்றான், இந்த மெய்ஞ்ஞான உண்மையை ஒரு உவமையின் மூலம் விளக்கு கின்றது இத்திருக்குறள்.

'அ' என்ற எழுத்து, தனித்தும் இருக்கின் றது: எல்லா எழுத்துக்களோடும் கலந்தும் கிடக்கின்றது. உயிர் எழுத்து. மெய்யெழுத்து எதுவாகயிருந்தாலும் 'அ' என்ற எழுத்தின் ஒலி இல்லாமல் இயங்க முடியாது. ஆனால். இது, வெளியில் தெரியாது. வெளியில் தெரிவது, வரி வடிவம்.

வரி வடிவு, அந்தந்த எழுத்துக்களுக்கு உரியதுதான். ஒலி வடிவில் தான், அகரத்தின் ஒலி கலக்கும். 'மெய்யின் இயக்கம் அகர மொடு சிவனும்' என்பது தொல்காப்பியம் கூறும் எழுத்து இலக்கணம். இலக்கண அறிவு, அகரம், எழுத்துக்களுக்கு எல்லாம் முதன்மை யாகயிருப்பதை—தலைமை பெற்று விளங்கு வதைத் தெளிவுபடுத்தும்.

மெய்ஞ்ஞான அறிவு, உலகத்துக்குத் தலைவனாக, இறைவன் விளங்குவதை உணர்த்தும்.

தமிழ் எழுத்துக்கள் எதுவாயினும், அது, ஒலிவடிவம் பெறுவதற்கு, அகரத்தின் ஒலி இன்றியமையாதது, அது போன்று, உலகப் பொருள்கள் எதுவாயினும், அதன் இயக்கத் துக்கு இறைத்தன்மையின் கலப்பு இன்றியமை யாததாகும்.

**திருவள்ளுவர் :**

இவ்வாறு, உலகப் பேருண்மையை உணர்த்திய திருவள்ளுவரும், தமிழ் எழுத்துக்களுள் அகரம் முதன்மை பெற்று விளங்குவது போன்றும், இறைவன் உலகத்தலைவனாக விளங்குவது போன்றும், கவிஞர் உலகில், முதல்வராகவிளங்குகின்றார்-என்றுசொல்லலாம்

**திருக்குறள் :**

திருக்குறள் என்ற அற நூலின் மூலம் தனித்து நின்றும் குறளின் கருத்துக்கள் பிற தமிழ் இலக்கியங்களில் கலந்து கிடப்பதால், ஏனைய தமிழ்க் கவிஞர்களோடு இணைந்து நின்றும் வாழ்கின்றார் வள்ளுவ ஆசான். தமிழ் இலக்கியங்கள் எதுவானாலும் அது திருக்குறளின் உயரிய கருத்தை உள்ளடக்கிக் கொண்டுதான் இலக்கிய உலகில் உலாவிக் கொண்டிருக்கும். திருக்குறளின் கருத்து கலவாத இலக்கியம், உயிரோட்டம் அற்ற ஒன்றாகத்தான் இருக்கும். தமிழ் இலக்கிய உயிரோட்டத்துக்கு அவ்வளவு இன்றியமையாத தாகும் திருக்குறளின்கருத்து வளம். அதனால், எழுத்துக்களுள் அகரம் போன்றும், உலகில் இறைவன்-தெய்வம் போன்றும், தமிழ்க்கவிஞர் உலகில் தலைமை பெற்ற தெய்வமாக விளங்கு கின்றார் திருவள்ளுவர் என்று துணிந்து கூறலாம்.

**தெய்வமாக் கவி:**

இத்தகைய தலைமைக் கவிஞர் பெருமானிடம் ஆராக்காதல் கொண்ட புலவர் பெருமக்கள் பலப்பலர் ஆவர். அவர்களுள் ஒரு மாபெருங் கவிஞன், இவரைத் 'தெய்வமாக்கவி. என்றே போற்றிப் புகழ்கின்றான். இந்தத் தெய்வமாக்கவிஞரோடு, தன்னை இணைத்துக்

கொண்டதால், இவரது மாட்சிமையைத் தெரிவிப்பதற்காகவே, தான், ஒரு காவியம் செய்வதாகக் கூறுகின்றான் அப்பெருங்கவிஞன்.

அவன் தான், கலை உலகச்சிற்பியாக விளங்கும் கவிச்சக்கரவர்த்தி கம்பன்.

**"ஆசை பற்றி அறையலுற்றேன்—மற்று இக்
காசுஇல் கொற்றத்து இராமன் கதைஅரோ'
எதற்கு ?
பொய்யில் கேள்விப் புலமையினோர் புகல்
தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே."**

என்பது, கவிச்சக்கரவர்த்தி உள்ளத்து உதித்து வந்த உணர்வுக் கூற்று.

திருவள்ளுவர் எப்படிக் கவிஞர் உலகில் தலைமை பெற்று விளங்குகின்றாரோ, அதே போன்று, அந்தத் தெய்வமாக் கவிஞரின் பக்தனான கம்பனும் காவிய உலகில் தலைமை பெற்றுத் திகழ்கின்றான்.

கவிச்சக்கரவர்த்தியும், தனது காப்பியத்தின் மூலம் தனித்தும், பிற இலக்கியங்களில் கம்பராமாயணக் கருத்துக்கள் கலந்திருப்பதால் ஏனைய கவிஞர்களோடு இணைந்தும் வாழ்கின்றான். அதனால் கம்பனும் ஒரு தெய்வமாக்கவியே என்னலாம்.

**கதி :**

இந்த உண்மையை நன்கு இலக்கியத் திறனாய்வு கொண்டு உணர்ந்தவர் ஒருவர் உண்டு. அவர், திருக்குறளையும், கம்பன் காப்பியத்தையும் எழுத்தெண்ணிக்கற்று, இரு நூல்களின் ஒற்றுமையை நன்கு தெளிந்த தமிழ்ப் பேரறிஞர் ஆவார். அவர்தான், திருமணம் செல்வக்கேசவராய முதலியார் என்ற திருநாமத்தினராவர். 'தமிழுக்குக் கதி' யாவர்

இருவர். அவர் கம்பரும் திருவள்ளுவரும் ஆவர், என்பது முதலியாரின் திறனாய்வு நல்லுரையாகும்.

**இலக்கணமும் இலக்கியமும்:**

தமிழுக்குக் 'கதி' யான இருவருள் ஒருவர் அருளியது மக்களின் வாழ்க்கை இலக்கண நூல் வையத்து வாழ்வாங்கு வாழ்வதற்குரிய வழிகளை வகுத்துக் காட்டும் இலக்கண நூலாக அமைந்தது திருக்குறள். அந்த வாழ்க்கை இலக்கணத்தை நடைமுறைப்படுத்திக் காட்டும் வகையில், ஒரு இலக்கிய நூலாக, இராமாவதாரக்காப்பியத்தை இயற்றினான் கவிச்சக்கரவர்த்தி கம்பன்.

கம்பனது காப்பியம், மானுடத்தின் வெற்றியைப் பாடுகின்றது. அந்த வெற்றி வள்ளுவர் வகுத்த வாழ்க்கை இலக்கணத்தை அடிப்படையாகக் கொண்டது. மக்கள் வாழ்க்கை பல் வேறுபட்ட அமைப்புகளைக் கொண்டதாகும். அவ்வளவு அமைப்புக்களுக்கும் திருக்குறளில் இலக்கணம் உண்டு. அவ்வளவு, வாழ்க்கை அமைப்புக்களையும் நடைமுறைப் படுத்திக் காட்டும் இலக்கியப் பாத்திரங்களைப் பெற்றிருக்கின்றது கம்பராமாயணம்.

**பாத்திரங்கள்:**

அரசர், அமைச்சர், அந்தணர், வணிகர், வேளாளர் என்ற தொழில் வேறுபாட்டாலும், தந்தை, தாய், மகன், சகோதரர், கணவன் மனைவி என்ற உறவு முறையாலும் பல் வகை வாழ்க்கையினராக வாழ்கின்றனர் மக்கள். அவ்வளவு வாழ்க்கையினரையும், கவிச்சக்கரவர்த்தி, தனது காப்பியத்துள் பாத்திரங்களாகப் படைத்துக்காட்டியுள்ளான். கம்பனது கலைத்திறனை வெளிப்படுத்திக் கொண்டு வரும் காப்பியப் பாத்திரங்கள் ஒவ்வொன்றும் கற்பார் நெஞ்சில் அப்படியே தங்கிக் கொள்ளும்.

கவிச்சக்கரவர்த்தியின் மகோன்னதமான படைப்புக்களாகிய பாத்திரங்களை, நான்கு வகையாகப்பிரித்துப்பார்க்கலாம். காப்பியத்தின் தொடக்கம் முதல் இறுதிவரை உலாவிவரும் தலைமைப்பாத்திரம்; அதன் இயக்கத்துக்கு உதவியாகச் செயல்படும் துணைப் பாத்திரம்: நடுவில்வந்து நடுவிலேயை வெளியேறிவிடும் சிறுபாத்திரம்: கிளைக்கதைகளில் இயக்கம் பெறும் கிளைக்கதைப் பாத்திரம்: என்பன அந்த நான்கு வகைகள்.

மற்றொரு நோக்கில் இவைகளைக் கணித்துப் பார்த்தால், உடன்பாட்டுப் பாத்திரம் எதிர்மறைப் பாத்திரம் என்ற இரண்டு அமைப்பில் அவைகளைக் காணலாம்.

"அறம் வெல்லவும்: பாவம் தோற்கவும்' செயல்படுபவைகள் உடன்பாட்டுப்பாத்திரங்கள். இந்த நற்செயலுக்கு தடையாக இயங்குபவைகள் எதிர்மறைப் பாத்திரங்களாகும்.

எந்த நிலைப் பாத்திரமாகயிருந்தாலும், அது கவிச்சக்கரவர்த்தியின் கலை வண்ணத்தை மிளிரச் செய்து, கற்பார் மனத்தைக் கவரும் வண்ணம், கவிதை உருவில் காப்பிய மேடையில் இயங்கிக்கொண்டிருக்கும்.

**தலைமைப்பாத்திரம்:**

காப்பிய நிகழ்ச்சிகளில் தனித்து நின்றும், பிற பாத்திரங்களோடு கலந்து கொண்டும் செயல்படுவது எதுவோ, அது தலைமைப் பாத்திரம்.

அத்தகைய செயல் பாட்டுக்கு உரிய தலைமைப் பாத்திரமாக, காப்பியத்துள் கவிஞனால் படைக்கப் பட்டது யார்? அவன் தான் இராமபிரான்.

அந்த இராம பிரான் யார்? 'என்னை ஆளுடைய ஐயன்' என்று கவிச்சக்கரவர்த்தி யாரைத் தனது வழிபாட்டுத் தெய்வமாகக் கொண்டானோ, அந்த நாரணன்தான் இராமபிரானாக அவதாரம் செய்தான்.

அவதார நோக்கம்,

'நாட்டில் பிறந்து, படாதனபட்டு, மனிசர்க்கா,
நாட்டை நலியும் அரக்கரை நாடித் தடிந்திட்டு,
நாட்டை அளித்து உய்யச்'' செய்வதற்கே ஆகும்.

நாராயணன், தானான நிலையில் நிற்கும் போதும், உலகப் பொருள்கள் அனைத்திலும் தங்கியும், அவைகளைத் தாங்கியும் செயல் படுகின்றான். அப்போது உலகத்தலைவன்.

அவன், இராமபிரானாக அவதாரம் செய்த பொழுது, காப்பியத்தில் இயங்கிக் கொண்டுள்ள அனைத்துப் பாத்திரங்களோடும், கலந்து கிடப்பதால், காப்பியத் தலைவனாகின்றான்.

காப்பியத் தலைவன் இராமபிரான்: காப்பியத் தலைவி சீதாபிராட்டி. இந்த இருவர்களைச் சுற்றிச் சுழன்று இயங்குவனவே ஏனைய பாத்திரங்கள் அனைத்தும் தலைமைப் பாத்திரத்தோடு ஏதேனும் ஒரு வகையில் தொடர்பு கொண்டிருந்தால்தான், பாத்திரம் காப்பியத்துள் இயக்கம் பெறமுடியும். இறைத் தொடர்பு அற்றவை எதுவாயினும் உலகில் இயங்க முடியாதல்லவா? அதுவே, காவிய உலகிற்கும் பொருந்தும்.

**துணைப் பாத்திரம் :**

உலகில் அறம் தலை நிறுத்தவந்த, காப்பியத் தலைவனான இராமபிரானது செயலுக்கு யார் ஒருவர், பக்கத் துணையாக இருக்கிறாரோ அவரே துணைப்பாத்திரம்.

அப்படிச் சிலர், கம்பராமாயணக் காப்பியத்துள் துணைப்பாத்திரங்களாகப் படைக்கப்பட்டுள்ளனர். அவர்களுள் ஒருவனை, காப்பியத் தலைவனுக்கு இணையாக உயர்வு பெறும் நிலையில் படைத்துக் காட்ட விரும்பினான் கவிச்சக்கரவர்த்தி.

அவ்விருப்பம், 'பன்னரும் பெரும்புகழ்ப் பரதன்' என்றபாத்திரமாக மலர்ந்துள்ளது காப்பியச் சோலையில்.

**பரதன் தலைமை:**

இராமபிரான், காப்பியம் முழுமைக்கும் தலைமைப் பாத்திரம்: பரதன், அயோத்தியாக் காண்டத்துக்குத் தலைமைப் பாத்திரம், கதையின் வளர்ச்சிக்கும் காப்பியத்தின் நீட்சிக்கும் உதவுவது அயோத்தியாக் காண்ட நிகழ்ச்சிகளே. சொல்லப் போனால், இராமாவதார நோக்கமாகிய இராவணவதத்துக்கு வித்திடுவதே அயோத்திக் காண்டத்தில்தான். அந்தக் காண்டத்து நிகழ்ச்சிகள் அனைத்தும் பரதனை முதன்மையாகக் கொண்டதேயாகும்.

பரதன் இன்றி, அயோத்தியாக் காண்டமே இல்லை, நிகழ்ச்சிகள் அனைத்தும் எவர் ஒருவரைச் சுற்றிச் சுழன்று நிகழ்கின்றனவோ, அவர்தானே தலைமைப் பாத்திரம். அதனால் காப்பியத்தின் இரண்டாவது பகுதியாகிய அயோத்தியாக் காண்டத்துத் தலைமைப் பாத்திரமாக விளங்குகின்றான் பரத நம்பி என்று கூறலாம்.

மேலும், இந்தக் காண்டத்துத் தலைமை, காப்பியத்துக்கு மிகமிக முக்கியமானது என்றும் சொல்லலாம். எப்படி? மனித உறவு வாழ்வில் பல்வேறு பட்ட உணர்வுகள் தோன்றுகின்றன.

அந்த உணர்வுகள் அனைத்தும் ஒன்றோடு ஒன்று ஒட்டியும் போகும்: வெட்டியும் போகும். ஒட்டிப் போதலைக் காட்டிலும் வெட்டிப் போகும் போதுதான், உணர்வுகளுக்கு வேகமும் வலிமையும் கூடுகின்றன.

வேகமும் வலிமையும் மிக்கனவாய் உணர்வுகள் தலை தூக்கிச் செயல் படும் பகுதி இந்தக் காண்டம் தான், உணர்ச்சிகள், வருத்தம், கோபம், வியப்பு. மகிழ்ச்சி முதலிய உருவில் வெளிப்பட்டு இந்தக் காண்டத்தை விறுவிறுப்புள்ளதாக அமைக்கின்றன.

அயோத்தியில் பொங்கி வழியும் உணர்ச்சிப் பெருவெள்ளம், கதையை இலங்கைவரை இழுத்துச் செல்கின்றது: காப்பியத் தலைவனை கானும் கடலும் கடந்து இமையோர் இடுக்கண் தீர்க்க இலங்கைத் தீவுக்கு அழைத்துச் செல்கின்றது.

அதனாலும். பரத நம்பியின் அயோத்தியாக் காண்டத்தலைமை சிறப்புப் பெறுகின்றது: முக்கியம் அடைகின்றது: முதன்மையாகத் திகழ்கின்றது.

**சிறப்பு:**

இந்தக் காண்டத்து நிகழ்ச்சிகள் அனைத்தும் பரதனது சிறப்பினை வெளிப்படுத்துவனவாக அமைந்துள்ளன. சிறப்பினைக் கண்டவர்கள் ஒவ்வொருவரும் பரதனைப் புகழ்கின்றார்கள். புகழாதவர்கள் யாரும் இலர் என்னலாம், வாய் திறந்து புகழாதவர் இருவர் உண்டு. அவருள் ஒருத்தி தாய் கைகேசி: மற்றொருத்தி, அவளது தோழி கூனி. இந்த இருவரும், அனைவராலும் இகழப்படுபவராயினர்.

பரதனது செயற்கரும் செயல்களின் சிறப்பினை உணர்ந்தவர்கள், அந்த நம்பியை, காப்பியத்தலைவனான இராமபிரானை விட உயர்வாக மதித்துப் புகழ்கின்றார்கள்.

புகழ்தான், ஒன்றா - (நிலையில்லாத) உலகத்தில் பொன்றாது - (அழியாது) நிற்பதாகும். அது, தானாக வந்தடைந்து பரத நம்பியை உயர்த்தியுள்ளது. இதனை உணர்ந்தவர்கள் பரதனைத் தெய்வமாகவே மதித்துப் போற்றி வழிபாடும் செய்வார்கள்.

**பரதத்தெய்வம்:**

இராமபிரான் இருக்க, பரதனைக் கடவுளாகக் கொண்டு வழிபாடு செய்தவர்கள் உண்டா? உண்டு.

கேரள மாநிலத்தில், ஒரு அரசன் முன்னிலையில் இராமாயணக் கதாப் பிரசங்கம் நடந்தது. பிரசங்கம் நடத்திய உபன்யாசகர், ஒவ்வொரு கட்டத்தையும் உணர்ச்சியோடு எடுத்துக் கூறி வந்தார். குலசேகராழ்வாரைப் போன்று, இராமாயணக்கதையை உளம் குளிரக் கேட்டு வந்தான் கேரள மன்னன். கதையில் அவன் கொண்ட ஈடுபாடு, இராமபிரானுக்குத் தனிக் கோயில் கட்டி வழிபாடு செய்ய மன்னனைத் தூண்டியது, கோயில் கட்டி முடியும் வரை, இன்னும் பல முறை இராமகதையைக் கேட்க வேண்டும் என்ற ஆர்வம் வளர்ந்தது மன்னனது உள்ளத்தில். அவ்வாறே பன்முறை இராமகதையைக் காது குளிரக் கேட்டான் அந்த அரசன். பல முறை கேட்டதன் பயன், அந்தக் கோயிலில் பரதனுக்குத் திருவுருவம் அமைத்தான் கேரள தேச மன்னன்.

பலமுறை இராமாயணம் கற்றால்தான் - கேட்டால்தான் பரதனது பெருமை விளங்கும் என்பதை இந் நிகழ்ச்சி நிரூபிக்கின்றது.

கேரள மாநிலத்தில் 'இருஞாலக்குடா' என்ற திவ்ய தேசத்தில் இந்தக் கோயில் அமைந்திருப்பதை இன்றும் காணலாம். பெரிய கோயில் தூய்மையான நீர் நிறைந்த பெரிய தெப்பக்குளம்: கண்ணைக் கவரும் அழகிய திருவுருவம். அவ்வளவும், பரதனது பெருமைக்கும், தூய உள்ளத்துக்கும், அழகுக்கும் எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றன.

இராமாயணத்தில் வரும் கதாப்பாத்திரங்களுள் அனுமனுக்குத் தனிக் கோயில்கள் உண்டு அடுத்த படியாக பரத நம்பிக்கு உண்டு. வேறு யாருக்கும் நம் பாரத தேசத்தில் தனிக் கோயில்கள் இல்லை.

## தனிக் கோயில் ஏன்?

அனுமனும் பரதனும் இராமபக்தர்கள். பக்தர்கள் இருவருக்கும், பகவானுக்குக் கோயில் அமைவது போன்று கோயில்கள் அமைந்தன போலும்! பக்தன், பகவான் ஆவானா? ஆவான்.

பகவான், நரசிம்மமாகத்தூணில் அவதரித்த போது, பக்தப் பிரகலாதனுக்கு ஆசீர்வாதம் செய்தான். எப்படி? 'நானா வளர்கநீ' என்பது நரசிம்மப் பகவானது ஆசியுரை. 'என்னைப் போலவே நீ உயர்க வளர்க' என்பது இதன் கருத்து.

அதனால், தனக்கு இணையாகப் பக்தனும் உயர வேண்டும் என்பது அந்தப் பகவானது திருவுள்ளம் என்று தெரிகின்றது. ஆகவே பக்தர்களாகிய அனுமனுக்கும் பரதனுக்கும் கோயில்கள் அமைவது பொருத்தமே.

**ஏற்றம்:**

அனுமப்பக்தனும், பரதநம்பியும் தனித் தனிக் கோயில்களில் தெய்வமாகக் காட்சி அளிப்பவர்களே ஆயினும் பரதனுக்குத் தனித்ததோர் ஏற்றம் உண்டு அந்த ஏற்றத்தை அனுமனே கண்டு வியந்து போனான். அந்த வியப்பு நிகழ்ச்சியினை இந்நூலின் இறுதி அத்தியாயத்தில் காணலாம்.

பக்தர்களுக்கு அடியார்கள் என்று பெயர். இறைவனது திருவடியைப் பற்றியவர்கள்; இறைவனுக்கு அடியவர்கள்; பகவானைத் தன்னை ஆள்பவனாகக் கொண்டும், தன்னை அவனுக்கு அடிமையாக்கிக்கொண்டும் வாழ்பவர்கள். அதனால் பக்தர்கள், அடியார்கள் எனப்பட்டனர்.

இவர்கள் மானசீகமாக இறைவன் திருவடியைத் தமது சென்னிக்கு அணியாகக்கொண்டவர்கள் அனுமனோ, இராமபிரானது திருவடியை நேராகத் தாங்கி நின்றவன். அதனால் சிறிய திருவடி எனப் போற்றப்பட்டான் அனுமப் பக்தன்.

பரதனோ, இராமபிரானது திருவடிக்கு எது, பாதுகாப்பாகயிருந்ததோ அந்தப் பாதுகையையே -அடித்தலத்தையே, தனது முடிக்கு அணியாகக் கொண்டான். அதன் மூலம், இராமபிரான் இட்ட கட்டளையை நிறைவேற்றும் பகவத் கைங்கர்ய பரனாகவும் விளங்கினான்.

இது, பரத நம்பியின் ஏற்றமாகும் இவ்வாறு ஏற்றம் பெற்று விளங்கும், பாதுகையைத் தனது

தலையில் தரித்த பரதனது தோற்றத்தை மானசீக மாகக் கண்டுகளித்தார் ஒரு வைணவ ஆசாரியார். தனது உள்ளக்களிப்பை ஒரு வடமொழிக் கிரந்தமாக வெளியிட்டார்.

**வேதாந்த தேசிகர்:**

அவர்தான், சுவாமி வேதாந்த தேசிகர் என்ற திருநாமத்தினராவார். சுவாமி தேசிகன் தெய்வ வடமொழியிலும், தேன் தமிழ் மொழியிலும் இயற்றி அருளிய நூல்கள் ஏராளம். நாடகம், சாத்திரம், தத்துவம், வைணவ சமய உண்மை, பக்தி, முதலிய பலவகைப் பிரிவினவாய் விரிந்துள்ளன. அவைகளுள் ஒன்று "ஸ்ரீ பாதுகாஸகஸ்ரம்" என்ற வடமொழிக் கிரந்தமாகும். "இது, வடமொழி இலக்கியங்களுள் மணிவிளக்காகத் திகழ்வது" என்று வடமொழிப் பேரறிஞர்கள் கூறுவார்கள்.

அத்தகைய உயர்ந்த நூல், அரங்கநாதனது திருவடியை வணங்கிச் சென்ற சுவாமி தேசிகனால் ஓரே இரவில் பாடப் பெற்றதாகும். பாடப்பெற்ற ஆசாரியராலும், காலத்தாலும், பாடு பொருளாலும் பெருஞ் சிறப்புப் பெற்று விளங்குவது "ஸ்ரீ பாதுகா ஸகஸ்ரம்."

இதில் வரும் முதல் சுலோகம், "ஸ்ரீ ரங்கநாதன் பாதுகைகளை பரமஸந்தோஷத்துடன் சிரஸில் வைத்துக் கொள்ளுகின்ற பெரியோர்களுடைய திருவடித் தூள்கள், எல்லா லோகத்தையும் காப்பாற்றுகிறது அப்பேர்ப்பட்ட பெரியவர்கள் மிகவும் உயர்ந்தவர்களாகயிருக்கிறார்கள்" என்ற கருத்தைக் கொண்டது.

அடுத்த சுலோகம் அக்கருத்தை விவரிக்கின்றது அது இங்கு நம் சிந்தனைக் குரியதாகும்.

"பரதாய பரம் நமோஸ்து தஸ்மை
ப்ரதமோதா ஹரணாய பக்தி பாஜாம்!
யது பஞ்ஞும சேஷத; ப்ருதிவ்யாம்
ப்ரதிதோ ராகவ பாதுகாப்ரபாவ: "

'யாதொரு பரதர் முதற்கொண்டு, ஸ்ரீராமனுடைய பாதுகைகளுடைய பெருமையானது, எல்லா லோகத்திலும், பிரஸித்தமாயிற்றோ, அந்த, பக்தியை அடைந்தவர்களுக்கு, முதல் திருஷ்டாந்தமாயிருக்கிற பரதரின் பொருட்டுத்தான் நமஸ்காரமானது இருக்க வேண்டும்' என்பது இந்தச் சுலோகத்தின் பொருள்.

'ஸ்ரீ பரதாழ்வானால்தான், ஸ்ரீராமனுடைய பாதுகைகளுக்கு இவ்வளவு சக்தியிருக்கிறதென்பது எல்லா உலகத்திற்கும் தெரிந்தது. ஆகையால் ஸ்ரீபாதுகைகளிடத்தில் மஹாபக்தரான ஸ்ரீபரதாழ்வாரைத்தான் ஸேவிக்கின்றேன்' என்று சுவாமி தேசிகன் தனது உள்ளத்து உணர்வை வெளிப்படுத்துகின்றார்.

பரதன், இராமபிரானது பாதுகையைத் தனது தலையில் சூடிக் கொண்டு, அதன் பெருமையை உலகுக்கு உணர்த்தினான். அதனால், பரதாழ்வான் என்று வைணவ ஆசாரியப் பெருமக்களால் போற்றிப் புகழப்பட்டு வழிபாடு செய்யப் படுபவனாகின்றான் பரதன்.

ஆகவே, பரதன் பாதுகை பக்தனாகி ஏற்றம் பெற்று விளங்குவதை அறியலாம். இந்த ஏற்றம் படிப்படியாக வளர்ந்து வருவதைக் கவிச்சக்கரவர்த்தி கம்பன் தனது காப்பியத்துள் அழகுபடக் கூறுகின்றான்.

## (2)

# உதய ஒளி

**அறிமுகம்:**

காப்பியத்துள், பலராலும் பன்னரும் பெரும் புகழ்ப் பரதன் என்று பாராட்டப்படும் பாதுகை பக்தன், முதன் முதலாக பாலகாண்டத்தில் அறிமுகம் ஆகின்றான். இந்த நம்பியை அறிமுகம் செய்ய வந்த கவிதையே, அந்தச் செல்வனைப் போன்று அறிஞர் பலராலும் சிந்தித்து அனுபவிக்கத்தக்க வகையில் அற்புதமாக அமைந்துள்ளது.

"கரதலம் உற்றுஒளிர் நெல்லி கடுப்ப
விரத மறைப்பொருள் மெய்ந்நெறி கண்ட
வரதன் உதித்திட மற்றைய ஒளியை,
பரதன் எனப் பெயர் பன்னினன் அன்றே!" (கம்297)

இந்த அறிமுகக் கவிதை. பரதனது குண நலன்களைக் குறிப்பாகக் காட்டுகின்றது, குறிப்பு வெளிப்படையாகும் போதுதான், ஏனையோர்க்குப் புலனாகும். ஆனால் அவைகளை, பாலப் பருவத்திலேயே பரதனிடம் கண்டவன் வசிட்டன் என்ற மாமுனிவன் அவன் 'தாவா மெய்த்தவன் அல்லவா? அதனால். குண நலன்கள் எப்படிச் செயல்படப் போகின்றது என்பதை உணர்ந்தான் வசிட்டன்.

இந்தக் கவிதை 'கரதலம் உற்று ஒளிர் நெல்லி' என்ற உவமையுடன் தொடங்குகின்றது. 'உள்ளங் கை நெல்லிக் கனி போல, பொருள் தெளிவாகத் தெரிகின்றது' என்பது உலக வழக்கு. தெளிவுக்கு வரும் உவமைதான் இங்கு வந்துள்ளது. ஆனால், இந்தக் கவிதையில் அடங்கியுள்ள பொருள் இது தான் என்று யாரும் தெளிவாகத் தெரிந்து கொள் ளாத அளவில் அமைந்துள்ளது இந்தக் கவிதை.

இதனை, 'கம்பசித்திரம்' என்று கூறுவர் அறிஞர் பெருமக்கள் சித்திரம் என்றால் அழகு என்று பொருள். பரதனைப் போன்றே, அவனை அறிமுகம் செய்யும் கவிதையும், அழகாக அமைய வேண்டும் எனக் கருதினான் போலும் கவிச் சக்கரவர்த்தி.

பரதனை, முதலில் தவறாகக் கணித்தவர்கள், உண்மை உணர்ந்த பிறகு, அவனைப் பாராட்டி மகிழ்ந்தார்கள். அது போன்றே அவனை அறிமுகம் செய்ய வந்த இந்தக் கவிதையும் முதலில் பொருள் உணர்வதற்கு அரியதாய், பலமுறை சிந்தித்தபிறகு தெளிபொருள் தருவதாக அமைந்துள்ளது.

**உரை வேறுபாடு:**

'பன்னினன்' என்பது இச்செய்யுளின் பயனி லைச் சொல், இதற்கு எழுவாயாக 'வரதன்' என்ற சொல்லைக் கொண்டனர் அறிஞர் சிலர். வரதன்-வசிட்டன். பன்னினன்-சொன்னான். 'மெய்ந்நெறி கண்ட வரதன்' என்பதை வசிட்டனுக்கு உரியதாக்கி அவன், பரதன் எனப் பெயரிட்டு அழைத்தான் என்று பொருள் கண்டனர் அந்த அறிஞர்கள்.

வை. மு. கோ, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், சென்னைக் கம்பன் கழகம் - பதிப்புகள் அனைத்தும் வரதன் என்ற சொல்லை வசிட்டனுக்குத்

தான் உரித்தாக்கியிருக்கின்றன. இதனை, முன் பின் கவிதைப் பொருளுடன் இணைத்துப் பார்த்து சிந்தித்தால் "வரதன்" என்பது வசிட்டனைக் குறிக்காது என்பதை உணரலாம்.

நால்வருக்கும் நாமகரணம் சூட்டுதல் என்ற நிகழ்ச்சியைக் கூறவந்த கவிதைகள் நான்கு. அதில், இது, இரண்டாவது. முதல் கவிதையிலும், மூன்று நான்கிலும் எழுவாய்ச் சொல் இல்லை.

''இராமன் எனப்பெயர் ஈந்தனன் அன்றே''
''இலக்குவன் என்ன இசைத்தனன் அன்றே''
''சத்துருக்கனன் எனச் சாற்றினன் நாமம்''

என்று பயனிலைச் சொற்கள் மட்டுமே வந்துள்ளன. "ஈந்தனன், பன்னினன், இசைத்தனன் சாற்றினன்' என்ற இந்த நான்கு பயனிலைச் சொற்களுக்கும், 'தாவாமெய்த்தவன்' என்பதுதான் எழுவாய்.

'தாவாமெய்த்தவன் நாமம் விதிப்பமதித்தான்' என்பது, இந்த நான்கு கவிதைகளுக்கு முன்னால் அமைந்த கவிதைத் தொடர். இதனை மனத்தில் மதித்துப் பார்த்தால் உண்மைப் பொருள் விளங்கும் (தாவா - அழியாத).

**உண்மைப் பொருள்:**

இதற்கு உண்மைப்பொருள் கண்டவர் அமரர் திரு. நாராயணையங்கார் என்ற பேரறிஞர். அவர் சொல்வதை இங்கு கவனித்துப் பார்க்க வேண்டும்.

"இப்பாட்டால், மஹாகவி கம்பநாடர் ஸ்ரீபரதாழ்வானுக்கு வசிஷ்டபகவான் நாமகரணம் செய்தமை கூறுகிறார்.'

'வசிஷ்டர் இவனுக்கு இப்பெயரிட்டார் என்று கூற விரும்பியவர், பரதனுக்கு வசிஷ்டர் பரதன் என்று பெயரிட்டனர் என்றால், அது தன்னைப் பற்றுதல்.

(-'ஆத்மாசிரயம்) என்னும் குற்றமுடையதாய் நகைப் புக்கிடமாம் என்று அதனை யொழித்தார். 'கைகேயி மைந்தனுக்கு வசிஷ்டர் பரதன் என்று பெயரிட்டார்' என்று சொல்லலாமானாலும், அது புலமையொடு பொருந்திய பொருட் சிறப்பில்லதாம் என்று அதனையும் ஒழித்தார், பின், வசிஷ்டர் இட்ட பரதன் என்னும் பெயரோடு சொல்லாலும் பொருளாலும் பெரும்பாலும் ஒத்திருக்கும்படி, பரதனைச் சுட்டிக் கூறவேண்டி அவனுக்கு வரதன் என்று ஒரு நாமகரணம் தாமே செய்து கொண்டார். அதனை அடைமொழிகளால், அவன் சரிதையின் (-ஒழுகலாற்றின்) சிறப்பெல்லாம் ஒருங்கு தோன்ற விசேடித்து,

> 'கரதல முற்றொளிர் நெல்லி கடுப்ப
> விரத மறைப்பொருள் மெய்ந்நெறி கண்ட வரதன்'

என்றார்.'

'கடைப்பிடியாகக் கைக்கொள்ளப்பட்டிருக்கும் அருமருந்து போல்வதொன்றைக் கரஸ்தம் என்றும், கரதலாமலகம் என்றும் வடமொழியுள் வழங்குவதுண்டு அதனையே இவர் உவமைப் பொருளாக விரித்து, 'கரதல முற்றொளிர் நெல்லி கடுப்ப' என்று இவன் விரதமறைப் பொருள் மெய்ந்நெறி கண்டமையை விசேடித்தார்.' என்பது, திரு நாராயணையங்கார் கண்ட, கவிதையின் மெய்ப் பொருளாகும். +

வசிட்ட முனிவனால், பரதன் எனப் பெயர் சூட்டப்பட்டவனுக்கு, [கவிச்சக்கரவர்த்தி கொடுத்த பெயர் வரதன் என்பது. இதுவே அய்யங்கார் கருத்தாகும்.

வரதன் என்பதற்கு சிறந்த பொருளை அளிப்பவன் என்று பொருள்.

---

+ செந்தமிழ் தொகுதி—37. பகுதி—2. பக்—24.

பரதன் என்பதற்கு இராஜ்ஜியத்தைப் பாரமாகத் தாங்குபவன் என்று பொருள்.

அரச பதவி, பலராலும் சுகபோகத்துக்கு உரிய தாக மதிக்கப்படும். ஆனால், பரதனுக்கோ அது சுமையாக அமைகின்றது. எது ஒன்று பிறருக்குச் சுவை தருகின்றதோ, அது, பரத நம்பிக்குச் சுமை யாக நிற்கின்றது. காரணம், இவனுடைய அவா வின்மை-வேண்டாமை.



வேண்டாமை என்னும் விழுச் செல்வத்துக்கு முன்னால், பிற உலகியல் செல்வம் அனைத்தும், துரும்புக்குச் சமமே.

அவாவுடையார்க்கு உலகியல் சுகம், சுவை: அவா அற்றவர்க்கு அச்சுகம், சுமை. இதுவே உண்மை. இதனை மெய்ந்நெறியாகக் கண்டவன்-கொண்டவன் பரதன். அதனால் கோசல ராஜ்யப் பெரும் பதவி பரதனுக்குச் சுமையாயிற்று.

**மெய்ந்நெறி**

அந்தச் சுமையைத் தாங்கிக் கொண்டான் பரதன் எவ்வளவு காலம்? பதினான்கு ஆண்டுக் காலம், எதனால் தாங்கிக் கொள்ள முடிந்தது?

அவன் கொண்ட மெய்ந்நெறியின் வலிமை, அந்தச்சுமையைத் தாங்கிக்கொள்ள வைத்தது. நெறி, கரதல நெறி, ஒளிர் நெறி, மறைப் பொருள் நெறி, மெய்ந்நெறி எனக் கவிதையில் சிறப்பிக்கப் படுகின்றது.

'மறைப் பொருள் நெறி' வேதத்தால் நன்கு மதிக்கப்பட்ட நெறி. பொருள் - மதிக்கப்படுதல். 'பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும்' என்னும் பொய்யா மொழியில், பொருள் என்ற சொல், இந்த அர்த்தத்தில் கையாளப் பட்டிருப்பதைக் காணலாம்.

மறை, "விரத மறை" எனச் சிறப்பிக்கப் படுகின்றது. விரதம் - கொள்கை. மக்களின் நல்வாழ்வுக்கு வேண்டிய கொள்கைகளை வகுத்துக் கொடுப்பது வேதம். அத்தகைய வேதத்தால் நன்கு மதிக்கப்படுவதே மெய்ந்நெறியாகும்.

மெய்யைக் காண அழைத்துச் செல்வது மெய்ந் நெறி: மெய் - சத்தியம்: நிலையானது: இறைவன், இறைவனிடம் அழைத்துச் செல்வதால் இது மெய்ந்நெறி எனப்பட்டது. உலகியல் வாழ்வுக்கு வழி காட்டுவது பொய்ந்நெறியாகும்.

உலகினரால் சுவையாகக் கருதப்படுகின்ற பொய்ந்நெறியை ஒதுக்கித் தள்ளிவிட்டு, மெய்ந்நெறி யைச் சுவையாகக் கண்டவன் பரதன். அதனால் வரதன் எனக் கவிச்சக்கரவர்த்தியால் பெயர் சூட்டப் பெற்றான் அவன்.

"மெய்யினுக்கு அழைத்துச் செல்லும் இந்த ஒழுக்கத்தையே தனது கொள்கையாகக் கடைப்பிடிப்பவன் பரதன்" என்பது இதன் திரண்ட பொருள். அந்நெறியைப் பகவத்பக்தி என்றும் கூறலாம். எல்லா நெறிகளுக்கும் இது, மெய்யாக—உடலாகயிருப்பதாலும் மெய்ந்நெறி எனப்பட்டது என்றும் பொருள் கொள்ளலாம்.

**உதித்திட :**

"உதித்திட" என்ற சொல் ஒரு உண்மைப் பொருளைக் குறிப்பாகக் காட்டுகின்றது. உதித்தல்-தோன்றுதல். இதற்கு முன்பு இல்லாததுதான், புதிதாகத் தோன்றும். இந்த புதிதாகத் தோன்றியது ஒளி. ஒளி தோன்றுவதற்கு முன்பு அங்கு இருள் தான் நிறைந்திருக்கும்: பொருள் மறைந்திருக்கும்.

ஒளி, உதயமானவுடன் (தோன்றியவுடன்) இருள். இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும். இருளின் மறைவு, பொருளின் வெளிப்பாடு. ஒளியின் உதயம், தன்னையும் காட்டுகின்றது; இருளில் மறைந்துகிடந்த பொருளையும் காட்டுகின்றது; காண்பானுக்கு அவன் இருக்கும் இடத்தையும் காட்டுகின்றது; அவன் செல்லும் வழியையும் காட்டுகின்றது. இது வெளிப்பொருள்.

பரதனின் பிறப்பை, "ஒளியின் உதயம்" எனக் கூறுகின்றது இக்கவிதை. இதன் உண்மைப் பொருள் என்ன?

ஒளிமயமாக இருப்பது எதுவோ, அதுதான் உதிக்கும். சூரியன் உதித்தான், சூரியன் தானும் ஒளி உடையவன்: மற்றவைகளுக்கும் ஒளி கொடுப்பவன்: இருளில் கிடந்த எல்லாப் பொருள்களையும் உலகிற்கு வெளிப்படுத்துபவன்: இதற்கு முன்பு இருந்த ஒளியை மங்கச்செய்பவன்.

அதுபோன்று பரதனும் இரகுவம்சத்தில்-சூரிய குலத்தில் புகழோடு தோன்றினான். இதற்கு முன்பு இக்குலத்தில் தோன்றியவர்களது புகழை மங்கச்செய்வான்: இவனோடு சேர்ந்தவர்களையும் புகழுக்குரியவனாக்குவான். பொய்ந்நெறியையே மெய்யெனக் கொள்ளும் இவ்வையத்து அஞ்ஞான இருளைப் போக்குவான்.

இத்தகைய குறிப்புப் பொருள் எல்லாம் இத்தொடரில் அடங்கிக்கிடக்கின்றது.

"உதித்திட-உதயமாக: இது, பாஸ்கரஸாம்ய சூசகம். இதனால், ராமதிவாகரன் போலே காணும் இவனும் ஒரு உதய பாஸ்கரன் என்ற வாறாயிற்று" என்பது திருநாராயணையங்கார் கொடுக்கும் விளக்கம் (பாஸ்கரன்-சூரியன்.) இதனை, குகனது புகழுரையில் பிறகு காணலாம்.

**கண்டவரதன்:**

மெய்ந்நெறியை, பரதன் தானே கண்டு வாழ்க்கையில் கடைப்பிடிப்பவன்: அதுவன்றி, உலகத்தாரும் கண்டு கடைப்பிடிப்பதற்குக் காரணமாகயிருப்பவன். உலகினர் மெய்ந்நெறியைக் காணுதற்குக் காரணமான வரதன் எனவும் காணுதற்கு இடமான வரதன் எனவும் பொருள் காணும் வகையில் அமைந்துள்ளது இக்கவிதைத் தொடர்.

மேலும், பிறர் காணாத இம் மெய்ந்நெறி ஒழுக்கத்தைத் தான் கண்டுபிடித்து ஒழுகியவன் என்றும் இவ்வொழுக்கத்தை உலகத்தார் காணுதற்குக் காரணமாய்த் தான் ஒழுகிக் காட்டி, அவருக்கு இந்நெறியைக் கற்பித்தவன் என்றும் பொருள் கொள்ளும் முறையில் சிறப்பாக அமைந்துள்ளது இத் தொடர்.

பரதன், வரதனாதற்குக் கண்ட மெய்ந்நெறி ஒழுக்கத்தின் சிறப்பு யாவராலும் காண்பதற்கு அரிது. அதனைக் காண்பதற்கு மெய்ஞ்ஞானக்கண் வேண்டும். அத்தகைய கண்ணினன் இராமபிரான். தான் கண்ட பரதனது மெய்ந்நெறி ஒழுக்கின் சிறப்பினை இராமபிரான் கூறுவதை, பின்வரும் அத்தியாத்தில் காணலாம்.

ஆக, கதை நிகழ்ச்சியில், பரதனது சொல், செயல் எவ்வாறு அமையப் போகின்றதுஎன்பதைக் குறிப்பால் உணர்த்துகின்றது இந்த அறிமுகக் கவிதை.

அறிமுகத்திலேயே, பாத்திரத்தின் அகத்தோற்றத்தைக் குறிப்பாகக் காட்டுவது கவிச் சக்கரவர்த்தி கையாளும் உத்திகளுள் ஒன்று.

(3)

# நீதிக்கடல்

**அருந்த காட்சி :**

இது, காணாத காட்சி பரதனது முதல் காட்சி தாவா (அழியாத) மெய்த்தவனாகிய வசிட்டனை கொண்டு காண்பிக்கப்பட்டது, வசிட்டபகவான் வரதனது அகத்தோற்றத்தை முகத்தோற்றத்திலேயே கண்டான்: அதனால் "பரதன்" எனப் பெயர் பன்னினான். (பன்னுதல்-சொல்லுதல்; அழைத்தல்)

இதனை அடுத்து வரும் பரதனது காட்சி, அக் காட்சியை நேரில் காணாத ஒரு ஞான முனிவனால் காண்பிக்கப்படுகின்றது. தனது மெய்ஞ் ஞானக் கண்கொண்டு காலம், இடம் கடந்து எதையும் கண்டு கணிக்கும் ஆற்றல் பெற்றவர்கள் அல்லவா முனிவர்கள்?- அத்தகைய ஆற்றல் பெற்றவன் விசுவாமித்திர மாமுனி.

**விசுவாமித்திரன் :**

இம்மாமுனிவன், பூர்வாசிரமத்தில், அரசபதவியின் சுகத்தை ஆரத்துய்த்தவன்; அதனை வெறுத்து ஐம்புலன் அடக்கி அருந்தவம் புரிந்தவன் ;

காமமும் வெகுளியும் தவவாழ்வுக்கு எவ்வளவு இடையூறு விளைவிப்பவை என்பதைத் தவவாழ்வில் அனுபவத்தில் கண்டவன்: திரிசங்கு சுவர்க்கம் படைக்கும் பேராற்றல் பெற்றவன்: எல்லாவற்றுக்கும் மேலாக, வசிட்டமா முனிவரால் 'பிரம்மரிஷி' என்று பாராட்டிப் புகழப்பெற்றவன்.

அரச பதவியின் அவாவையும்' அதனை வேண்டாம் என வெறுத்த அவாவின்மையையும் தனது அனுபவத்தில் கண்ட இந்த ஞானமுனி, பரதனை எவ்வாறு மதிப்பிடுகின்றான் என்பதை பாலகாண்டத்தில் இரண்டாவது காட்சியாக அமைக்கின்றான் கவிச்சக்கரவர்த்தி.

முதல் காட்சி அயோத்தியில்: அடுத்த காட்சி மிதிலையில், அயோத்திக் காட்சி, பரதனது பாலப் பருவம். மிதிலைக் காட்சி பரதனது வாலிபப்பருவம்: அவன் நேரில் இல்லாத இடம்.

**காட்சி காட்டப்படும் இடம்:**

பரதனை, விசுவாமித்திரன் நேரில் கண்டதாகவோ, அவனிடம் உரையாடியதாகவோ, கதைப் போக்கில் எங்கும் அமையவில்லை. அப்படியிருந்தும், இம் முனிவன் பரதனது குண நலத்தை எடுத்துக் கூறுகின்றான். கேட்பவர்களோ, உலகப்பற்றற்ற முனிவராகிய சதானந்தர், ராஜயோகியாகிய சனகப் பேரரசன், அமைச்சர் முதலியோர். இடம். மிதிலை நகரத்து அரசவைக்களம். நேரம், பரதன் இங்கு இல்லாத சமயம்.

இதுதான் உண்மையான புகழ்ச்சியாகும் என்று இத்தகையதொரு சூழ்நிலையை அமைத்துக் காட்டுகின்றான் கவிச்சக்கரவர்த்தி.

சனகனது பேரவையில், விசுவாமித்திர மாமுனிவன், தன்னுடன் வந்த இராம இலக்குவர்களோடு அமர்ந்துள்ளான். சனகப் பேரரசன், "இருந்த குலக்குமரர் தம்மை இரு கண்ணால் முகந்து அழகு பருக நோக்கினான்: பிறகு யார் இவர்கள்?" எனக் கேட்டான்.

இதற்கு விடை கூற விரும்பிய விசுவாமித்திரன் இந்த இருவரைப்பற்றி மட்டும் கூறியிருக்கலாம். ஆனால் அதற்கு மேலாக, அங்கு இல்லாத பரதனைப் பற்றிக் கூறுகின்றான். எப்படி?

வசிட்ட மாமுனி, எந்தப் பரதனை ஒளியாகக் கண்டானோ, அந்தப் பரதனைக் கடலாகக்காண்கின்றான்: காட்டுகின்றான் விசுவாமித்திர முனி. அதுவும் எந்தக் கடல்? நீதிக்கடல். முனிவன் வாயிலாகக் கடல் வருகின்றது. எவ்வளவு அருமையான கவிதை!

"தள்ளரிய பெருநீதித் தனிஆறு புகமண்டும்
பள்ளம்எனும் தகையானை, பரதன்எனும் பெயரானை,
எள்ளரிய குணத்தாலும், எழிலாலும் இவ்இருந்த
வள்ளலையே அனையானை, கேகயர்கோன் மகள்பயந்தாள்.

(கம். 657)

இது, பரதனைப் பற்றிய விசுவாமித்திரன் கணிப்பு: அங்கு அமர்ந்திருக்கின்ற வள்ளலாகிய இராமபிரானைக் காட்டி, அங்கு இல்லாத பரதனைப் பற்றி விவரிக்கின்றான் ஞானப் பெருவள்ளல்.

இந்த இராமனோடு, குணத்தாலும், அழகாலும் ஒத்திருப்பவன் பரதன். அந்தக் குணம் யாராலும் புகழ்வதற்கு உரியதாகயிருக்குமே அன்றி இகழ்வதற்கு உரியதாகயிருக்காது. (எள்ளுதல்- இகழ்தல்)

இராமபிரானது குணச்செயல்களாவது சில சமயம் பிறரால் இகழ்வதற்குரியதாகயிருக்கலாம் பெண் (தாடகை) கொலை செய்தது: மறைந்திருந்து வாலியைக் கொன்றிருந்தது: மனைவியின் விருப்பத்தை நிறைவேற்றவேண்டி மாயமானின் பின் சென்றது: கற்பின்கனலியாகிய சீதாப்பிராட்டியைத் தீயில் இட்டுச் சோதித்தது முதலியன இகழ்விற்குரியன எனக்கருத இடம் உண்டு. ஆனால் பரதனுடைய குணச்செயலோ, எந்தச்சமயத்திலும்யாராலும் இகழ்வதற்குரியதாக அமையாது. இதனை முன்கூட்டி அறிந்தவன் இந்த முனிவன். அதனால் பரதன் பின்பற்றியது தள்ளரிய பெருநீதி எனப்பகர்கின்றான் விசுவாமித்திரன்.

**தள்ளரிய பெருநீதி :**

தனது அனுபவத்தைக் கொண்டு பரதன் பின்பற்றுவதைக் கணித்துப்பார்க்கின்றான் இந்த ஞான முனி. அரசியல் வாழ்வில் கண்டது நீதி: தவவாழ்வில் கண்டது பெருநீதி. இவைகள் தனது, வாழ்வில் தள்ளுதற்குரிய நிலை எய்தியமையைக் கண்டவன் விசுவாமித்திரன். (தள்ளுதல்-விலக்குதல்)

கௌசிக மன்னனாகக் காட்டுக்கு வேட்டையாடச் சென்றபோது, வசிட்ட மாமுனியின் தவ வலிமையைக் கண்டு, அரச நீதியைத் தள்ளினான்: வசிட்ட முனிவனைப் போன்று தவமாகிய பெருநீதியை பின்பற்றினான்: அதுவும், அகங்கார மமகாரங்களை வளர்த்துவிடுவதால் தவமும் தள்ளப்படுதற்குரியதாயிற்று. திரிசங்கு சுவர்க்கம் படைப்பேன்" என்பது அகங்காரம்தானே !

அதனால், பகவத் சேவையாகிய தள்ளரிய பெருநீதியை மேற்கொண்டான் விசுவாமித்திரன். இராமபிரானைத் தசரதனிடமிருந்து பிரித்துவந்து, மிதிலையில் சீதாப்பிராட்டியோடு இணைத்து வைக்கும் கைங்கர்யம் பகவத் சேவைதானே !

அரச நீதியையும், தவவாழ்வுப் பெருநீதியையும் தள்ள (விலக்க) வைத்தது பகவத்சேவை.

இதனைத் தனது சொந்த வாழ்வில் கண்டதால், பரதன் நேரடியாகத் தள்ளரிய பெரு நீதியாகிய பகவத்கைங்கர்யத்தில் ஈடுபட்டதைக்கண்டு வியந் தான் விசுவாமித்திரன்.

"பரதன் பின்பற்றிய பெருநீதியை, தாய் கைகேசியாலும் விலக்கமுடியாது; ஆசிரியராகிய வசிட்டராலும் விலக்க முடியாது: எம்பிரான் என்று போற்றப்படுகின்ற இராமபிரானாலும் தள்ள முடியாது என்பதை முன்கூட்டியே உணர்ந்தவன் விசுவாமித்திரன்.

'நீதியால் நிறைந்தவன் பரதன்' என்ற கருத்தை உருவகத்தின் மூலம் எவ்வளவு அழகு படத் தெரிவிக்கின்றது இந்தக் கவிதை.

ஆறு எங்கிருந்து புறப்பட்டாலும் கடலைத்தான் சென்று சேரும். கடலைச்சென்று சேர்வதை, ஆறு தானாகத் தள்ள (விலக்க) முடியாது. அதே போல கடலும், ஆறு தன்னை வந்து அடைத்தலை தள்ள (விலக்க) முடியாது.

இதனை உவமையாகக் கொள்ளாமல் உருவகமாக்கிக்கொண்டதால் கவிதை மேலும் அழகு பெறுகிறது நீதி ஆறாகின்றது: பரதன் கடலாகின்றான், (பள்ளம்-கடல்)

'நீதி' என்ற ஆறு ஓடியது: அது பரதன் என்ற பள்ளத்தில் (கடலில்) கலந்தது, நீதி, பெருநீதியாக யிருப்பதால் ஆறு, தனி (ஒப்பற்ற) ஆறாக ஆகிறது பெருநீதி என்ற ஆறு தனித்துவம் பெற்றது போல, அது சேர்ந்து நிரப்பிய கடலாகிய பரதனும் தனித்துவம் பெறுகின்றான்.

**மண்டும் பள்ளம்:**

மண்டுதல்—ஆர்வம் பெருக உண்ணுதல். ஆறு கடலில் சென்று புகுந்து கொண்டேயிருப்பதும், கடல்அதனை மண்டிப் பருகிக்கொண்டேயிருப்பதும் இயல்பு. அதைப் போல, பெருநீதி—மெய்ந்நெறி பரதனை அடைந்து கொண்டேயிருப்பதும், அதனை அவன் நுகர்ந்து கொண்டேயிருப்பதும் இயல்பாம். இது இத்தொடரின் நுண் பொருளாகும்.

யான், எனது என்ற அகங்கார மமகாரங்கள் உள்ளத்தில் தோன்றும் மேடுகள். மேட்டை நோக்கி ஆறு செல்லாததைப் போல, அகங்கார மமகாரங்கள் உள்ள உள்ளத்தில் நீதிநிலைக்காது என்பதுகருத்து பரதன் உள்ளத்தில் அந்த அகங்கார மமகாரங்கள் ஒரு சிறிதும் இல்லாததால், நீதியாகிய ஆறுதானாக ஓடிவந்து பள்ளத்தை நிரப்பிக்கொண்டிருக்கின்றது.

ஆறு, தள்ளரிய தனிப் பெரும் ஆறு: அது பெருநீதி. பள்ளம், தள்ளரிய தனிப்பெரும் பள்ளம்.அது பரதன். நீதிகள் அனைத்தும் பரதனிடமே கலப்பன அதனால் பரதன் நீதிக்கடலாகவே காட்சியளிக்கின்றான் அதனைக் கண்டவன் விசுவாமித்திரன். கண்டவாறே மிதிலைப் பேரவையில் பரதனைக் காட்டினான் அம்மாமுனிவன்.

முதல் காட்சி ஒளி: அடுத்த காட்சி கடல்.

(4)

# உயிரும் உடலும்

**பிரிவு :**

சூரியனும் ஒளியும் ஒன்றாக இணைந்தவைகள், அதே போன்றுதான் கடலும் நீரும். சூரியனிட மிருந்து ஒளியைப் பிரிக்க முடியாது. சூரியனே ஒளி அவ்வாறே கடலே நீர். இவைகள் பிரியாதவைகள்.

பரதனை, சூரிய ஒளியாகவும், நீதிக்கடலாகவும் காட்டிய கவிச்சக்கரவர்த்தி, பிரிவுச் சூழ்நிலையில் அவன் எவ்வாறு செயல் படுகின்றான் என்பதைக் காட்டுகின்றான் அடுத்த காட்சியில்.

சூரியனை விட்டு ஒளியைப் பிரிக்கமுடியாததைப் போலவும், கடலை விட்டு நீர் முழுவதையும் பிரிக்க முடியாததைப் போலவும், பரதனை விட்டு, புகழையும் பெருநீதியையும் பிரிக்கமுடியாது, இது உண்மை.

இந்தப் புகழும், பெருநீதியும் பரதனைவிட்டுப் பிரிக்க முடியாமல் ஒன்றியிருப்பதற்குக் காரணம், இராமபிரானை விட்டுத்தான் பிரியாமல் இருத்தலே யாகும் என்பதை உணர்ந்தவன் பரதன்.

பரதன் இராமபிரானை விட்டு உடல் அளவில் பிரிந்தாலும், புகழும் தள்ளரிய பெருநீதியும், அந்த நம்பியை விட்டுப் பிரியா. இவ்வுண்மை வெளிப்படுதற்குரிய ஒரு சூழ்நிலை உருவாகிறது இராம காதையில்.

அயோத்தியாக் காண்டத்து உணர்ச்சிகளின் கொந்தளிப்பு நிகழ்ச்சிகளுக்கு நுழை வாயிலாகவும் அமைகின்றது அந்தச் சூழ்நிலை.

தசரதசக்கரவர்த்தி, மணமக்களுடன் மிதிலை யினின்றும் புறப்பட்டு அயோத்தி வந்து சேர்ந்தான். அங்கு அனைவரும் சுக வாழ்வினர். அப்போது, அச்சுகத்துக்கு ஒரு சோதனை ஏற்படும் வகையில் ஒன்றை எண்ணினான்: செயல் படுத்தவும் துணிந்தான் அம்மாமன்னனன்.

அவன் எண்ணமும், செயல்பாடும் அங்குள்ள அனைவரின் இன்ப வாழ்வுக்குச் சோதனையாக அமையும் என மன்னன் சிறிதும் நினைத்திருக்க முடியாது, நல்லது நடக்க வேண்டும் என்றுதான் மனிதன் எண்ணுகின்றான்: செயல்படுகின்றான். ஆனால், அவ்வாறே நடப்பது இல்லை: எண்ணத் துக்கு மாறாக நடந்து விடுகின்றது.

காரணம்; எண்ணுவது மனிதமனம். நிறைவு செய்வது இறைவன் திருவுள்ளம். எது மனிதனுக்கு நிரந்தரமான நன்மை பயப்பதோ அதனைத்தான் இறைவன் கொடுப்பான். இந்த வாழ்க்கைத் தத்து வத்தை எண்ணிப்பார்க்காததால்தான், நினைத்தது முடியவில்லையே என மனிதன் வருந்திக் கொண்டிருக்கின்றான்.

தசரதன், இப்போது பரதனை, அவன் பாட்டன் வீட்டுக்கு அனுப்ப எண்ணுகின்றான்.

**தசரதன் :**

தசரதன், கோசல நாட்டுப் பேரரசன்: கோசலை சுமத்திரை, கைகேசி ஆகிய மூவரின் கணவன்: இராமன், இலக்குவன், பரதன், சத்துருக்கனன் ஆகிய நால்வரின் தந்தை; சீதா பிராட்டியின் மாமன்: நாட்டு மக்களைத் தனது உயிராக மதித்து ஆட்சி நடத்துபவன். "சென்று நின்று வாழ் உயிரெல்லாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்" என்று கவிச் சக்கரவர்த்தி மக்களுக்கும் மன்னனுக்கும் உள்ள தொடர்பினைக் கூறுவான்.

கணவன், தந்தை, மாமன் என்பன பிறப்பால் வந்த உடல் உறவுத் தொடர்புகள். ஆனால் அரசன் என்ற நிலையில் மக்களோடு கொண்ட தொடர்பு ஆளும் சிறப்பினால் அமைந்தது அவனுக்கு. அதனால், மக்களை உயிராகக் கொண்டு, தன்னை அந்த உயிர்களைத் தாங்கும் உடலாக மதித்தான்.

மக்களும் மன்னனும் உயிரும் உடலுமாக ஆயினர். உயிர் தங்குவது: உடல் தாங்குவது. தங்கும் பொருளுக்குச் சிறப்பா? தாங்கும் பொருளுக் குச் சிறப்பா? தங்கும் பொருள் இல்லை என்றால், தாங்கும் பொருளுக்கு வேலை இல்லை. உயிர் இல்லையேல், உடல் பயனற்றது, உடலைப் பயனுடையதாகச் செய்வது உயிர்தான். அதனால் உயிரின் சிறப்பு விளங்கும். தங்கியிருக்கும் உயிர், தன்னைத் தாங்கியிருக்கும் உடலை நடமாடச் செய்கின்றது விளக்க முறச்செய்கின்றது: உலகின ரிடை பெருமை பெறச்செய்கின்றது.

நடமாட்டமும், விளக்கமும், பெருமையும் வெளியில் தெரியும் உடலுக்குத்தான்: உள்ளேயே தங்கியிருக்கும் உயிருக்கு இல்லை. தாங்கும் உடல் இல்லையேல், தங்குதற்கு இடம் இல்லாது உயிர் தவிக்கும். அதனால், உடலின் சிறப்பு விளங்கும்.

உயிரும் உடலும் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கின்றது; இணைந்திருக்கின்றது. இந்த இணைப்பினால்தான், உலக இயக்கம் இடையறாது நடந்து கொண்டிருக்கின்றது.

மக்களும் மன்னனும் இதைப் போன்றவர்கள். மக்கள் இல்லையேல் மன்னன் இல்லை: மன்னன் இல்லையேல், மக்களின் ஒழுங்கான நடைமுறை வாழ்வு இல்லை.

தசரத மன்னன் மக்களின் நல்வாழ்வுக்காகவே செயல்பட்டு வந்ததால், மக்களாகிய உயிர்கள் தங்கிய உடலாக அமைந்தான், மக்களைத் தாங்கினான் என்பது கருத்து. தாங்கும் உடல், வளமாகயிருந்தால், அங்கு தங்கியுள்ள உயிரும் நலமாக வாழும்.

இவ்வாறு, கோசல நாட்டில், அரச வளமும் மக்கள் நலமும் சிறப்பாக அமைந்திருந்தன. சிறப்புக்குக் காரணம், இரண்டன் இணைப்புதான். ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்தால் வளமும் மறையும்: நலமும் குறையும்.

உடல்: உயிர். இவைகளில் பிரிவது எது? பிரிந்துகிடப்பது எது? இதற்கு விடை காண வேண்டும். யாரிடம் சென்றால் விடை கிடைக்குமோ அவரிடம் செல்லவேண்டும். மக்கள், வையத்து வாழ்வாங்கு வாழ்வதற்கு வழி காட்டும் வள்ளுவப் பெருந்தகையார்தான் இதற்குச் சரியான விடை அளிப்பவர். அவர் சொல்லுகின்றார். எப்படி?

"குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே
உடம்பொடு உயிரிடை நட்பு." (குறள் 338)

உயிர்தான் உடலைவிட்டுப் பிரிந்து செல்லும்: உடல் பிரிந்துகிடக்கும். இதற்கு உவமையாக, "தான் கட்டிய கூட்டை தனித்து விட்டுவிட்டு, அதனுள் தங்கியிருந்த பறவை பிரிவது" [illegible]ள்ளது.

உயிர் பிரிந்து செல்வதும் உடல் பிரிந்து கிடப்பதும் இயற்கை நிகழ்ச்சி. இந்த இயற்கை நிகழ்ச்சி மாறினால் அங்கு விபரீத நிகழ்ச்சிதான் நடைபெறும்

தசரதன் கோசல நாட்டு ஆட்சியைத் (உயிரை) தாங்கும் உடல். இனி நடக்கும் கதைப் போக்கில் தசரதனாகிய உடல்தான், மக்களாகிய உயிரை விட்டு பிரியப் போகின்றது. தன்னுள் தங்கியுள்ள உயிரைப் பிரிந்து கிடக்கச் செய்து விட்டு, தாங்கிய உடல் பிரிந்து செல்லப் போவதால், கதையில் இனி நடக்கும் நிகழ்ச்சிகள் அனைத்தும் யாரும் எதிர் பாராத விபரீதத்துக்குரியதாகவே அமையும் என்பது குறிப்பு.

அத்தகைய விபரீத நிகழ்ச்சிக்கு வித்திடப் போகின்றான் தசரத மன்னன். அவனை அறியாமலே இந்த விதை ஊன்றப்படுகின்றது. மன்னன் உடல் தானே! உடலுக்கு, உண்மையை நடக்கப் போவதை அறியும் ஆற்றல் இல்லை அல்லவா?

உடலாகிய தான் பிரிந்து செல்லப் போகும் செயலை. ஒருவரை விட்டு ஒருவர் பிரியாமல் வாழும் தனது மைந்தர்களிடத்தில் முதலில் செய்து விடுகின்றான் தசரத மன்னன். பிரிக்கின்றோம் என்ற உணர்வு இல்லாமலேயே. இதனைத்தனது ஆணையைக் கொண்டு செய்கின்றான் கோசல அரசன்.

தசரதனுடைய மக்களுள் இராமன் தமையன்: மற்றையோர் தம்பிகள். இராமன் எங்கு இருப்பானோ, அங்கு இலக்குவனும் ஒட்டிக் கொண்டேயிருப்பான். அதே போன்று, பரதன் எங்கோ, அங்கு சத்துருக்கனன்

நால்வரும் பிறப்பால் சகோதரர்களாக இருந்தாலும், பரதன், இராமபிரானைப்பகவானாகக்கருதித்தான் செயல்பட்டான். பகவத் பாகவத சம்பந்தம் என்ற அளவில்தான், பரதனின் வாழ்க்கை அமைந்திருந்தது. இராம பரத உறவு 'ஆத்மபந்து' என்ற நிலையினை உடையதாயிற்று.

இவர்களது உறவுக்கு உவமை உடல் உயிர் என்பதுதான். பரதன் உடல்; இராமபிரான் உயிர் உடலும் உயிருமாக வாழ்ந்த இந்த இருவர்களையும், அவனை அறியாமலே பிரிக்க முற்பட்டான் தசரத மாமன்னன்.

ஒருவனது செயல், உடலிலிருந்து உயிரைப் பிரிப்பதாகத்தானே அமையும்! ஆனால், தசரதனது செயலோ, உயிரை விட்டு உடலைப் பிரிப்பதாக அமைகின்றது இது போன்று தானே, உடலாகிய தனக்கும் நடக்கப் போகின்றது என்பது தசரதனுக்கு இப்போது எப்படித் தெரியும்?

ஒருவன் தனது வலிமையைக் கொண்டு, எந்த ஒரு செயலைச் செய்தாலும், அதனுடைய பலன், உறுதியாக எதிர்காலத்தில் அவனை வந்து சேரும். இது உலக நியதி.

இவ்வளவு கருத்துக்களையும் உள்ளடக்கிக் கொண்டும், குறிப்பால் உணர்த்திக் கொண்டும் அமைந்த கவிதைகள் இரண்டு. இந்தக் கவிதைகளில், சீர் உருவத்துடன் நெருங்கி நிற்கும் சொற்கள் கவிச்சக்கரவர்த்தி கம்பன், தனது காப்பியத்தை எவ்வெவ்வாறு வளப்படுத்த எண்ணினானோ, அவ்வெண்ணங்களை எல்லாம், கற்பாரிடம் வெளிப்படுத்தும் ஏவலர்களாகப் பணி செய்கின்றன.

அந்தக் கவிதைகள் தந்தையின் சொல்லையும் மைந்தனின் செயலையும் தாங்கிக் கொண்டுவருவன

## அரசன் ஆணை :

"ஆணை நின் தன்முது தாதை ஐய!நிற்
காணிய விழைவதுஓர் கருத்தன் ஆதலால்,
கேணியில் வளைமுரல் கேகயம் புகப்
பூண்ஒளிர் மார்பன்நீ போதி என்றனன்." (1309)

"ஏவலும் இறைஞ்சிப்போய் இராமன் சேவடிப்
பூவினைச் சென்னியில் புனைந்து போயினான்.
ஆவி அங்கு அவன் அலது இல்லை ஆதலால்.
ஓவலில் உயிர்பிரிந்து உடல்சென்று என்னவே."
(1310)

பாலகாண்டத்து இறுதியில் வரும் இந்த இரண்டு கவிதைகளும், அடுத்த காண்டத்து அறையைத் திறக்கும் இருகதவுகளாக அமைந்து உள்ளன என்னலாம். ஒன்றோடு ஒன்று இணைந்து இசைந்து நிற்கும் இரட்டைக் கதவுகள் பிரிந்தால் தானே, வாயில் திறக்கப்படும், அப்படிப் பிரிக்கப் படும் உட்பொருளையும் தன்னுள் அடக்கிக்கொண்டுள்ளன இந்த இருகவிதைகளும்.

தந்தை தனது மைந்தனிடம் பேசுவதாக அமைந்தது ஒன்று. மற்றொன்று, கேட்கும் மைந்தனது செயலாக அமைந்தது. பேசும் தந்தையார்? கேட்கும் மைந்தன் யார்? இதற்கு முன்னும் இதற்குப் பின்னும் பேசாத தந்தை பேசுகின்றான். இதற்குப் பிறகு, தந்தையைப் பார்க்க வாய்ப்பு அற்ற மைந்தன் கேட்பவனாகின்றான். சொல்லப்போனால், இது தந்தை மைந்தர்களது இறுதிச்சந்திப்பு : முடிந்த பேச்சு அதனால், இது முக்கியத்துவம் வாய்ந்தது.

இதுதான், இறுதியானது என்பது இருவர் களுக்கும் உறுதியாகத் தெரியாது. அப்படிக் கதையை நடத்திச் செல்கின்றான் கவிச்சக்கரவர்த்தி.

பேசுவது தசரதத் தந்தை: கேட்பது பரதனைமந்தன். பேச்சு, தந்தை என்ற உறவு நிலையிலிருந்து வருகின்றதா? அல்லது, அரசன் என்ற அதிகார நிலையிலிருந்து வருகின்றதா?

உறவு முறைப் பேச்சில் அன்பு கலந்திருக்கும்: அரச நிலைப் பேச்சில் அதிகாரம் கலந்திருக்கும். தசரதன், தந்தை: பரதன், மைந்தன் அதனால் தசரதன் பேச்சில் அன்புதான் கலந்திருக்க வேண்டும்.

பேச்சின் பொருளோ, பரதனையும் இராமனையும் பிரிப்பதாக - உடலையும் உயிரையும் பிரிப்பதாக அமைவதால், தந்தையாக நின்று சொல்லும் சொல் ஒரு வேளை எடுபடாமலும் போகலாம். அரசன் என்ற நிலையிலிருந்து அதிகாரப் பேச்சாக வெளியிட்டால், நாட்டுக் குடிமக்களுள் ஒருவனாக வாழும் பரதன் மறுக்க முடியாதல்லவா?

ஆனால், தனது பேச்சை பரதன் ஏற்பானா ஏற்கமாட்டானா என்பதை முன்கூட்டி அறியாத தசரதன், இருநிலையிலிருந்தும் பரதனிடம் பேசுகின்றான்.

கவிதையில் அமைந்த சொற்கள் தசரதனது இருநிலைகளையும் புலப்படுத்துகின்றன. "ஐய!" என்றசொல் தசரதனது தந்தைநிலையையும், 'ஆணை என்ற சொல், அவனுடைய அரச நிலையையும் வெளிப்படுத்துகின்றன.

ஐய! என்ற அழைப்புச் சொல், தந்தை, மைந்தன் பால் கொண்ட அன்பு உணர்வைச் சுமந்து வருகின்றது. 'ஐய! நீ போதி' என்பதில் அன்பு தவழ்கின்றது 'நீ போதி — இது என் ஆணை' என்பதில் அரச அதிகாரம் தொனிக்கின்றது. அதாவது, எப்படியும் பரதனை அயோத்தியை விட்டு அகற்றி விட வேண்டும் என்பது கருத்து.

கவிதையில் முதற்கண் இடம் பெற்றிருப்பது ஆணை என்ற சொல்தான். தசரதன், அரசன் என்ற நிலையினனாகத்தான் பேச்சைத் தொடங்குகின்றான் என்பதை அச்சொல் காட்டுகின்றது.

தொடக்கம், அதிகாரத்தில் அமைந்தாலும், கவிதையின் உள்ளுள் அமைந்த சொற்கள் தசரதனது அன்பை வெளிப்படுத்துவனவாக உள்ளன.

'ஐய! நீ போதி' — கேகயம்புகப் போதற்குக் காரணம் என்ன என்பதை, கவிதையின் சொற்கள் வெளிப்படையாகக் காட்டுகின்றன.

**பாட்டனும் பேரனும்:**

கேகய நாட்டு மன்னன், தசரதனுக்கு மாமன்: பரதனுக்குத்தாய் வழிப் பாட்டன், பாட்டன் பேரனைக் காண்பதற்கும், அவனோடு கொஞ்சிக்குலாவுதற்கும் விரும்புவது இயல்பு. தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள, பேரன் இருக்கும் இடத்துக்கு வர இயலாத முதுமைப்பருவத்தினனாக இருந்தால், பாட்டனை நோக்கி பேரன் தான் அங்கு செல்ல வேண்டும் அந்த உலகியலை ஒட்டி, 'நின் தன் முதுதாதை நின் காணியவிழைவது ஓர்கருத்தன்: ஆதலால், கேகயம் புகப் போதி' என்று தசரதன் கூறினான். பாட்டன் விருப்பத்தை நிறைவேற்ற, பேரனாகிய பரதன், கேகேயம் போக வேண்டும். இது, தந்தையாகிய தசரதன் விருப்பம்.

தன் முது தாதையின் விருப்பத்தையும். தனது தந்தையின் விருப்பத்தையும் நிறைவேற்றுவது, பேரனும், மைந்தனுமாகிய பரதனது கடமை தான். ஆனாலும், அது, தனது விருப்பத்துக்கு இடையூறு விளைவிப்பது என்பது பரதனுக்குத் தெரியும் பாட்டனுக்கும் தந்தைக்கும் தெரியாது.

'உன்னுடைய பாட்டன் உன்னைக் காண வேண்டும் என்ற விருப்பினன்: ஆதலால் நீ கேகயம் போதி' என்று பரதன் கேகய நாட்டுக்குச் செல்ல வேண்டியதைக் காரணத்துடன் கூறினான் தசரதன்

போக வேண்டிய கேகயம் எப்படிப்பட்டது? அங்கு எப்படிச் செல்ல வேண்டும்? என்பதைத் தெரிவிக்கின்றான் தசரதன், அடுத்தபடியாக.

'கேணியில் வளைமுரல் கேகயம்,' புகவேண்டிய தேசம். சங்கினங்கள் முழங்கும் நீர் நிலைகளை உடையது அந்த நாடு. அதனை ஒட்டி இயற்கை வளம் காட்டும் சோலைகளும் நிறைந்தது அந்நாடு அதாவது, அரசிளங்குமாரர்களின் பொழுது போக்கிற்குரிய புனல் விளையாட்டு. பொழில் விளையாட்டு முதலியன நிகழ்வதற் கேற்ற நாடு என்பது கருத்து.

பரதன் அங்கு சென்று உலகியல் வாழ்வில் ஈடுபட்டு இன்பம் துய்க்க வேண்டும் என்பது தசரதனது விருப்பம். மேலும், பரதன் கேகயம் போகும் போது, பூண் ஒளிர் மார்பினனாகச்செல்லவேண்டும் என்பதும் தந்தை தசரதன் விருப்பம். வயிரகவசம் முதலிய பல வகை அணிகள் பூண்டு, கேகய நாட்டினர் நன்கு மதிக்கும்படி ஆடம்பரத்துடன் பரதன் செல்ல வேண்டும் என்பது தசரதனது உட் கிடக்கை

தந்தையினது இந்த இரு விருப்பமும், மைந்தனது உள்ளத்தின் வெறுப்புக்குரியதாகும். ஏன்?

பரதனின் திருவுள்ளம், ஐம்புலன் இன்பங்களை ஆரத்துய்க்கும் உலகியல் ஒழுக்கத்தை வெறுப்பது: அதனினும் பன்மடங்கு மேம்பட்டபகவத் சேவையை விரும்புவது உடலணி விரும்பும் சரீர அபிமானத்தை வெறுக்கும்: உயிர்க்கு அணியாகிய ஆத்ம குணங்களை விரும்பும். அதனால் தந்தையின் விருப்பு, மைந்தனின் வெறுப்புக்குரியதாகிறது.

**பரதன் செயல்:**

தந்தை தசரதன் 'நீ போதி' என்று ஆணையிட்டவுடன் மைந்தன் பரதன் போனான். எங்கு?

'ஏவலும், இறைஞ்சி, போய்' என்று அடுத்த கவிதை தொடங்குகின்றது. 'ஏவலும்' என்ற சொல். தசரதன். அரசனாக நின்று பரதனைக் கேகய நாட்டுக்குச் செல்ல வேண்டும் என்று கட்டளை பிறப்பித்தான் என்பதைத்தான் காட்டுகின்றது. 'தசரதன் அரசியல் ஆணை வலிகொண்டுதான் பரதனைக் கேகயத்துக்குப் போக்கினான்' என்பது, மந்தரையின் கூற்றாலும் உறுதிப்படுகின்றது.

பாக்கியம் புரிந்திலாப் பரதன் தன்னை, பண்டு
ஆக்கிய பொலங்கழல் அரசன் ஆணையால்,
தேக்குயர் கல்லதர் கடிது சேணிடைப்
போக்கிய பொருள் எனக்கு இன்று போந்ததால்' (1465)

என்பது கைகேசியிடம் மந்தரை கூறிய உறுதிமொழி. இது, தசரதனது ஆணையை உறுதிப்படுத்துகிறது.

'ஏவலும்' என்பதில் உள்ள 'உம்' என்பது பரதனது பரபரப்பைக் காட்டுகின்றது. ஏவிய உடனேயே, பரதன்' தந்தையை வணங்கிவிட்டு, இராமபிரானிடம் போனான். ஏன் 'அவ்வளவு வேகம் பரபரப்பு? தசரதன், உடனே தேரைக் கொணரச் செய்து அதில் தன்னை ஏற்றுவித்து கேகயத்துக்கு அனுப்பி விட்டால் என் செய்வது என்ற அச்சம் பரதனுக்குசிறிது காலம் தாழ்த்தாலும், இராமபிரானைத் தரிசிக்க முடியாதபடி' தசரதன் செய்து விடுவானோ என்ற அச்சம்தான் பரதனை அவ்வளவு பரபரப்புக்கு உள்ளாக்கியிருக்கின்றது. 'உம்' என்பது பரதனது திருவுள்ளப் போக்கை உள்ளடக்கிக் கொண்டுள்ளது. இறைஞ்சி - தந்தையை வணங்கி விட்டு: போய் இராமபிரானிடம் சென்று.

தந்தை சொல்லைக் கேட்டு அதன்படியும் நடக்க வேண்டும்: அரசன் ஆணைக்குக் கட்டுப்பட்டு நிற்கவும் வேண்டும். இதுதான், உத்தமமைந்தனாகவும், உயர்ந்த குடிமகனாகவும் வாழ்தற்குரிய முறை.

இம் முறை, பரதனது, ஆத்மீகக் குணங்களால் நிரம்பிய திருவுள்ளத்துக்குக் குறைவாகத்தான் இருக்கும் இருப்பினும் அதனை நிறைவு செய்து கொள்வதற்குத்தான், இராமபிரானிடம் சென்றான் பரதநம்பி.

சென்று ஏதாவது பேசினானா பரதன் ஒன்றும் பேசவும் இல்லை: எதுவும் கேட்கவும் இல்லை பரதன்பேசியதாகவோ எதையாவது கேட்டதாகவோ கவிதையில் வெளிப்படையாகக் கூறப்பட வில்லை. ஆனால், அவ்வளவும் பரதநம்பிக்கும் இராமபிரானுக்கும் இடையில் நடந்ததைக் கவிதை, குறிப்பாகக் காட்டுகின்றது.

'இராமன் சேவடிப்பூவினைச் சென்னியில் புனைந்து போயினான்.' என்ற கவிதைத் தொடரில் அத்தனைக் கருத்துக்களும் அடங்கிக் கிடக்கின்றன-

'உன்னைப் பிரிய வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டதே! என்ற குறிப்பினனாய், பரதன். இராமபிரான் முன்னிலையில் நின்றான். அதனை உணர்ந்து கொண்ட இராமபிரான் 'தந்தைசொல்லைக் காப்பது மைந்தனின் ஒழுக்கம்: அரசனின் ஆணைக்குக்கட்டுப்படுவது ஒருகுடிமகன துகடமை.அதனால்,அவ்வாறே நடந்து கொள் என்ற தனது கருத்தைக் குறிப்பால் உணர்த்தினான். இருவரும் குறிப்பில் குறிப்பு உணர்பவர் ஆகையால் வாய்ச் சொற்களுக்கு அங்கு வேலை இல்லாது போயிற்று.

அதனால்தான் கேகய நாட்டுக்குச் செல்வது இராமபிரானது விருப்பம், ஆணை என்று அதனை பரதன் ஏற்றுக் கொண்டு விட்டான். ஆணையைத் தலைமேல் ஏற்றான் என்பதை, 'சேவடிப் பூவினைச் சென்னியில் புனைந்து' என்ற தொடர் காட்டுகின்றது. பரதன் ஏற்றுக் கொண்டிருப்பது இராம கைங்கர்யம்.

செய்ய எண்ணிய காரியம் நன்கு நிறைவேற வேண்டுமானால், நன் மக்கள் தமது வழிபடு தெய்வத்துக்கு 'சுக்லாம் பரதாம்' சொல்லி பிரார்த்தனை செய்து, தெய்வத் திருவடிகளில் கிடக்கும் பூக்களை எடுத்துத் தமது தலையில் வைத்துக் கொண்டு செல்வார்கள் ஆரம்பத்தில்.

அவ்வாறே, தனது இராமகைங்கர்யமாகிய காரியம் குறைவின்றி நடப்பதற்காக, பரதன் தனது வழிபடு தெய்வமாகிய இராமபிரான் திருவடிகளில் இருக்கும் மலர்களை எடுத்து, தனது தலையில் சூடிக் கொண்டான்.

இது. மேம்போக்கான பொருள். எதிர்கால நிகழ்ச்சிகளை மனத்தில் பதித்துக் கொண்டு கவனித்தால் இதன் உள்ளுறை பொருள் விளங்கும்.

தந்தை சொல்லாகிய அரசன் ஆணையை ஏற்று, இராமபிரான் கானகம் போகப்போகின்றான். அப்போது ஒரு நீண்ட ஒரு பிரிவு இந்த இருவருக்கும் 'இடையில்' ஏற்படப் போகின்றது. அப்போதும் இராமபிரானது ஆணையால்அந்தப்பிரிவைத்தாங்கிக் கொள்ள வேண்டியவனாவான் பரதன். அந்தச் சமயத்தில் பிரிவுத் துன்பத்தைத் தாங்கிக் கொள்ள வேண்டி, இராமபிரானது பாதுகையைத் தனது தலையில் தங்கவைத்துக் கொள்வான் பரதன்.

அதனுடைய முன்னறிவிப்பாக, தந்தையும் அரசனுமான தசரதனது அன்பு ஆணைக்குக் கட்டுப்பட்டு, தன்னைப் பிரிந்து செல்ல பரதனுக்கு அனுமதி தந்தான் இராமபிரான். மேலும், பரதனது வேண்டுகோளைக் குறிப்பால் உணர்ந்து, தனது சேவடிக்குப் பாதுகாப்பாக யிருக்கும் மலர் போன்ற அழகிய பாதுகைகளை, அவனுக்குக் கொடுத்தான் இராமபிரான்.

அந்தப் பாதுகைகளைத் தனது சென்னிக்கு -தலைக்கு அணியாகச் சூட்டிக் கொண்டான்: அதனால், பிரிவுத்துன்பம் இன்றிப் போனான்பரதன்

சேவடிப்பூ 'என்ற தொடர், இராமபிரானது பாதுகைகளைக் குறிக்க வந்த ஒரு அடையாளச் சொல் தொடர் என்று கொள்வதே, கவிச்சக்கரவர்த்தியின் கருத்தை ஒட்டியதாக அமையும். சென்றது எப்படி?

'இராமன் சேவடிப் பூவினைப் புனைந்து போயினான்' - அது எப்படி? பிரிந்து போவது பரதன்: பிரிந்து இருப்பது இராமபிரான், இதனை விளக்க ஒரு உவமையைக் கையாளுகின்றான் கவிச்சக்கரவர்த்தி கம்பன். அந்த உவமையில் ஒரு ஆன்மீகத் தத்துவத்தையே அடக்கி விடுகின்றான் கவிஞர் பிரான்.

கவிதையின் ஈற்றடி அந்த உவமையைத் தாங்கி வருகின்றது. 'ஓவல் இல் உயிர்பிரிந்து உடல் சென்றது' என்பதுதான் அந்த உவமை. சென்றது உடல்: இருப்பது உயிர். உலக நடை முறையில் உயிர் செல்லும் உடல் கிடக்கும். ஆனால், இங்கு உயிரை விட்டு விட்டு, உடல் பிரிந்து சென்றதைப் போல, இராமபிரானை விட்டுப் பிரிந்து பரத நம்பி சென்றுவிட்டான் என்று உவமைப் பொருத்தம் காணவேண்டும்.

செல்ல வேண்டிய உயிரை இருக்க வைத்து விட்டு, இருக்க வேண்டிய உடல் செல்லுமா? செல்லாது. அதனால் இதனை இல்பொருள் உவமையாகக் கொள்ள வேண்டும் என்பது சில உரையாசிரியர் களின் கருத்து.

**உவமைப் பொருத்தம்:**

பரத நம்பி, இராமபிரான் இந்த இருவர்களது ஆத்மீக உறவை உள்ளத்தில் இருத்திக்கொண்டு பார்த்தால், இந்த உவமையின் உண்மைக் கருத்து விளங்கும்.

இருவரும் உடலும் உயிருமாக வாழ்ந்தார்கள். யார் உடல்? யார் உயிர்? பரதன் உடல்: இராம பிரான் அதில் தங்கியிருக்கும் உயிர். உயிர், உடலை எப்படி இயக்குகின்றதோ அப்படித்தான் உடல் இயங்க வேண்டும். இயக்குவது உயிர்; இயங்குவது உடல் செயல்படுத்துவது இராமபிரான்: அவ்வண் ணமே செயல்படுவது பரதன். இராமபிரான், பரத னைப் பிரிந்து செல்ல அனுமதித்தான்: அவ்வாறே சென்றான் பரதன்.

உயிர், 'ஓவல் இல் உயிர்' எனச் சிறப்பிக்கப் பட்டுள்ளது ஓவல்—நீங்குதல்: பிரிதல், பிரிதல் இல் லாத—நீங்குதல் இல்லாத உயிர். எதனை விட்டுப் பிரியாத உயிர் உடலை விட்டுப் பிரியாத உயிர், இங்கு அத்தகைய உயிராகயிருப்பது இராமபிரான்.

இராமபிரான் யார்? பரமான்மா; பரதன் யார்? ஜீவான்மா. பரமான்மாவுக்கு ஜீவான்மா உடல். பரமான்மா, ஜீவான்மாவைவிட்டு என்றும் நீங்காது. அதாவது பிரியாது பரமான்மா. இப்போது இராம பிரானாக மூர்த்தீகரித்துள்ளது திருவுருவத்துடன், வந்துள்ளது பரதன் ஜீவான்மாவாகச் செயல் படுகி ன்றான்.

ஜீவான்மா, உலகியல் மாயையில் ஈடுபட்டால், அப்போது பரமான்மாவை விட்டுப் பிரிய நினைக்கும் அப்பிரிவை பரமான்மாவும் அனுமதிக்கும். அப்பிரிவு. உயிர் பிரிந்து உடல் செல்வதாகத்தான் நடக்கும். அப்படித்தான் இராம பரத பிரிவு நடந்துள்ளது.

ஜீவான்மா, பரமான்மாவை விட்டு வெளியில் பிரிவதாகயிருந்தாலும், அந்தராத்மாவாக நின்று, பரமான்மா ஜீவான்மாவை விட்டுப் பிரியாமல்தான் இருக்கும். 'ஓவல் இல் உயிர்' என்ற தொடர், இந்த, இறைத்தத்துவத்தை உணர்த்துகின்றது.

பரதன், இராமனை விட்டுப் பிரிந்தாலும், பாதுகையின் வடிவில் பரதனை விட்டுப் பிரியாமல் இருக்கின்றான் இராமபிரான். அதனால்தான் இராமபிரான் ஓவல் இல் உயிர் எனப்பட்டான்.

உயிர் இல்லாமல் உடல் இயங்கமுடியாது. உடல் சென்றது என்று சொன்னால், அதன் செலவுக்கு, உயிர் உடலில் தங்கியிருக்கின்றது என்றுதான் பொருள். இதனை. ஆவி அங்கு அவன் அலாது இல்லை என்ற தொடர் விளக்குகின்றது:

இராமபிரானைத் தவிர வேறு உயிர்பரதனுக்கு இல்லை. அதனால். பாதுகை. இராமபிரானாகத்தன் தலையில் தங்கியிருக்க பரதன் வெளியளவில் பிரிந்து சென்றான்.

இறைவன் எங்கும் எதிலும் எப்போதும் நீங்காது தங்கியிருப்பதை 'உடல்மிசை உயிர் எனக் கரந்தெங்கும் பரந்துளன்' என்று நம்மாழ்வார் கூறியுள்ளார். இறைத்தத்துவத்தை உணர்த்த வந்த ஆழ்வார், இந்தப் பேருண்மையை உணர்த்துவதற்கு 'உடலும் உயிரும்' என்ற உவமையையே எடுத்தாண்டிருப்பது இங்கு சிந்திக்கதக்கது.

## இராமபிரானும் பரத நம்பியும்:

இந்த இருவரும் பிறப்பால் சகோதரர்களாக யிருந்தாலும், சிறப்பால் உயிரும் உடலுமாக அமைந்து செயல்பட்டார்கள்.

உயிர், உடலைத் தன் வயங்கொண்டு, அதனை என்னது என்று அபிமானித்திருக்கின்றது. அது போல, இராமபிரானும் பரதநம்பியைத்தன் வயங்கொண்டு, அவனை என்னவன் என்று அபிமானித்துப் பேணி வருகின்றான்.

உடல், தன்வயமின்றி, உயிரின் வயத்த தாய்த்தன் பொருட்டன்றி அவ்வுயிரின் பொருட்டே தொழிற்படுகின்றது. அதுபோல, பரதநம்பியும், தன்வயமின்றி. இராமபிரான் வயமாய்த்தன் பொருட்டன்றி அவன் பொருட்டாகவே பணிபுரிகின்றான்.

இது, பகவானும் பக்தனுமாக ஒழுகும் பரதன் கொண்ட மெய்ந்நெறி ஒழுக்கத்தை விளக்குகின்றது.

'ஓவல்இல் உயிர் பிரிந்து உடல் சென்றது' என்ற உவமை, மேலும் ஓர் உண்மையை உணர்த்து கின்றது. சென்றது உடல். உடல் என்பது பரதன் யாருடைய ஆணையால் சென்றான்? தந்தை தசரதன் செல்வதற்கு ஆணையிட்டான் அந்த ஆணைக்கு இராமபிரானுடைய அங்கீகாரம் கிடைத்தது. அதனால் பரதன் சென்றான்.

உடல், உயிரின் பொருட்டுதானே செயல்படும்! அப்படி, இராமபிரான் அனுமதித்ததால் தான், அந்த இடத்தை விட்டு பரதன் சென்றான்.

இதனை வியுறுத்திக் காட்டுவது, 'இராமன் சேவடிப் பூவினைச் சென்னியில் புனைந்து போயி னான்' என்ற தொடர்.

வலியுறுத்துவது எப்படி? தந்தை தசரதன், தன் மைந்தனைப் பார்த்து, 'நீ பூண் ஒளிர் மார்பினனாய்க் கேகயம் புகப் போதி' என்று அன்புக்கட்டளை இட்டான். ஆபரணங்கள் அணிந்து ஒளி வீசும் மார்பினனாகப் பரதன் செல்ல வேண்டும் என்பது தந்தையின் விருப்பம். அனுப்புபவனும் மன்னன்: வரவேற்பவனும் மன்னன்: அனுப்புபவன் தந்தை என்ற உறவினன்: வரவேற்பவன் பாட்டன் என்ற உறவினன். அதனால், அயோத்தி அரசனாகிய தந்தையிடமிருந்து, கேகய நாட்டு மன்னனாகிய பாட்டனிடம் செல்லும் பரதன், உடல் அலங்காரத்துடன் ஆடம்பரமாகச் செல்ல வேண்டும் என்பது தசரதன் ஆணை.

கேகயத்துக்குப் புறப்பட்டான் பரதன். எப்படி? தந்தையின் ஆணைப்படி அல்ல! தனக்கு உயிராக விளங்கும் இராமபிரானது விருப்பத்தின்படி, அதனால், இவன் மார்பு, ஆபரணத்தை வெறுத்தது சென்னிதலை, இராமன் சேவடிப் பூவினைப் புனைந்தது. மார்பின் ஆபரணம் உலகியல்: சென்னியின் சேவடிப்பூ ஆன்மீகம். தசரதனின் மைந்தனாகச் செல்லவில்லை: இராமபிரானுடைய பக்தனாகச் சென்றான் பரதன்.

'சேவடிப் பூவினைப் புனைந்த சென்னியனாய்ப் போயினான்' என்பது, பரதன், பாதுகை பக்தனாகத் தான் பாட்டன் வீட்டுக்குச் சென்றான் என்பதைத் தெளிவாக்குகின்றது.

(5)

# பங்கயில் குணத்தான்

**உறவு :**

மண்ணுலகில் பிறந்த மக்கள் ஒவ்வொருவரும் ஏதேனும் ஒரு உறவு முறையுடன்தான் வாழ்க்கை நடத்துகின்றனர். பிறப்பால் ஏற்பட்ட உறவுக்குத் தரும் முக்கியமே, உலகில் ஒருவரோடு ஒருவரை நெருங்க வைக்கின்றது.

இந்த உலகியல் உறவுக்கு அடிப்படை உடல் தொடர்பு. உடல் அநித்தியமானது. அதனால், இந்த உறவும் அநித்தியமாகலாம். ஆத்ம உறவு நித்தியமானது. 'உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது' என்று துணிந்து கூறும் உறுதியுடையது ஆத்ம உறவு. இந்த உறவுதான், இராமபரதரிடை நிலவியது.

தசரத பரதரிடை இருந்தது, தந்தை மைந்தன் என்ற உடல் உறவு. தசரதன் பரதனைத் தனது மைந்தனாகத்தான் கருதினான். அதற்கு மேல், பரதனைப் பற்றி தசரதனால் அதிகம் மதிப்பிட முடியவில்லை.

இருப்பினும், பரதன் கேகயம் புகப் போகும் போது, இராமன் சேவடிப் பூவினைப் புனைந்து கொண்டு சென்றதை, தசரதன் பார்த்திருக்க வேண்டும் அதனால், 'பரதன் உலகப் பற்றற்றவன்' என்றும் தசரதன் உணர்ந்திருக்கலாம்.

தான் உணர்ந்ததை, தசரதன் கைகேசியிடம், வாதாடிக் கொண்டிருக்கும் போது, காட்டுகின்றான் எப்படி? கைகேசி 'என் சேய் அரசு ஆள்வது: சீதை கேள்வன் போய் வனம் ஆள்வது' என்று இரு.வரம் கேட்கின்றாள் தசரதனிடம். அப்போது, 'கொள் ளான் நின் சேய் இவ்வரசு' என்று தசரதன் கூறு கின்றான். இப்படிச் சொல்வதற்குக் காரணம், பர தனது உலகப் பற்றற்ற தன்மையை. தசரதன் உணர் ந்திருந்ததேயாகும். உணர்ந்தது, பரதன் கேகயம் போகும் போதிருந்த அவனது தோற்றத்தைப் பார்த்ததால்தான்.

இராம பரத உறவு நித்தியமான ஆத்ம உறவு. அதனால், பரதன் உலகப்பற்றை அறவே வெறுத்தவ னானான். இதனைத் தசரதன் உணர்ந்து கொண்ட தனால்தான், 'கொள்ளான் நின் சேய் இவ்வரசு' என்று துணிந்து கூறினான்.

நித்தியமான ஆத்ம உறவின் பெருமையை உணர்ந்த தசரதன். பிறப்பினால் அமையும் உடல் உறவு அநித்தியமானது என்பதையும் சொல்லிக் காட்டி விட்டான். அது எங்கு? எப்போது?

தெய்வக் கற்பினளான கைகேசி, தீயமந்தரை யின் பேச்சால், தனது தூய சிந்தை திரிந்தவளா யினாள். திரிந்தது தூய்மை: புகுந்தது தீமை இத்த கைய தீய உள்ளத்தினளாய், தனது கணவனாகிய தசரதனிடம் வாதாடி இரண்டு வரங்களைப் பெற்றுக் கொண்டுவிட்டாள் கைகேசி.

பெற்றவரங்கள், இராமன் காடுஆள்வது; பரதன் நாடு ஆள்வது. பெற்றவள் மனைவியாகிய கைகேசி, கொடுத்தவன் கணவனாகிய தசரதன். தசரதனோ: மைந்தனலாது (இராமன்) உயிர் வேறு இலாத மன்னன். 'என் மகன், என் கண், என் உயிர்' என்று சொல்லும் அளவிற்கு இராமபிரானிடம் பாசம் கொண்டவனாக வாழ்ந்தவன் தசரதன்.

அதனால், இராமபிரானைக் காட்டுக்கு அனுப்புவதை, தனது உயிரைப் பிரிப்பதாகவே உணர்ந்து வருந்தினான் தசரத மாமன்னன். இந்தப் பிரிவைச் செய்தவள், மனைவியென்ற உலகியல் உறவு கொண்ட கைகேசி. இவள் இப்படி வரம் கேட்கக் காரணம், கைகேசி, தனது மகன் பரதன் மேல் கொண்ட பாசம்.

தனது உயிர்ப் பிரிவுக்கு—இராமன் காடு செல் வதற்குக் காரணமாக அமைந்த இந்த உறவுகளை வேண்டாம் என்று வெறுத்து ஒதுக்குகின்றான் தசரதன்.

அநித்தியமான இந்த உறவுகளை ஒழிக்கும் தனது கருத்தை, தன்னைப் பார்க்க வந்த வசிட்ட மாமுனிவனிடம் வெளியிடுகின்றான் தசரதன்.

**"சொன்னேன் இன்றே; இவள் என்**
**தாரம் அல்லள்; துறந்தேன்;**
**மன்னே ஆவான் வரும் அப்**
**பரதன் தனையும் மகன் என்று**
**உன்னேன்; முனிவா! அவனும்**
**ஆகான் உரிமைக்கு என்றான்"**

என்பது தசரதன், உலகியல் உறவுகளை வெறுத்து ஒதுக்கி ஒழித்துக் கூறிய துறவு உள்ளக் கூற்றாகும். நித்தியமான உறவு எது? என்பதை இந் நிகழ்ச்சியின் மூலம் உணரலாம்.

---

தாரம் – மனைவி; உன்னேன் - நினைக்க மாட்டேன்.

**தொடர் நிகழ்ச்சிகள்:**

பரதன் கேகய நாட்டுக்குச் சென்ற பிறகு, கோசல நாட்டுத் தலைநகராகிய அயோத்தியில் பல நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்தன. அவ்வளவும், யாரும் எதிர்பாராத துன்ப நிகழ்ச்சிகளே.

பரதன் அயோத்தியிலேயே இருந்திருந்தால், இந்தத்துன்ப நிகழ்ச்சிகள் எதுவும் நடந்திருக்காது நல்லவன் ஒருவனை, அவனது விருப்பத்துக்கு மாறாக நாட்டை விட்டு அகற்றி விட்டால், அங்கு துன்பங்கள்தான், மலியும் என்பதற்கு இது எடுத்துக்காட்டு போலும்: நிகழ்ச்சிகளுக்கு அடிப்படைக் காரணம் என்ன?

தசரதன், நல்லறமூர்த்தி வாய்மை மன்னன் 'வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்.' 'உம்பரும் உலகும் பரவும் மெய்யினுக்கு உயிர் அளித்து உறுபுகழ் படைத்தோன்' என்று பலவாறாகப் பலராலும் போற்றிப் புகழப் பெற்ற மாபெரும் மன்னன்.

நாராயணனையே தனது மைந்தனாகப் பெற்ற பெரும் புண்ணியவான் தசரதன். வசிட்ட பகவானையே தனது ஞான குருவாக—ஆசாரியனாகப் பெற்ற பெரும் பாக்கியவான் அவன்.

எல்லாரும், எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தி, வாழ்க்கையில் எந்தக் குறையும் இன்றி இன்புற்று வாழும் முறையில், நல்லாட்சி நடத்திய சக்கரவர்த்தியாக விளங்கியவன் அவ்வாய்மையாளன்.

தசரதன் அத்தகைய உயர்பெரும் பாக்கியசாலியாகயிருந்தும், அவனது வாய் மொழியே, அயோத்தியில் பரதன் இல்லாத காலத்து நடந்த துன்ப நிகழ்ச்சிகளுக்கு மூல காரணமாயிற்று.

**வாய்மொழி:**

ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயால் சொலல் (குறள் 139)

என்பது வள்ளுவம். 'தவறியும் கூட தீமை தரத்தக்க வாய்மொழி கூறுதல் ஒழுக்கம் உடையவர் களால் இயலாது' என்பது இதன் பொருள்.

தசரத மன்னன் மாபெரும் ஒழுக்க சீலன். அதனால். இவன் வாய் மொழி, பிறருக்கு நன்மை பயக்குமேயன்றி, யாருக்கும் தீமை பயக்காது.

ஆனாலும், நாட்டுமக்கள் பலர். எதிர்பாராத துன்பத்திற்குள்ளாகி வருந்தும் நிலைக்கு மூல காரணமாயிற்று அவ்வாய் மொழி. ஏன்? எவ்வாறு?

கேகயர் கோன்மகள் கைகேசி. அவளைத் தசரதன், தன் மனைவியாக ஏற்றுக் கொள்ளும் போது, ஒரு வாய் மொழி கொடுத்திருந்தான். 'கைகேசியின் மகனுக்குக் கோசல நாட்டு அரசு உரிமையைக் கொடுப்பது என்பதுதான் அந்த வாய் மொழி.

இந்த மொழியை, வாய்மையாக்குவதற்கு வாழ்க்கையில் ஒரு சோதனை ஏற்பட்டு விட்டது தசரதச் சக்கரவர்த்திக்கு. சோதனை என்ன?

கேகய நாட்டு மன்னனிடம் உறுதிமொழி கொடுக்கும்போது,கோசலைக்கோ,சுமத்திரைக்கோ, மகப்பேறு எதுவும் இல்லை. அதனால் கைகேசியின் மகனுக்கு அரசு கொடுப்பதில் எந்தத் தடையும் இருக்காது என எண்ணியிருந்தான் தசரதன்.

ஆனால், தன் மைந்தர்களாகத் தோன்றிய நால்வரில், மூத்தமகன் இராமன், கோசலையின் திருக்குமாரனானான். மூத்தவனுக்குத்தான் அரசு. அதுதான் மரபு, இதுதான் இரகு வம்சத்து முறை.

**தர்மசங்கடம்**

தசரதன், கேகயமன்னனுக்குத் தந்த வாக்குறுதியையும்வாய்மையையும் காப்பாற்றவேண்டும்: அரச மரபையும் காப்பாற்றவேண்டும். வாக்குறுதியின் படி அரசு. கைகேசியின் மகனுக்குச் செல்லவேண்டும்: மரபுப்படி.கோசலை மகன் இராமனுக்குச் செல்லவேண்டும் அரசு. என் செய்வது! தர்மம் சங்கடத்தில் உள்ளது தசரதனிடத்தில்.

வாய்மையைக்காத்தால் அரச மரபுத் தர்மம் போகும்: மரபுத்தர்மத்தைக் காத்தால், வாய்மைத் தர்மம்-வாய்மையாகிய சிறந்த அறம் சிதையும்.

தசரதச் சக்கரவர்த்தி நீண்ட நேரம் சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்தான். என்ன முடிவு? வாய்மையும் காப்பது அரச மரபையும் காப்பது எப்படி?

கைகேசியின்மகனுக்குஅரசபதவி. இதுவாய்மை காக்கும் வழி: இராமனுக்கு இராச்சியம். இது மரபு காக்கம் வழி. இராமனைக் கைகேசியின் அந்தப் புரத்திலும். பரதனைக்கோசலையின் அந்தப் புரத்திலும் வளர்ப்பது என்பதுதான் அந்தமுடிவு

அவ்வாறே வளர்க்கச் செய்தான் தசரதன் இதில் வெற்றியும் கண்டான் அம் மன்னன், எப்படி?

கைகேசி இராமனை 'என் மகன்' என்று ஏற்றுக் கொண்டால் போதும் வாய்மையையும் மரபையும் காத்து விடலாம் என்பது தசரதன் திட்டம், அவ்வாறே நடந்தது.

**''விராவரும் புவிக்கெலாம் வேதமே அன்ன**
**இராமனைப் பயந்த எற்கு இடர் உண்டோ?'**

**என்றும்,**

கோசலைக்கு - மைந்தனேல், பன்னரும் பெரும் புகழ்ப் பரதன்' — என்றும் கைகேசி ஏற்றுக் கொண்டு விட்டாள்.

---

புவி—பூமி: (நிலம்) எற்கு—எனக்கு: இடர்—துன்பம்

இது, தசரத சக்கரவர்த்திக்குக் கிடைத்த வெற்றி இதன் மூலம் தர்ம சங்கடத்தினின்று தப்பித்துக் கொண்டும் விட்டான் அம் மன்னன். இராமபிரானுக்கு முடி சூட்டினால், அரச மரபும், அவனைத் தன் மகனாகக் கைகேசி ஏற்றுக் கொண்டு விட்டதால் வாய்மையும் ஒரு சேரக் காக்கப்படும்.

இந்தத் திட்டம் செயல் பட்டால், அரண்மனையில் அரச வாழ்வினர் அனைவர்க்கும் ஆனந்தம். நாட்டு மக்கள் எல்லோருக்கும் மகிழ்ச்சி.

ஆனால், அந்த ஆனந்தத்துக்கும் மகிழ்ச்சிக்கும் தடையாக ஒருத்தி வந்தாள். அவள்தான் கொடு மனக் கூனி அவள், தனது, தீய திட்டத்தைக் கைகேசியின் மூலம் நிறைவேற்ற எண்ணினாள்: எண்ணத்தில் வெற்றியும் கண்டாள். வெற்றிக்கு, தசரதன் சம்பராசுரப் போரின் முடிவில் கைகேசிக்குக் கொடுத்திருந்த இரண்டு வரங்களை ஆயுதமாக்கிக் கொள்ள நினைவு படுத்தினாள். இரவில், தீமை, கைகேசி மூலம் தசரதனிடம் வெற்றிக் கண்டுவிட்டது

தசரதன் வாய்மை அறத்தில் வாழ்ந்ததால் கொடுத்த வரத்தை மறுக்க இயலவில்லை. அதனால், இறுதியில், 'ஈந்தேன்! ஈந்தேன் இவ்வரம்; என் சேய்வனம் ஆள; மாய்ந்தே நான் போய்வான் உலகு ஆள்வன்; வசைவெள்ளம் நீந்தாய், நீந்தாய் நின் மகனோடு நெடிது' என்று கைகேசிக்கு வரம் கொடுத்து விட்டான் தசரத மன்னன்.

நாட்டு மன்னனின் இறுதி நிலை, இராமபிரான் காடு செல்லுதல் முதலிய துன்ப நிகழ்ச்சிகள், அரண்மனை மாந்தர்களையும், நாட்டு மக்களையும் வருத்தக் கடலுள் ஆழ்த்தி வைத்து விட்டது.

இது எதுவும் பரதனுக்குத் தெரியாது.

**கோசலைப் பிராட்டியும் இராமபிரானும்**

'குழைக்கின்ற கவரியுடனும் கொற்றவெண் குடையுடனும், மௌலி கவித்தனனாய்த்தன் மகன் வருவான்' என்று தழைக்கின்ற உள்ளத்தினளாய், இராமனை எதிர் பார்த்துக்கொண்டிருந்தாள் தாய் கோசலை. அத்தகைய உள்ளத்தினள் முன், இராமன் தமியனாய்ப் போய் நின்றான். இது, எவ்வளவு பெரிய ஏமாற்றமாகயிருந்திருக்கும் கோசலைக்கு. 'நாளை இராமனுக்கு முடி சூட்டு விழா' என்ற நற் செய்தி நேற்று வந்தது. இன்று அந்த மகன் இராமன் 'மௌலிபுனைந்திலனாய், குஞ்சி மஞ்சனப் புனித நீரால் நனைந்திலனாய்' வந்து நின்றால் தாய், கோசலையின் உள்ளம். எவ்வளவு ஐயப்பாட்டுடன் துடித்திருந்திருக்கும்:

தனது உள்ளத் துடிப்பை, 'நினைந்தது என்? இடையூறு உண்டோ நெடு முடி புனைதற்கு?' என்ற ஒரு கேள்வியின் மூலம் வெளிப்படுத்தினாள் கோசலை. அதற்கு, இராமபிரான் கூறிய விடையில் இராமபிரானுடைய 'அந்தமில் அருங்குணமும், பரதனது பெருங்குணமும் விளங்குகின்றன.

**'மங்கை அம்மொழி கூறலும், மானவன்**
**செங்கை கூப்பி, 'நின் காதல் திருமகன்.**
**பங்கம் இல் பெருங்குணத்து எம்பி பரதனே,**
**துங்க மாமுடி சூடுகின்றான்' என்றான் (1608)**

இராமபிரானது திருவுள்ளப் பாங்கினை அப்படியே படம் பிடித்துக் காட்டுகின்ற ஒரு அருமையான கவிதை இது.

மானவன்—பெருமை உடையவன்: இராமபிரான் தாயார் கேட்ட கேள்விக்கு விடைகூறும்முன், இராமபிரான் தனது, சிவந்த கைகளைக் கவித்து வணங்கினான். பிறகு விடை கூறத் தொடங்குகின்றான்.

**நின் காதல் திருமகன் :**

விடையில் தான் முடி சூடவில்லை என்ற எதிர் மறைப் பொருள் இல்லை. 'உனது மகன் தானே முடி சூட வேண்டும் என்று எண்ணுகின்றாய்! ஆம்! நின் காதல் திருமகன் தான், முடி சூடிக் கொள்ளப் போகின்றான்' என்ற உடன்பாட்டுப் பொருளில் விடை அமைந்திருப்பதே ஒரு தனி அழகு. கைகேசியின் மகன் பரதனை, 'உனது அன்பு மகன்' என்று கோசலையைப்பார்த்து இராமபிரான் கூறுகின்றான், அது எவ்வளவு பெரிய அருங்குணம்! தனக்கு வர வேண்டிய ஒரு பேரரசு முடியை, எவன் ஒருவன், பெற இருக்கின்றானோ, அவனைத் தனது தாயின் அன்பு மகன்' என்று கூறுவதென்றால், அந்தத் தூய மனப்பக்குவத்தை என்ன என்று வியப்பது!

'பரதனைக் கோசலையின் அன்பு மகன்' என்று இராமபிரான் கூறுவதன் மூலம், பரதன் கோசலையின் அந்தப்புரத்தில் தான் வளர்ந்தான் என்பது உறுதி ப்படுகின்றது. 'மைந்தனெல் பன்னரும் பெரும் புகழ்ப் பரதன் கோசலைக்கு' என்று கைகேசி கூனி யிடம் சொல்லியிருந்ததும், இதனை மேலும் உறுதிப் படுத்துகின்றது.

'நின் காதல் திருமகன் என்ற இந்தத் தொடர், இராமபிரான் திருவுள்ளத்தினின்றும் உதித்து வந் தது. அதனால், அந்தத்திருவுள்ளத்தை ஒட்டி, இதன் ஆழ் பொருளைக் காணவேண்டும்.

தெய்வச் சிறப்பு, பெற்ற ஒருவருக்குத் தான் 'திரு' என்ற அடை மொழி சேர்க்க வேண்டும். திரு மகன் என்பது பரதனது தெய்வச் சிறப்பைக் குறிக் கின்றது. 'நின் காதல் மகன்' தனது பெற்ற தாய் கைகேசியைக் காட்டிலும் உன்னிடத்தில் அதிக அன்பு கொண்ட மகன்.

அது போன்று, மகனாகப் பெற்ற என்பால் காட்டும் அன்பை விட, உன்னால் அதிக அன்பு காட்டப்படுகின்ற மகன். இவ்வாறு பொருள் கொள்ளுதற் கேற்ற சொற்களைக் கொண்ட தொடர் இது.

பரதன் பால் அமைந்த தெய்வச் சிறப்பு என்ன? தாய்-மகன் இருவர் பால் அமைந்த ஆழ்ந்த அன்புக்குக் காரணம் என்ன?

பரதநம்பி, அநித்தியமான உடல் தொடர்புடைய உறவு முறையைக் காட்டிலும். நித்தியமாயுள்ள ஆத்மத் தொடர்பான உறவு முறையையே, சிறந்ததென மதிக்கும் மெய்ந்நெறி ஒழுக்கினன். அதனால், தனக்குப் பரமாத்மாவான இராமபிரானை மகனாகப் பெற்றிருக்கும் பகவத் சம்பந்தம் பற்றி, தன்னை பெற்ற கைகேசியை விட, கோசலையிடத்தில் அதிக அன்பு காட்டினன் பரதன். அதற்கு ஏற்ப, கொண்ட கடனைக் குறையாது கொடுப்பாரைப் போல, கோசலையும் பரதனிடம் பேரன்பு செலுத்துபவளானாள்.

இதுதான். ஆழ்ந்த அன்புக்கும், பரதனது தெய்வச் சிறப்புக்கும் காரணமாகும்.

இந்தக் கருத்து, பின்னால், குகனிடத்தில் கோசலையை அறிமுகப் படுத்தும் போது, "............ வேந்தர்வைகும்

**முற்றத்தான் முதல் தேவி: மூன்றுலகும்**
**ஈன்றானை முன்னீன்றானைப்**
**பெற்றத்தால் பெருஞ்செல்வம், யான் பிறத்தலால்**
**துறந்த பெரியாள்'**

என்று பரதன் கூறுவதன் மூலம், மேலும் உறுதிப்படுகின்றது.

**எம்பி:**

காதல் திருமகன் யார்? இதற்கு விளக்கம் கொடுக்கின்றான் இராமபிரான். எனது தம்பி. கோசலை, பரதனைத் தனது சொந்த மகனாக ஏற்றுக்கொண்டதால்தான். இராமபிரான் பரதனை (எம்பி) எனது தம்பி என்று கூறுகின்றான். தான் காட்டுக்குச் செல்லுமாறு தனக்கு உத்தரவிட்ட கைகேசியிடம், 'என்பின்னவன் பெற்றசெல்வம் அடியனேன் பெற்றதன்றோ? என்று கூறி வந்தவனல்லவா இந்த இராமன், அதனால் தம்பி முடி சூடிக் கொள்வதில் தான் அடையும் மகிழ்ச்சியைக் காட்டுகின்றான் இராமபிரான்.

முடிசூடிக் கொள்ளயிருக்கும் தம்பியின் தகுதியினை மேற்கொண்டு விவரிக்கின்றான் இராமபிரான்

**பங்கம் இல் குணத்து எம்பி:**

பரதனிடம் அடங்கியுள்ள நற்குணங்கள் அனைத்தையும் கண்டவன் இராமபிரான். அரசாட்சி செய்பவன் எவ்வளவு நற்குணத்தினனாகயிருந்தாலும், சில சமயம், சிலரால் அவ்வரசன் தூற்றப்படுபவனாகவும் இருக்கலாம். அந்த அரசனுடைய குணத்தில், குற்றம் காணும் சூழ்நிலை ஏற்படலாம். 'எந்த விதமான குற்றமும் இல்லாதவன் எனது தம்பி' எறுன்தெரிவித்தான் இராமபிரான் (பங்கம்–குற்றம்)

எந்த விதமான குறையும் குற்றமும் இல்லாத குணத்தினை உடையவன் தான், அரச பதவியில் அமரவேண்டும் என்பது குறிப்பு. பரதன் அத்தகைய குணத்தினன். அதனால், 'அவன் துங்க மாமுடி சூடயிருக்கின்றான்' என்று கூறி' தனது மகிழ்ச்சியை வெளிப்படுத்தினான் இராமபிரான். (துங்கம் — உயர்வு)

**நிறை குணத்தவன்:**

இராமபிரான் கூறிய, பரதனின் முடி சூட்டு விழாவுக்கு நல்வாழ்த்துக் கூறுவதாக அமைகின்றது அடுத்தகவிதை.

**'முறைமை அன்று என்பது ஒன்று உண்டு; மும்மையின்
நிறை குணத்தவன்; நின்னினும் நல்லனால்;
குறைவிலன்' எனக் கூறினாள் — நால்வர்க்கும்
மறு இல் அன்பினில் வேற்றுமை மாற்றினாள்'** (1609)

பரத நம்பியைக் கோசலைப் பிராட்டிதான், முழுமையாக வளர்த்தாள் என்பதை இந்தக்கவிதை நன்றாக உறுதிப் படுத்துகின்றது.

கோசலப் பேரரசின் சிம்மாசனம் ஏறுவதற்குப் பரதனுக்குள்ள தகுதியை எடுத்துக் கூறுகின்றாள் கோசலாதேவி. ஆனால் உலகத்தார் சொல்லும் ஒன்றை முதலில் எடுத்துப் பேசுகின்றாள். 'மூத்தவன் இருக்க இளையவன் முடி சூடுதல் முறைமை அன்று' என்பது உலகினரின் வழக்கு மொழி. அதை ஏற்க வேண்டும் என்பதும் கோசலையின் கருத்து அல்ல.

கோசலை, பரதனை வளர்க்கும் காலத்தில், அவனது பெருங்குணங்களில் ஈடுபட்டு, தான் பெற்றெடுத்த மகனாகிய இராமபிரானோடு பரதனை ஒப்பிட்டுப் பார்த்திருப்பாள் என்பதை இக் கவிதை பொருள் தெரிவிக்கின்றது.

தனது மகன் பெறவேண்டிய அரச பதவியை, மாற்றாள் மகன் பெறயிருப்பதற்கு மகிழ்ந்து, அதற்கு ஆசீர்வாதமும் செய்கின்றாள் என்றால், அந்த, கோசலைப் பிராட்டியின் பேருள்ளத்தை என்ன என்று வியப்பது!

அரசபதவிக்குரிய பரதனது தகுதியை மூன்று வகையாகப்பிரித்துக் கூறுகின்றாள் கோசலைத்தாய்

"நடுவு நிலைமை, நின்னினும் நல்லன், குறை வின்மை' என்பன அந்த மூன்று தகுதிகள்.

'நிறைகுணம்' - நாட்டை ஆட்சி செய்வதற்கு உரிய நிறைவான குணம். இக்குணம் நடு நிலை எனப் படும். ஆட்சியாளர்க்கு இக்குணம் மிகமிக இன்றி யமையாதது. நிறைகுணத்தவன் - குணங்களால் நிறைந்தவன் என்றும் பொருள் கொள்ளலாம். 'நீதி எனும் பேராறு புக மண்டும் பள்ளம் எனும் தகை யான்' என்று விசுவாமித்திரமுனி கண்டது போன்று கோசலைத் தாயும் பரதனைக் கண்டாள் எனக் கொள்வதும் பொருத்தமே.

அப்படி, "நிறைகுணத்தவன் பரதன்" என்று சொல்லும் போது, இராமபிரான் சொன்ன 'பங்கமில் குணத்து எம்பி' என்ற கருத்தையும் கோசலைப் பிராட்டி ஏற்றுக்கொண்டவளானாள்.

பங்கமில் குணத்தவனாகப் பரதன் விளங்குவ தால், அவன் நின்னினும் நல்லன் என்றாள் இராம பிரானுடைய தாய். பெற்ற மகனது குணத்தையும் மாற்றாள் மகனது குணத்தையும் ஒப்பிட்டுப் பார்த் திருந்தால்தானே, இவ்வாறு கூற முடியும்.

**நின்னினும் நல்லன் :**

"நீ சுவதந்திரன் : உன்னை நியமிக்கும் பரன் ஒருவன் இல்லாதவன்: உன்னை அடைந்தாரிடத்தில் உனக்குள்ள அபிமானத்தால் அவர் பிழைகளைப் பாராதவன். அதனால், நீ ஒரு சமயம் நடுநிலைமை தவறி, வேண்டியவாறு ஆட்சிபுரிபவனாகவும் இருக்கலாம். ஆனால், பரதனோ, பகவத் பரதந்தி ரன்: அவனை நியமிக்கும் பரன் ஒருவனை உடையவன்: ஒருவரையும் என்னவர் என்று எண்ணாதவன். அதனால், தன்னலங்

---

சுவதந்திரன் - தன்னுரிமையாளன்: பரதந்திரன் - தலைவனைச் சார்ந்து நடப்பவன்.

கருதாதவனாய் நடுநிலைமை சிதையாமல் ஆட்சிபுரிய வல்லவன். ஆதலால் உலகத்தார்க்கெல்லாம் பரதன் நின்னினும் (உன்னைவிட) நல்லவனாவான், அவன் வல்லான்: நல்லான். என்பது 'கோசலைப் பிராட்டியின் கருத்து.

இந்தப்பிராட்டிக்கு இவ்வளவு உண்மை விளங்கியிருக்குமோ என்று ஐயம் கொள்ள வேண்டா. இவள் யார்? அதனை எண்ணிப் பார்க்க வேண்டும்.

'ஒரு பகல் உலகு எலாம் உதரத்துள் பொதிந்து,
அருமறைக்கு உணர்வு அரும் அவனை அஞ்சனக்
கருமுகிற் கொழுந்து எழில் காட்டும் சோதியை
திருஉறப் பயந்தனள் — திறம் கொள் கோசலை.'

என்ற அளவில் உலகத்தைத் தன் வயிற்றில் தாங்கியவனை—நாராயணனை — தனது வயிற்றில் தாங்கியவள் அல்லவா இந்தத் திறம்கொள் கோசலை தெய்வத் தொடர்பு பெற்றவள் ஆகையால், எல்லா உண்மைகளையும் உணர்ந்தவள் ஆவாள் கோசலைப் பிராட்டி.

மேலும் 'எனக்கு நீ நல்லை: நின்னினும் அவன் எனக்கு நல்லன். நீ எனக்குத் திருமகனாம் நிலையில் நல்லை: அவன் எனக்குக் காதல் திருமகனாம் நிலையாலும் தொண்டனாம் நிலையிலும் நல்லன்? எனவும் பொருள் கொள்ளலாம்.

இதற்கு மேலும். 'உனக்கு நீ நல்லை;' உன்னிலும் அவன் உனக்கும் நல்லன், இதனால், நீ, ஒரு வேளை தற்காப்பிற் பராமுகமாய்' 'உனக்கு நன்மை விளைவித்துக்கொள்ளா திருக்கவும்கூடும். அப்போது இவன், உனக்கு எந்த வகையிலும் கெடுதல் நேராதபடி, உன்னையே மிகவும் பேணி. நன்மையே விளைவிப்பவன்' என்று உணரலாம். இவ்வாறும் பொருள் கொள்ளலாம். அவ்வளவு நல்ல தொடர் இது.

**குறைவிலன் :**

குறை, தன்னளவில் நிற்பது: குற்றம் பிறரைத் துன்பத்துக்குள்ளாக்குவது. மயக்கம்தரும் மதுவை அருந்துவது ஒருவனது குறை: பிறர் பொருளைத் திருடுவது ஒருவனது குற்றம். சிலப்பதிகாரத்துக் கோவலன் குற்றம் அற்றவன்: ஆனால், தனது காதல் மனைவியைக் கவனியாது மாதவிபால் சென்றது அவனுடைய குறை. அக்கால அரசியல் சட்டப்படி பொது மகளிரிடம் செல்வது குற்றம் அல்ல.

ஆட்சியில் அமர்பவன், குற்றமற்றவனாக மட்டும் இருந்தால் போதாது. "தன்னளவில் எந்தக் குறையும் இல்லாதவனாகவும் இருக்கவேண்டும். மனிதனிடத்துக் குறை வருவதற்குக் காரணம், ஐம்புலன் இன்பங்களை ஆரத்துய்க்க வேண்டும் என்ற அளவு கடந்த ஆசையே.

பரதன், புலனடக்கம் மிகுந்தவனாகையால், அந்த வகையில் எந்தக் குறையும் அவனிடம் வாராது. குறைவற்ற நிறைவானவன் பரதன்.

"இராமா, உன்னை, கூனிபோன்றார் சிலர் 'ஆடவர் நகைஉற, ஆண்மை மாசுற, தாடகை எனும் பெயர்த்தையலாள்பட கோடிய வரி சிலை இராமன்' என்று குறை கூறுவர். ஆனால் பரதன் அவ்வாறு ஒருவராலும், ஒரு குறையும் கூறப்படாதவன்" என்ற கருத்தாலும், "குறைவிலன்" என்று கோசலை கூறியிருக்கலாம்.

மாற்றாளின் மகனது நிறைவை, மறைவின்றி எடுத்துக் கூறிய கோசலையின் குறைவற்ற நிறை நிலையை கவிதையின் ஏற்றம் காட்டுகின்றது.

'நால்வர்க்கும் மறுவில் அன்பினில் வேற்றுமை மாற்றினாள்' என்ற கவிதைத் தொடர் கோசலைப் பிராட்டியின் நடுநிலைமைத் தன்மையைத் தெரிவிக்கின்றது.

'நால்வரில் ஒருவனாகிய பரதனை மட்டும் இவ்வளவு புகழ்தற்குக் காரணம். அவனைத் தானே வளர்த்ததால், அந்த அன்பின் மிகுதியால் ஆகும்?' என்று சிலர் கருதக் கூடும். அதற்குப் பதில் அளிப்பது இந்த ஈற்றடி,

> 'வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்:
> தீரக் காய்ந்துழி நல்லவும் தீயவாம்.'

(வாரம்-அன்பு) என்ற சீவகசிந்தாமணிக் கருத்துப்படி, கோசலை பரதனிடம் கொண்ட பேரன்பினால், அவனது குறை, கோசலைத்தாய்க்குத் தெரியவில்லை என எண்ணலாம்.

அந்த ஐயத்தைத்தெளிவிக்கும் முறையில் அவள் 'மறு இல் அன்பினள்' எனப்பட்டாள். அன்பில் மறு (குற்றம்) என்ன? நால்வரும் சொந்த மக்கள். அதில் ஒருவரிடம் மட்டும் அதிகம் அன்பு காட்டுவது, அன்பின் குற்றம். அத்தகைய குற்றம் இல்லாமல் முன்னவன் பின்னவன், மாற்றாள் பிள்ளைகள் என்ற வேறுபாடு காணாமல் அனைத்து மக்களிடமும் சமமான அன்பு செலுத்துபவன் இந்த கோசலைத் தாய். அத்தகைய நடுநிலை அன்பினளாக இருக்கும் ஒருத்தி கூறுவதுதான் உண்மையான புகழுரையாகும்.

'பங்கமில் குணத்தான் பரதன்' என்று இராமபிரான் கூறியதை, 'நிறைகுணத்தான்: குறைவிலன்' என்று கோசலைத்தாய் கூறி, ஏற்றுக் கொண்டு விட்டாள். அந்தக்கருத்தைத் தெரிவிக்கின்றது இந்தக்கவிதை.

# (6)

# வானுயர் காதலன்

**கேகயத்தில் பரதன்:**

பரதன் இல்லாத போது, அயோத்தியில் நடந்தது அனைத்தும் யாரும் எதிர்பாராத துன்ப நிகழ்ச்சிகளே. இவைகள் எதுவுமே பரதனுக்குத் தெரியாது. இந்தத் துன்ப நிகழ்ச்சிகளைத் தெரிவித்தால், அவனுக்குப் பேரதிர்ச்சியையும் அளவு கடந்த வருத்தத்தையும் விளைவிக்கும்.

இனி, அயோத்தியில் பரதன் இல்லாமல் மேற்கொண்டு எதுவும் நடைபெறாது. அதனால் அந்த நம்பியை அயோத்திக்கு வரவழைத்தேயாக வேண்டும். அதனை எப்படிச் செய்வது? யார் செய்வது?

செய்ய வேண்டிய செயலை மேற்கொண்டு அங்கு நடத்துவதற்குத் தகுதியுடையவர் யார்? இராமபிரான், தம்பி இலக்குவனுடனும் சீதாபிராட்டியுடனும் கானகம் புறப்பட்டான்: தந்தை தசரத மன்னன், பிரிவாற்றாமை தாங்காமல் வானகம் புக்கான். அதனால் பொறுப்பு, அங்கிருந்த ராஜகுருவாகிய வசிட்ட முனிவனையே சார்ந்ததாயிற்று. முனிவனும் பொறுப்பை உணர்ந்து தசரதன் எழுதியதாக ஒரு ஓலையைத் தயாரித்து, தூதுவரிடம் கொடுத்து, அவர்களைக் கேகயத்துக்கு அனுப்பி வைத்தான்.

## தூதுவரும் பரதனும் :

'ஆற்றல் மாதவன் ஆணையின் போனவர்'- அவர், 'பொருஇல் தூதுவர்: பொய் இலார்: இரவும் நன்பகலும் கடிது ஏகினார்: பரதன் கோயில் உற்றார்'. இது கம்பன் சொல்லும் கதைப்பகுதி,

அனுப்பியது 'ஆற்றல் மாதவன்' வலிமை (ஆற்றல்) மிக்க மாதவன். என்ன வலிமை? தவவலிமை. எந்தச் சமயத்தில் என்ன காரியத்தை எப்படிச் செய்ய வேண்டுமோ, அதனை அவ்வாறு உணர்ந்து செயல்படும் தவவன்மை மிக்கவன் வசிட்டன், அத்தகைய மாமுனிவனது ஆணையை ஏற்றுக் கொண்டு சென்ற தூதுவர், 'பொரு இல்' தூதுவர். (பொரு-ஒப்பு) அவர் அரசவையில் சென்று பேசுதற்குரிய கல்வி, அறிவு, ஆற்றல் குறிப்பறிதல், சொல் வன்மை முதலிய தூதுவர்க்கு உரிய இலக்கணங்களால் ஒப்புயர்வு அற்றவர். அதனால், அவர், பரத நம்பியினுடைய மனக்குறிப்பு அறிந்து கொள்ளவும், அதற்கு ஏற்றவாறு பதில் கூறவும் தகுதியுடையவராவர். இது, 'பொரு இல் தூதுவர்' என்ற தொடரின் கருத்து'.

அவ்வாறே அவர் செயல் பட்டதனை, பின் வரும் கவிதைப் பகுதியில் காணலாம். முதலில், அவர் வாயில் காவலரிடம், 'எம் வரவு சொல்லுதிர் மன்னவற்கே' என்று கூறினார்கள். காவலரும்,

**'தூதர் வந்தனர், உந்தை சொல்லொடு' என**
**காதல் முந்திக் களிக்கின்ற சிந்தையான்,**
**'போதுக ஈங்கு' என, புக்கு, அவர் கைதொழ,**
**'தீது இலன் கொல் திருமுடியோன்?' என்றான் (2103)**

இந்தக் கவிதை, பல செய்திகளை அடக்கிக் கொண்டுள்ளது:

வாயில் காவலர், தூதுவர் வந்த செய்தியைச் சொன்னது. அதைக் கேட்ட பரதனது மனமகிழ்ச்சி, தூதுவரை உள்ளே வரச் செய்தது, தூதுவர் பரதனுக்கு மரியாதை செலுத்தியது, அதற்குப் பிறகு, பரதன் அவர்களிடம் தசரதனைப் பற்றி வினாவியது. இவ்வளவும் இந்தக் கவிதையில் அடக்கம். இதில், பரதன் வினாவியதுதான், முக்கியமானது. அதில் தான். கவிச்சக்கரவர்த்தியின் பாத்திரப் படைப்புக் கலைத்திறன் அடங்கியுள்ளது. காவியத்தில், எந்த நோக்கத்திற்காகஒருபாத்திரம் படைக்கப்பட்டதோ, அந்த நோக்கம் மேன் மேலும் விளக்கம் பெறும் முறையில், அந்தப் பாத்திரத்தின் சொல்லும் செயலும் அமைய வேண்டும்.

அப்படியே, இங்கு, பரதனது சொல்லும் செயலும் அமைந்துள்ளன. 'உனது தந்தையின் சொல்லைத் தாங்கிக் கொண்டு தூதுவர் வந்துள்ளனர்' என்று காவலர் சொன்னவுடன், பரதன் களிக்கின்ற சிந்தையன் ஆயினான். அந்தக்களிப்புக்கு, காதல் முந்தியது காரணம் ஆயிற்று.

தந்தையின் சொல் எதுவாகயிருக்குமோ என்ற, அன்பு கனிந்த ஆர்வம் உந்துதலினால், மனத்தில் மகிழ்ச்சி பொங்கியது. 'கேகயம் நீ போதி என்று தந்தை அயோத்தியில் சொன்னதை நினைத்துப்பார்க்கின்றான் பரதன். அயோத்தியை விட்டு வெளியில் வருதலால், இராமபிரான் சேவடிப் பூ—பாதுகை, தனது தலைக்குக் கிடைத்தது. அங்கேயே —அயோத்திலேயே இருந்தால், இராமனது பாதுகை, தனக்குக் கிடைத்திருக்காது. பாதுகை பெறுவதற்குக் காரணமாக அமைந்ததால், தந்தை சொல் என்றவுடன் மகிழ்ந்தான் பரதன்.

## தீ திலன் கொல் திருமுடியோன்:

தனது சென்னி-தலை பாதுகையைத் திருமுடியாகக் கொண்டதால் போலும், தசரதனையும் தந்தை எனக் குறிப்பிடாமல் திருமுடியன் என்று குறிப்பிடுகின்றான் பரதன். 'திருமுடியோன் தீது இலன் கொல்' என்பதுதான். பரதன் முதன் முதலாகத் தூதுவரிடம் கேட்ட கேள்வி. சாதாரண உலகியல் வாழ்வினனாகயிருந்திருந்தால் பரதன், 'தந்தை நலமா?' என்றுதான் கேட்டிருந்திருப்பான். ஆனால், உலகியலுக்கு அப்பாற்பட்ட வாழ்வினனாகயிருப்பதால் 'கோசல நாட்டு மன்னன் தீது இலனா' என்று கேட்டான் பரத நம்பி.

'நலமா' என்று உடன் பாட்டு முறையில் கேட்காமல் 'தீது இலனா' என எதிர்மறைச் சொல்லை அமைத்துக் கேட்டது, பரதனது உள்ளத்தில் தோன்றிய ஒரு அச்ச உணர்வால் எழுந்த ஐயத்தைக் காட்டுகின்றது.

தனது உயிராக விளங்கும் இராமபிரானைப் பற்றி தானே முதலில் விசாரித்திருக்க வேண்டும் பரதன். அப்படியில்லாமல், நாட்டு அரசனின் தீங்கு அற்ற நிலைமையை விசாரிக்கின்றான் இவன். ஏன். இது பரதன் திருவுள்ளத்தில் அச்ச உணர்வால் உந்தும் ஓர் ஐயம் உள்ளது என்பதை மேலும் உறுதிப்படுத்துகின்றது.

பரதனுக்கு விருப்பம் இல்லாமல், இராமபிரானிடமிருந்து, தனது அதிகார வலிமையால் பரதனைப் பிரித்தான் தசரதன். எந்தச் செயலாகயிருந்தாலும். செய்தவன், எவ்வளவு அதிகாரம் படைத்தவனாகயிருந்தாலும். அதன் பயன் அவனுக்கே திரும்ப வந்து சேரும் என்பது இயற்கை நியதி. இந்த நியதியின் படி, இராமபிரானிடமிருந்து,

தசரதனைப் பிரிக்கும் செயல் நடந்து விடுமோ என்ற ஐயம் பரதன் உள்ளத்தில் தோன்றியிருக்க வேண்டும், அதனால்தான் 'தீது இலன் கொல் திருமுடியோன் எனத் தூதுவரைப் பார்த்ததும் முதன் முதலாகக் கேட்டான் அவன்.

பரதன், இராமபிரானை விட்டுப் பிரியும் போது அப்பிரானது நினைவுச் சின்னமாக - பிரதிநிதியாக, பாதுகை கிடைத்தது அவனுக்கு. அதைச்சென்னிக்கு அணியாகச் சேர்த்திக் கொண்டு, பிரிவுத் துன்பம் இல்லாமல் சென்றான் பரத நம்பி, பரதன், இராம பிரானைத் தனது சகோதரனாகக் கருதாமல், தான் வழிபடும் தெய்வமாக – பரமாத்மா மூர்த்தி கரித்து வந்திருப்பதாக மதித்து பக்தி செலுத்தினான் பகவத் பக்தனாகச் செயல்பட்டான் பரதன். அத னால், இராமன் சேவடிப்பூ-பாதுகை. பரதனுக்குக் கிடைத்தது; பிரிவுத் துன்பத்தை ஓரளவு அகற்றியது

தசரதனோ, இராமபிரானைத் தனது உயிர்க்கு உயிரான அன்பு மைந்தனாகத்தான் கொண்டிருந் தான். அதனால் பிரிவு நேர்ந்தால், பரதனுக்குக் கிடைத்தது போல், பாதுகை கிடைக்காது. பரதன் ஆறுதல் பெற்றது போன்று, தசரதன் பிரிவுத் துன்பத்தைத் தாங்கிக் கொண்டு ஆறுதல் பெற முடியாது.

பரதனுக்குக் கிடைத்தது தற்காலிகப் பிரிவு தசரதனுக்குக் கிடைத்திருப்பது நிரந்தரப் பிரிவு. அதுவும். இந்த நிரந்தரப் பிரிப்பை யார் செய்தது? தசரதனுடைய அன்பு மனைவியே செய்தாள். யாரைத் தனது அதிகார வன்மையால் வலிந்து பிரித்தானோ, அவனது தாயின் மூலமாகவே, தசர தனுக்கு இராமபிரானிடமிருந்து நிரந்தரப் பிரிவு வந்து விட்டது. செய்தது திரும்பியது போலும்!

அயோத்தியில் நடந்தது எதுவும் தெரியாத நிலையில், ஐயத்துடன் தான் 'தீதிலன் கொல் திருமுடியோன்' எனக் கேட்டிருந்திருக்க வேண்டும் பரதன்.

**வலியன்:**

அதற்குத் தூதுவரிடம் இருந்து வந்த பதில் மிகச் சுருக்கமானது. 'வலியன்' என்பதுதான் தூதுவர் பதில். இந்தத் தூதுவர் 'பொய் இலார்' எனக் கூறுப்பட்டவர்கள். சொல்லுவதில் பொய்யும் இருக்கக்கூடாது பரதன் மனம் நோகுமாறு துன்பச் செய்தியைச் சொல்லவும் கூடாது. இரண்டு நிலைகளினின்றும் தவறாத வண்ணம் இவர்கள் பதில் அமைந்துள்ளது.

தசரதன், படைவலி, பொருள்வலி, அதிகார வலி, துணை வலி ஆகியவைகளை உடையவன் என்ற பொருள்படும் வண்ணம் 'வலியன்' என்ற பதில் அமைந்துள்ளது. இது, பொய்யில்லையே. இந்த வலிமைகளில் தசரதனுக்குக் குறைவில்லை. பரதன் அதைக் கேட்டு மகிழ்ந்தான். பரதன் மேற் கொண்டு கேட்ட கேள்வி, அவனது திருவுள்ளப் பாங்கினை எடுத்துக் காட்டுகின்றது.

'வலியன்' என்று அவர் கூற மகிழ்ந்தனன்;
'இலைகொள் பூண் இளங்கோன் எம்பிரா னொடும்
உலைவுஇல் செல்வத் தனோ?' என, 'உண்டு' என,
தலையில் ஏந்தினன் தாழ்தடக் கைகளே?' (2104)

தசரதனைப் பற்றி விசாரிக்கும் போது, அவனுடைய அரசியல் நலத்தை நினைத்து 'திருமுடி யோன் தீதிலன் கொல்?' எனக் கேட்ட பரதன், அடுத்து இலக்குவன் நலம் பற்றி விசாரிக்கும் போது அவன் இயல்புக் கேற்ப வினாவுகின்றான்.

**உலைவு இல் செல்வம்:**

'இளங்கோன் உலைவு இல் செல்வத்தனோ?" என்பது பரதனது வினா. 'உண்டு' என்பது தூதுவர் பதில்.

எது உலைவு இல் செல்வம்? (உலைவு-அழிவு) அழிதல் இல்லாத செல்வம் என்றால், அழியும் செல்வமும் ஒன்று உண்டு என்பதாகின்றது. தசரதனைப் பற்றி வினாவியது, அவனுடைய அரசியல் வாழ்வாகிய அழியும் செல்வத்தைப் பற்றியது.

இலக்குவன் பெற்றிருப்பது உலைவு இல் (அழிவு இல்லாத) செல்வம். அதுஎது? பகவத்சேவை தான், நீங்காத நிறைவான செல்வம். பகவானுக்கு அடியவனாகயிருந்து, தொண்டு செய்துகொண்டிருப்பதுதான், உலைவில் செல்வம். இது, முன்பு மெய்ந்நெறி எனக்கவிக் கூற்றாக வந்தது: பிறகு, விசுவாமித்திர முனிவன் வாயிலாக: தள்ளரிய பெருநீதி' எனக்கூறப்பட்டது: இப்போது. பரதநம்பியின் வாயால் 'உலைவு இல் செல்வம்' எனப்பட்டது.

இந்த அடிமைப்பணி இரண்டு வகைப்படும். ஒன்று பகவானுக்குப் பக்கத்திலேயே அமர்ந்து கொண்டு குற்றேவல் செய்யும் அணுக்கத் தொண்டு. இது அக அடிமை எனப்படும். மற்றொன்று, அவன் விடுத்ததிசைக் கருமம் திருத்தலாகிய உலகியல் முதலான புறத்தொண்டு, இது புறம்படிமை எனப்படும்.

இலக்குவனும் அடியவன்: பரதனும் அடியவன் ஆனால்,அகத்தாலும் புறத்தாலும் இரண்டு அடியார்களும் வேறுபட்டு நின்று பகவத் சேவை-இறைத் தொண்டு செய்பவர்கள்.

பரதன் இறைவனது புறத்தொண்டினனாக இருப்பதால், 'இளங்கோன் எம்பிரானொடும் உலைவில் செல்வத்தனோ' எனக்கேட்டான். அண்ணனோடு உடன் உள்ளானா தம்பியாகிய இலக்குவன்?' என்று கேள்வியமையவில்லை.

'எம்பிரானொடு' என்ற சொல் பரதன் வாயில் வந்துள்ளது, கருத்து என்ன? 'இலக்குவனுக்கும் பரதனுக்கும் இராமபிரான் தெய்வம் என்பதாகும்.

'எம்பிரானாகிய இராமபிரானோடு ஒரு சிறுதும் பிரியாது நின்று, தொண்டு செய்யும் உலைவில் செல்வத்தனாக இலக்குவன் உள்ளானா' என்ற பரதன் கேள்வி,

'ஒழிவு இல் காலம் எல்லாம் உடனாய் மன்னி,
வழு விலா அடிமை செய்ய வேண்டும் நாம் (3-3-1)

என்ற நம்மாழ்வாரது திருவாய் மொழியை, கற்பார் நெஞ்சில் நிலை நிறுத்துகின்றது.

நன்மை பயப்பது பற்றி, பகவத் சேவையை—இறைத் தொண்டைச் செல்வம் என்றும். பொருட் செல்வம் போன்று அழிவுடையது அன்று என்பது பற்றி உலைவு இல் செல்வம் என்றும் கூறி, அச் செல்வம் உடைமை பற்றி இளைய பெருமாளை உலைவில் செல்வத்தன் என்றான் பரதன்.

இதனால், 'தீதிலன் கொல் திருமுடியோன்' என்ற உலையும் செல்வமுடைய தசரத சக்கரவர்த்தியை விட உலைவில் செல்வத்தனாய் இளைய பெருமாள் உயர்ந்துள்ளான் என்பது பரதன் கருத்தாயிற்று.

**இளங்கோன் :**

உலைவில் செல்வமான அடிமைத்திருவுயைவனை (கைங்கர்யஸ்ரீ) இளங்கோன் என்கின்றான் பரதன் தனக்கு வயதாலும் முறையாலும் தாழ்ந்த இலக்குவனை எம்பி என்னாது, 'இளங்கோன்' என்றது சரியா? தவறுதானே பரதன் திருவுள்ளப் பாங்கை ஒட்டி ஆராய்ந்தால், இது சரியானதுதான் என்பது தெரிய வரும்.

இலக்குவன், இப்போது பகவானுக்கு அடியவனாக அமர்ந்து தொண்டு செய்து கொண்டிருக்கின்றான். பரதனும் பகவத் சேவையானன். பாகவதர்கள், மற்றொரு பாகவதரைப்பார்க்கும் போது அடியேன் என்று சொல்லி கீழ் விழுந்து வணங்கு

வார்கள். அதனால் வணங்கியவர்க்கு வணங்கப் பட்டவர் தலைவர் இங்கு வயதோ முறையோ குறுக்கிடாது. அம்மரபை ஒட்டி, வயதில் இளையவனான இலக்குவனை இளங்கோன் என்றான் பரதன்.

இப்படிப் பொருள் காண்பதற்கு. நம்மாழ்வார் திருவாய் மொழி நமக்கு வழி காட்டுகிறது.

“பயிலும் சுடரொளி மூர்த்தியைப் பங்கயக் கண்ணனை,
பயில இனிய நம் பாற்கடல் சேர்ந்த பரமனை,
பயிலும் திருவுடையார் யவரேலும் அவர் கண்டீர்
பயிலும் பிறப்பிடை தோறும் எம்மை ஆளும் பரமரே”
(3.7.1)

இத் திருவாய் மொழி, வயதால் இளைய இலக்குவனை, வயதில் பெரிய பரதன். இளங்கோன் என்று அழைத்தது சரிதான், என்பதற்கு ஆதாரமாக உள்ளது.

**இலை கொள் பூண் இளங்கோன்:**

‘இலை வடிவாகச் செய்யப்பட்ட ஆபரணங்களை அணிந்த இளவரசன்’ என்பது இதன் மேம் போக்கான பொருள். காப்பியத்தில் எந்தத் தொடருக்குப் பொருள் காணும் போதும், அத் தொடர், யார் வாயின் மூலம் வந்திருக்கின்றதோ, அந்தப் பாத்திரத்தின் உள்ளப் போக்கை ஒட்டிப் பொருள் காண வேண்டும்.

இதனை உரைத்தது, பரதன். இவன் எத்தகைய உள்ளத்தினன்? பகவத் பக்தியினால் நிறைந்த திருவுள்ளத்தினன் அதனால், பகவத் பக்தி உணர்வுடன் தான் இத் தொடருக்குப் பொருள் காண வேண்டும்.

பகவத் பக்தர்கள்-இறை அடியார்கள், கழுத்தில், வெளியில் தெரியும் பொன்னாபரணத்தை அணிந்து கொள்ள மாட்டார்கள். அது அவர்களுக்குச் சிறுமையானது; பெருமையானது அன்று.

பெருமையானது எது அவர்களுக்கு? இறைத் தொண்டையே — பகவத் சேவையையே, தமது உடலை அழகு செய்யும் அணிகலனாக எண்ணுவர்: அதுவே அவர்க்குப் பெருமைதருவது.

'இலை 'என்பது வெற்றிலையைக் குறிப்பது. குற்றேவல் செய்யும் அணுக்கத் தொண்டர்கள், பகவானுக்கு அவ்வப்போது வெற்றிலைச் சுருள்கொடுக்கும் கைங்கர்யத்தினராய் இருப்பர் பகவானுக்குத் தேவையானபோது, கொடுப்பதற்காக, தமது கையில் வெற்றிலைச் சுருளை வைத்திருப்பர். இத்த கைய பணியைப் (பணி—ஆபரணம்) பூண்டவன் இளைய பெருமாள். அதனால், எம்பிரானொடு இருக்கும் இலக்குவன், இலைகொள் இளங்கோனாகத் தோற்றுகின்றான் பரதனுக்கு.

மேலும், 'இலைகொள்' என்பதற்கு, பகவான் உண்ட இலையாகிய உண்கலத்தையே, தான் உண்பதற்கு எடுத்துக் கொள்கின்ற பக்தனாக விளங்குகின்றான் இலக்குவச் செல்வன்' என்றும் ,பொருள் கொள்ளலாம்.

இவ்வாறு பொருள் கொள்வதற்கு,

**"உடுத்துக் களைந்தநின் பீதகஆடை**
**உடுத்து, கலத்தது உண்டு**
**தொடுத்த துழாய்மலர் சூடிக்களைந்தன**
**சூடும்இத் தொண்டர்களோம்."**

என்ற பெரியாழ்வாரது திருப்பல்லாண்டுப் பாசுரம் உதவுகின்றது.

இதற்கு மேலும், 'பகவான் உண்ட இலையாகிய உணவையே, மிச்சிலையே நுகர்வது பக்தனுக்கு அனுக்கத் தொண்டனுக்கு இன்பம் தருவது' என்றும் பொருள் கொள்ளலாம் இந்தக் கருத்துக்கு ஊக்கம் ஊட்டுவது, இலக்குவன் வாயிலாக அமைந்த ஒரு கவிதையே. அது எங்கு?

கிட்கிந்தையில், கிடைத்த அரச வாழ்வுப் போகத்தில் மயங்கிக் கிடக்கின்றான். சுக்கிரீவன், குறித்த காலத்தில், சொல்லியவாறு, அவன் இராமபிரானிடம் வாராததால், அவனிடம் இலக்குவன் அனுப்பப்படுகின்றான். இலக்குவனது கோபத்தைத் தணிக்க வேண்டி, அவனை வரவேற்று, உபசரித்து உணவு உண்ண அழைக்கின்றான் சுக்கிரீவன்.

அப்போது இலக்குவன் சொன்ன பதிலில் இக் கருத்து தொனிக்கின்றது.

'பச்சிலை, கிழங்கு, காய் பரமன் நுங்கிய
மிச்சிலே நுகர்வது : வேறு நான் ஒன்றும்
நச்சிலேன்; நச்சினேன் ஆயின், நாய் உண்ட
எச்சிலே அது: இதற்கு ஐயம் இல்லையால்' (4382)

என்பது இலக்குவன் பதில். இதிலும் 'அண்ணன் உண்ட மிச்சமாகிய பச்சிலையையே நுகர்வேன்' என்று சொல்லவில்லை இலக்குவன் அண்ணன் என்ற இடத்தில் 'பரமன்' என்ற சொல்லையாளப்பட்டுள்ளது. பரமன்-பகவான். இளைய பெருமாள், இராமபிரானைப் பகவானாகத்தான் மதித்துப் பணி செய்கின்றான் என்பது கருத்து. மேலும், தனது, தாய் சுமத்திரை கூறியது போன்று 'தம்பி எனும் படி அன்று; அடியாரினின் ஏவல் செய்தி' என்பதற்கு இணங்கவும் இராம கைங்கர்யம் செய்பவன் இலக்குவன் என்பதைச் சுட்டிக் காட்டுகின்றது இக் கவிதை.

இப்படி, பக்தி உணர்வுப் பொருள் காண்பதே, பரதன் உள்ளத்தை உணர்வதாகும்.

இப்படித்தான் பொருள் காண வேண்டும் என்பதனை, கவிதையில் உள்ள ஈற்றடியின் பொருள் உறுதிப்படுத்துகின்றது.

'இளங்கோன் எம்பிரானொடு உலைவில் செல்வத்தனோ?' என்று கேட்டதற்கு 'உண்டு' என்பது தூதுவர் பதிலாக வந்தது. இது, தன் செவியில் பட்டதும் என்ன செய்தான் பரதன்? செய்ததைச் சொல்கின்றது கவிதையின் ஈற்றடி.

'தலையில் ஏந்தினன், தாழ்தடக் கைகளே'

என்பது ஈற்றடி பக்தன், பகவானோடு உடன் இருந்து, அடிமைத் தொண்டு பூண்ட செல்வத்தனாய் உள்ளான், (இலக்குவன் இராமபிரான் பக்கத்தில் தான் உள்ளான்) என்ற நற்செய்தியைக் கேட்டதும், பரதனது, கீழே தொங்கிக் கொண்டிருந்த பெரிய கைகள்' அவனுடைய தலையின் மேல் நின்று குவிந்த வண்ணமாயின. கேட்டவுடன், கைகளைத் தனது தலையின் மேல் ஏந்தினன் பரதன். இதன் கருத்து என்ன? கேட்ட செய்தி, பகவத் பக்தன் தொடர்பு பற்றியது என்பதாகும்.

தசரதன், 'வலியன்' என்ற செய்திக்கு மகிழ்ந்தனன் இவன். 'உண்டு' என்ற நற்செய்திக்கு' கைகளைத் தலையின் மேல் குவித்து வணங்கினான் பரதன். இது, எதைத்காட்டுகின்றது?

உலகியலுக்கும், ஆத்மீகத்துக்கும், உள்ள வேறுபாட்டை உணர்ந்து, அதற்கு ஏற்பச்செயல் படுபவன் பரதன் என்பதையும், உலையும் (அழியும்,) செல்வத்தைவிட உலைவில் செல்வத்தை (பகவத் சேவையை) இவன் எவ்வளவு உயர்வாக மதிப்பவன் என்பதையும் காட்டுகின்றது பரதனது இச்செயல் பரதன், 'பகவத் பக்தன்' என்பதை அவனது ஒவ்வொரு சொல்லும் செயலும் காட்டுகின்றன.

**வான் உயர் காதல்:**

'தலையில் ஏந்தினன் தாழ் தடக்கைகளே' என்ற பரதனது பக்தி உள்ளத்துக்கு ஏற்ற செயலை, பின்னால் வரும் கூடின மலர்க்கரம்,' 'திசை நோக்கித் தொழுகின்றான்' என்ற தொடர்கள் உறுதிப் படுத்துகின்றன. பரதன் எங்கு பேசினாலும், யாரிடம் பேசினாலும், அந்தப் பேச்சு, பகவத் பக்தி வெள்ளத்தில் மூழ்கியவன் அவன் என்பதை வெளிப் படுத்திவிடும். அவ்வாறே, அவனது எந்தச் செயலும் பக்தி உணர்வின் வெளிப்பாடாகவே அமையும்.

அயோத்திக்கு உடனே வருமாறு எழுதப்பட்ட செய்தியைப் பார்த்தவுடன், பரதன் எவ்வாறு செயல் பட்டான் என்பதைக் கூறுகின்றது அடுத்து வரும் கவிதை.

> 'வாள் நிலா நகைதோன்ற, மயிர் புறம்
> பூண், வான்உயர் காதலின் பொங்கினான்,
> தாள்நிலா மலர் தூவினன் — தம்முனைக்
> காணலாம் எனும் ஆசை கடாவவே' (2108)

இக் கவிதையில் அமைந்துள்ள ஒவ்வொரு சொல்லும் பரதனது ஆர்வத்தை வெளிப்படுத்து கின்றது. என்ன ஆர்வம்? இராமபிரான் திருவடித் தொண்டு செய்வதில் உள்ள ஆர்வம். கேகயத்தில் மானசீகமாக - அந்தராத்மா என்ற நிலையில் இராமகைங்கர்யத்தில் இருந்தான் பரதநம்பி. 'அயோத்திக்கு வருக' என்ற செய்தி, அவனை நேரில் கண்டும் சேவை செய்யலாம் என்ற ஆசை மிக்கது பரதனிடம்.

உள்ளத்தில் காதல் பொங்கியது; அதன் மெய்ப் பாடு வெளிப்பட்டது. இதற்குக் காரணம் இராம பிரானைக் கண்ணாரக் காணலாம் என்ற ஆசை கடாவுதல். ஆசையின் தூண்டுதலால், உள்ளத்தில் காதல் பொங்கிற்று; வெளியில் மெய்ப்பாடாக, சிரிப்பு தோன்றியது; மெய் மயிர் புள

கித்தது. இராமபிரானைக் கண்ணாரக் காணலாம் என்ற ஆசையின் தூண்டுதலால், பரதன் உள்ளத்தில் உதித்ததனைக் கவி 'வான் உயர் காதல்' என்று கூறுகின்றது.

காதல், சாதாரண மக்களிடத்தில் தோன்றுவது உயர் காதல் அவர்களில் சிறந்த சிலரிடம் தோன்றுவது; வான் உயர் காதல், அவர்கள் யாவரினும் மேம்பட்ட மிகச் சிலரிடம் மட்டும் தோன்றுவது. அத்தகைய மிகச்சிலருள் ஒருவன் இந்த பரதநம்பி.

ஒருவனுக்கு. அவன் உயிர் வாழ்க்கைக்குத் தேவையான, பொன், பொருள், மாதர் முதலிய போகப் பொருள்களாகிய புறப்பொருளின் வேட்கையால் தோன்றுவது காதல் எனப்படும்.

அப்புறப் பொருளினும் சிறந்த அகப் பொருளாகிய உயிரின் மேல் கொண்ட அபிமானத்தால் தோன்றுவது உயர் காதல் எனப்படும். உயிரைக் காப்பாற்றுதற்குப் புறப் பொருள் எதனையும் துறக்கவைப்பதால், அந்த வேட்கை உயர் காதலாகும்.

ஒருவனுக்குத் தன் உயிரினும் சிறந்த, உயிர்க்கு உயிராயுள்ள அந்தராத்மாவான பரம் பொருளிடத்துள்ள (பக்திஎன்றுசொல்லப்படும்) இன்றியமையாப் பற்றுள்ளத்துக்கு வானுயர் காதல் என்று பெயர்.

அத்தகைய மிக உயர்ந்த காதலினன் பரதன், அது, மிக உயர்ந்த நிலையில் பரிணமித்திருப்பதால், அகத்தில் அடங்காது, உடற்புறம் போந்து, கண்ணுக்குப் புலனாகுமாறு புளகம் முதலிய மெய்ப் பாடுகளாயிற்று. 'வாள் நிலநகை' -வெண்மையான ஒளி பரவுகின்ற மகிழ்ச்சிச் சிரிப்புத் தோன்றுவதும்,

மயிர் புறம் பூணுவதும்-மயிர்க்கூச் செறிவதும், உள்ளத்தில் தோன்றிய, வானுயர் காதலின் வெளிப் பாடேயாகும். இத்தகைய வானுயர் காதல் வெளிப் பாட்டால், உடலும் உள்ளமும் பூரித்து நின்றான் பரதன், இதனைக் காட்டுவது 'பொங்கினான்' என்றசொல்.

இந்தப் பூரிப்புக்கு — மகிழ்ச்சிப் பெருக்குக்கு என்ன காரணம்? இராமபிரானைப் பிரிந்து கேகயம் வரும் போது, பரதனது பிரிவுக்கு 'ஓவலில் உயிர் பிரிந்து உடல் சென்ற' என்று உவமை கூறப் பட்டது உயிர் பிரிந்த உடல் வாட்டமாகத்தானேயி ருக்கும்! இனி, அவ்வாட்டம் தீர, அந்த ஓவலில் உயி ருடன் — இராமபிரானுடன் சேரப் போவதால் பரத் னது மகிழ்ச்சி பெருகியது ; உடல் பூரித்தது.

வானுயர் காதல், பரம்பொருளைப் பற்றிய தாகத்தான் இருக்கும் என்பதை, ஞான முனியாகிய விசுவாமித்திரன் கூற்றிலிருந்தும் உணரலாம். 'காதல் என்தன் உயிர் மேலும் இக்கரியோன் பால் உண்டு' என்பது, விசுவாமித்திரன் சனகப் பேரரச னது அவையில் இரகுவம்ச வரலாறு கூறிய பிறகு உரைத்த திருமொழியாகும்.

'என்தன் உயிர்' என்பது, யான் எனது என்ற செருக்கு அற்ற முனிவன் வாயிலிருந்து வருவது. அதனால். அவரது உடலையோ உயிரையோ குறிப் பதாக அமையாது. ஜீவான்மாவாகிய தனக்கு, உயி ராக உள்ள பரமான்மாவைக் குறிப்பது அத் தொடர், அந்தப் பரமான்மாவிடம் எனக்குக் காதல் (அன்பு) உண்டு, அதனைவிட, அந்தப் பரமான் மாவே இராமபிரானாக இப்போது வந்திருப்பதால், என அன்பு (காதல் இந்தக்கரு நிறத்தவனான இராமபி ரானிடத்து மிகுதியும் செல்கின்றது, இது விசுவா மித்திரன் திருவுள்ளக்கருத்து.

இராமசேவை கிடைப்பதற்கு முன்பு, தனக்கு உயிர்க்கு உயிராகயிருந்த பரமாத்ம சேவையில் இருந்தான் இந்த முனிவன், இப்போது, இராம சேவை கிடைத்ததால், முன்பு பெற்ற மகிழ்ச்சியினும் முன்பிருந்த அன்பினும் மிகுதியும் உடையவனாக விளங்கினான் விசுவாமித்திரன் என்பது கருத்து.

**தாள் நிலா மலர் தூவுதல் :**

முனிவன் போன்று பரத நம்பியும் கேகய நாட்டில், பரமாத்ம—அந்தராத்ம சேவையில் இருந்தான், இனி, நேரடியாக இராம சேவை கிடைக்கப்போவதால், காதல், வான் உயர்ந்ததாய் வளர்ந்து, மகிழ்ச்சி பெருகியது பரதனிடம், அம் மகிழ்ச்சி, அவனது மெய்ப் பாடாக வெளிப் பட்டது : செயலாகவும் மலர்ந்தது. என்ன செயல்?

தான் கொண்டுவந்த பாதுகைக்கு மலர் அணிவித்து வணங்கினான் பரதன் தாள்-திருவடி இங்கு பாதுகை, தாளில் நிலாவும் மலராக, அதனை பாதுகையின்மேல் தூவினனாய்ப் புறப்படுகின்றான் பரதன், முன்பு, அயோத்தியிலிருந்து புறப்படும் போது, இராமன் சேவடிப் பூவினைச் சென்னியில் புனைந்தவனாகயிருந்தான், இப்போது கேகயத்தை விட்டுப் புறப்படும்போதும், தாள் நிலா மலர் தூவினனாய்ச் செல்கின்றான் பரதன்.

இராமபிரானை விட்டுப் பிரியும் போதும், அப்பிரானோடு சேரப் போகும் போதும் பாதுகை மலர்த் தொடர்பினனாகவே உள்ளான் பரதன், அதனால், பரதன், பாதுகை பக்தன், என்று சொல்வது தக்கதே. இந்தப் பக்தன் தம்பி சத்துருக்கனனுடன் அயோத்தி சென்றான், சென்றதும் யாரைக் கண்டான்?

(7)

# கொதித்த கோளரி

**கைகேசி :**

கைகேசி, கேகய நாட்டு மன்னனது அன்பு மகள் : தசரதப் பேரரசனது ஆசை மனைவி: பன்னரும் பெரும் புகழ்ப் பரதனைப் பெற்றெடுத்த நற்றாய்: அந்தமில் பெருங்குணத்து இராமபிரானையே வளர்க்கும் பாக்கியம் பெற்ற அவனது வளர்ப்புத் தாய்: "தங்கள் நாயகரின் தெய்வம்தான் பிறிது இலை என்று எண்ணும் மங்கையாக வாழ்ந்த தெய்வக்கற்பினள்: சம்பராசுரப் போரில், அவனைக் குலத்தோடும் தொலைத்து, தன் கணவன் தசரதன் வெற்றிவாகை சூடுவதற்குப் போர்க்களத்தில் பெரும் பாடுபட்ட வீராங்கணை: அதற்குப் பரிசாகத் தனது கணவன் கொடுத்த இருவரங்களையும் அப்போது 'வேண்டாம் வேண்டாம்' எனச் சொல்லி வெறுத்து ஒதுக்கிய வேண்டாமை என்னும் விழுச் செல்வத்தினள்: 'இராமபிரான் முடிசூடப் போகின்றான்' என்ற செய்தியைத் தனது செவிக்கு இன்பம் தரும் நற்செய்தியாகக் கொண்டு,அதனைச் சொன்ன' மந்தரைக்கு, தன் கழுத்தில் அணிந்திருந்த முத்து மாலையைப் பரிசாக அளித்த வள்ளல்: தூய சிந்தையள்.

இவ்வளவு பெருமைக்கு உரியவளாகயிருந்தும். இவள், தனது தந்தையால் "அன்பு மகளே" என்றும், தனது கணவனால், "ஆசைக் காதலியே" என்றும் தனது மகன் பரதனால் "அம்மா" என்றும். நாட்டு மக்களால் "தூய அரசியே" என்றும் அழைக்கப்பட்டதாகக் கதையில் எங்கும் இடம் பெறவில்லை. ஏன்?

பால், தூய்மையானதுதான்: தன்னை அருந்து பவர்களுக்கு நல்ல பலன் தரத்தக்கதுதான். ஆனாலும் அதனுடன் ஒரு சொட்டு நஞ்சு கலந்தால் போதும். அவ்வளவு பாலும் கெட்டுப் போகும்: தன்னை அருந்தியவர் அனைவரின் உயிர்களையும் மாய்க்கும்.

கைகேசியாகிய தூய பாலில் தீயமந்தரையின் சொல்லாகிய நஞ்சு கலந்தது. தூய சிந்தையும் -தூய பாலும் திரிந்தது.

**'நிலத்தியல் பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு**
**இனத்தியல்பது ஆகும் அறிவு'** (குறள் 452)

என்ற பொய்யா மொழி, கைகேசியின் வாழ்வில் மெய்யாயிற்று.

இந்தக் கைகேசியைத்தான், கேகயத்திலிருந்து அயோத்தி வந்த பரதநம்பி, முதன்முதலாகச்சந்தித் தான். பாவம்! இவனைப் பெற்றதிலிருந்து ஒருநாள் கூட, இவனோடு கொஞ்சிக்குலாவும் பாக்கியம் இல் லாத வளானாள் இந்தக் கைகேசி. அதே போல, 'பெற்றவயிற்றுக்குப் பட்டங் கட்டினாற்போல' என்று பிறர் பாராட்டும் வண்ணம், தன் தாயோடு அன்பு தவழப் பேசி மகிழும் பாக்கியம் இழந்தவனா னான் இந்தப் பரதன்.

மகனைவிட, தாய்தான் மிகவும் இரக்கத்துக்கு பரிபாவத்துக்கு உரியவளாக இருக்கின்றாள். தனது அருமைக் குழந்தையைத் தூக்கி

வைக்கும் பாக்கியத்தை இவள் இடை இழந்தது: 'ஓடிவாடா கண்ணா கண்ணா' என்று அன்பு கனிய அழைக்கும் வாய்ப்பினை இவள் வாய் இழந்தது: மேலும் வண்ணச் செஞ்சிறுகை விரல் அனைத்தும் வாரி வாய்க்கொண்ட அடிசில் மிச்சிலை உண்ணும் பாக்கியத்தையும் அவள் வாய் இழந்தது; புழுதியில் செம்பொடி யாடி வரும் தனது அன்புச்செல்வத்தை வாரி அணைத்து மகிழும் வாய்ப்பினை இவள் மார்பு இழந்தது; தன் மழலை தவழும் வாயால் அச்சிறு குழந்தை 'அம்மா' என்று அழைக்கும் ஆர்வச்சொல்லைக் கேட்கும் நற்பேற்றினை இவளது செவி இழந்தது.

இவள் பெற்றதோ, 'பங்கமில் குணத்தவன்' என்றும், 'நிறைகுணத்தவன்' என்றும் 'பன்னரும் பெரும்புகழ்ப்பரதன்' என்றும் பலராலும் பாராட்டத் தக்க பரதனை. ஆனால், இழந்ததோ, அத்தனை இன்பத்தையும், என்செய்வாள்! பாவம்!

**தாயும் மகனும்:**

கைகேசியும் பரதனும் தாயும் மகனுமாகச் சந்திக்கும் முதல் சந்திப்பு இதுதான். அப்படித்தான் கதை அமைப்பு, இந்த முதல் சந்திப்பில், தன் அருமை மகன் பேசிய பேச்சோ, மிக மிகக் கொடூரமானது. 'தாயீரல்லீர்! நீர் நோயீர்! பேயீர்' என்பதுதான் தன் மகன் வாயிலிருந்து வந்து இவள் காது கேட்ட முதல் சொற்கள்! பாவம்! கைகேசியின் செவிகள் என்ன பாவம் செய்தனவோ? இவளது, கண்களோ, முதன் முதலாக, பரதனை வருத்தமும் கோபமும் கலந்த உணர்வுகள் தவழும் உருவத்தினனாகத் தான் காண்கின்றன!

இதற்கு யார் காரணம்? தாயா? மகனா? தாயும் அல்ல! மகனும் அல்ல! விதிதான் காரணம் என்று சொல்லிவிடலாம்!

ஆனால் அது சரியான விடையாகாது. கூனியின் சூழ்ச்சியால், கைகேசியின் தூய சிந்தை திரிந்ததே இவற்றுக்கெல்லாம் அடிப்படைக்காரணம்.

பரதன், அயோத்தியில் நுழையும் போது, வான் உயர் காதலினனாகத்தான் இருந்தான். உள்ளே வந்த பிறகு, அவன் உள்ளத்தில் முதலில் வருத்த உணர்வு தோன்றியது; அதனைத் தொடர்ந்து கோப உணர்வு கொதித்துத் துள்ளியது. இதற்குக் காரணம், அவன் கண்டகாட்சியும் தாய் பேசிய பேச்சும் ஆகும்.

நாலுபொழுதும் குறிக்காமலே புறப்பட்ட பரதன், அயோத்தியுள் நுழைந்ததும், களை இழந்து வெறிச் சென்றிருக்கும் நிலையைக்கண்டான் அங்கு, உடனே, தனது தம்பி சத்துருக்கனனைப் பார்த்து, 'இளையோய்! மன்னன் வைகும் தலை நகரம் போல இல்லையே இது இஃது என்ன?' என்று வியப்பும் வருத்தமும் கலந்த நிலையில் கேட்டான் பரதன்.

**தூக்கம்:**

இது கேட்ட இளையவன் ஒரு நாடகக் குறிப்புத் தோன்றுமாறு. "திருநகர்த்திரு, தீர்ந்தனளாம்" என்று, ஐயப்பாட்டோடு பதில் கூறினான். சீதா பிராட்டி அயோத்தியை விட்டு வெளியில் சென்றதை இப்போது இந்த இருசகோதரர்களும் அறிந்தவர்கள் அல்லர்.

அரண்மனையுள் புகுந்த பரதன், முதலில் தந்தை இருக்கக்கூடிய இடங்கள் அனைத்திலும் தேடினான் ஏன்? தந்தைதானே இவன் கேகயம் செல்ல ஆணை பிறப்பித்தான். அதனால், தன் வருகையை முதலில் தந்தையிடம் தெரிவித்துவிடவேண்டும் என்பது பரதன் எண்ணமாகயிருக்கலாம்.

அப்படித் தேடமுயன்று கொண்டிருந்தபோது, கைகேயி அழைப்பதாக ஒருத்தி வந்து கூற

பரதன் தாயின் முன் வந்து நின்றான். நின்றவன், உள்ளத்தில் எவ்வளவு படபடப்புயிருந்தாலும், தாய்க்குக்காட்ட வேண்டிய மரியாதையை, அவள் காலில் வீழ்ந்து வணங்கிச்செலுத்தினான். அவன் தனது தந்தையைப் பற்றிக் கேட்பதற்கு முன்பு, கைகேயி, 'தீதிலர் எந்தை என்ஐயர், ஏனையர்' என்று தனது பிறந்து வீட்டு நலம் பற்றி விசாரித்தாள் 'அந்தம் இல்குணத்தினனான 'பரதனும் ,அது ஆம்' என்று சுருக்கமாகப் பதில் அளித்தான்.

பிறகு, அப்பெருமகன், தாயிடம், 'கோமகன் யாண்டையான்? பணித்திர்' என்று கேட்டு, தனது இருகைகளையும் தலையின் மேல் குவித்துக் கொண்டான். இது, இவனது தந்தை மேல் கொண்ட அன்பை வெளிப்படுத்துகின்றது.

இதற்குத்தாய் கூறிய பதில், பரதனது உள்ளத்தில் ஏற்கனவே இருந்த வருத்தத்தை மேலும் மிகுவித்தது: கோபத்தைக் கிளரவைத்தது. பதில் எப்படி வந்தது?

**'அத்,தேன் அமர் தெரியலான், தேவர் கைதொழ**
**வானகம் எய்தினான்'**

என்பது அந்தப்பதில் உரை. அது, அத்தோடு நிற்கவில்லை, 'வருந்தல் நீ' என்ற ஆறுதல் மொழியும் அமைந்தது அந்தப்பதிலில்.

தசரதன் மரணத்தை, அவன் மனைவி கூறும் சொற்களா இவை? தன் மகனது மனத்துடிப்பைக் கண்ட பிறகாவது' இரக்க உணர்வுடன் இச்செய்தியைக்கூறியிருக்கக்கூடாதா?எந்தஉறவுத் தொடர்பும் இல்லாதவன் கூட, இப்படிச் சொல்லியிருக்க முடியாதே?

தனது தாயே, இப்படி இரக்கம் இல்லாமல் சொல்வதைக் கேட்டால், பரதனுக்குக் கோபம் வராதா? வந்தது. வந்தகோபத்தை, 'தீ எரி, செவியில்

வைத்தனைய தீயசொல் நீ அலது உரை செய நினைப்பரோ? என்ற சொற்களின் மூலம் காட்டினான் பரதன்.

'நெருப்பைக் காதில் வைத்தது போன்ற இக் கொடிய சொற்களை இவ்வாறு கவலை சிறிதும் இல்லாமல் கூறுவதற்கு உன்னையன்றி வேறு யாராவது நினைப்பார்களா?' என்று பரதன் கைகேசியைப் பார்த்துக் கேட்கின்றான், உணர்ச்சி வசப்பட்ட நிலையிலும் பண்பாட்டுடன் தான் பேசுபவன் பரதன் என்பதைக் காட்டுகின்றது இது.

தாயின் மேல் உண்டான கோபத்தை விட பரதனுக்குத் தன் தந்தை இறந்ததனால் உண்டான துக்கம் மேலிட்டு நின்றது, அதனால் தன் தந்தையை நினைத்துப் புலம்புகின்றான் பரதன். 'தந்தையைக் காணமுடியாது போயிற்றே' என்ற துக்கத்தால், பரதன் எவ்வெவ்வாறெல்லாம் மோதிக் கொண்டான் என்பதைக் கூறும் கவிதை, கற்பார் மனத்தில் அப்படியே நிற்கும்.

'எழுந்தனன்; ஏங்கினன்; இரங்கிப் பின்னரும்
விழுந்தனன்; விம்மினன்; வெய்து உயிர்த்தனன்;
அழிந்தனன்; அரற்றினன் அரற்றி இன்னை மொழிந்தனன்'

இவைகள் பரதனது துக்கஉணர்வு வெளிப்பாடுகள்

துக்கமிகுதியால் பரதன் புலம்பிய புலம்பல்களை, கவிச்சக்கரவர்த்தி கம்பன் ஏறத்தாழ பத்து கவிதைகளில் வடித்துக் காட்டுகின்றான். அக் கவிதைகள் அனைத்தும் தசரதனது பெருமைகளையும். பரதன், தந்தைபால் கொண்டிருந்த அன்பையும் வெளிப்படுத்துகின்றன: இது, தசரதன் தன் மைந்தன் பரதனிடம் காட்டிய அன்பைவிட, இந்த மைந்தன் தன் தந்தை பால் கொண்டிருந்த அன்பு மிகமிகப் பன்மடங்கு மேலானது என, பரதனது பண்பட்ட உள்ளத்தைக் காட்டுகின்றது.

**துயர் தீரும் வழி:**

'இன்னை பன்னி ஆவலித்து', ஊற்று உறுகண்ணினனாய பரதன், ஒருவகையாக உள்ளத்தைத் தேற்றிக் கொண்டு, அடுத்து. தனக்குத்தானே பேசிக் கொள்கின்றான்.

'எந்தையும், யாயும், எம்பிரானும் எம்முனும்,
அந்தமில் பெருங்குணத்து இராமன்; ஆதலால்.
வந்தனை அவன்கழல் வைத்த போது அலால்,
சிந்தைவெங் கொடுந்துயர் தீர்கலாது' என்றான்' (2159)

பரதன் வாயிலாக வந்த இந்தக் கவிதை,

"தாயும் தந்தையுமாய் இவ் உலகினில்
வாயும் ஈசன் மணிவண்ணன் எந்தையே" (1.10.6)

என்ற திருவாய் மொழியையும்,

'துயரறு சுடரடி தொழுது எழு என் மனனே' (1.1.1)

என்ற திருவாய் மொழித் தொடரையும்,

'தனக்கு வமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது' (குறள் 7)

என்ற திருக்குறளையும் உள்ளடக்கிக் கொண்டுள்ளது.

பரதன், தனது உள்ளத்தை வாட்டிக் கொண்டிருக்கும் வெங்கொடுந்துயரம் தீர்வதற்கு வழி எது என்பதனை ஆய்ந்து, அதனைத் தனக்குத் தானே கூறித் தெளிவு பெறுகின்றான். இக் கூற்றில் துயரம் தீர்வதற்குரிய வழியைக்காட்டிய, நம்மாழ்வாரையும், திருவள்ளுவரையும் கொண்டு வந்து நிறுத்துகின்றான் கவிச்சக்கரவர்த்தி.

இறைவன் திருவடியைத் தொழுவதே மனக் கவலை மாறும் வழி. அத்தகைய இறைவனாக, பரதனுக்கு இப்போது அமைந்திருப்பவன் 'அந்தமில் பெருங்குணத்து இராமனே? அதனால், அவன்திருவடியில் வணக்கம் செலுத்தினால் தான் துயர் தீரும் எனப் பரதன் தெளிகின்றான்.

பரதன், எப்போதும் தனது உயிர்க்கு உயிரான பரமான்மாகயிருப்பவன் இராமபிரான்தான் என நம்பியிருப்பதை, இது, மேலும் உறுதிப்படுத்துகின்றது.

எவ்வளவு துக்க நிலையில் பேசினாலும், பரதனது பேச்சு, இராம பக்தியின் அடிப்படையில் தான் அமைந்திருக்கும் அப்படித்தான், கவிச்சக்கரவர்த்தி இந்தப் பாத்திரத்தைப் படைத்துள்ளான்.

'பிறப்பு வகையால் எனது தந்தை, தாய்' அண்ணன் என்ற உறவு முறையிலும், பிறப்புக்கு அப்பாற்பட்ட இறைவன் (பரமாத்மா) என்ற நிலையிலும் எனக்கு அமைந்திருப்பவன் இராமபிரானே! அவனே அந்தம் இல் (முடிவுஇல்லாத) பெருங் குணத்தினன்' என்பது பரதனது ஆழ்ந்த நம்பிக்கை அதனால், அவன் திருவடியில் (வேந்தனை) வணக்கம் செலுத்த வேண்டும். அப்படி வணங்கினால்தான் இப்போது வந்துள்ள துயரம் நீங்கும்' என்பது பரதன் கண்ட பரதன் தெளிவு.

அது, 'துயர் அறு சுடரடி' அல்லவா? தன்னை வணங்கும் அடியார்களது துயரத்தை நீக்குகின்ற ஒளி பொருந்தியது இறைவன் திருவடி. 'நின்னின் சிறந்த நின்தாள் இணையவை' என்ற பரிபாடல் கருத்தும் இதனை வலியுறுத்துகின்றது.

'அடியாரது துயரத்தைப் போக்கிய பிறகுதான் அத்திருவடி ஒளிபெற்றுத் திகழுமாம்' என்பது அதன் வியாக்கியானம்.

அத்தகைய திருவடியினன், இப்போது இராமபிரான்தான். அதனால், இராமபிரானைக் கண்டு, 'வந்தனை அவன் கழல் வைக்க வேண்டும்' என்பது பரதனது ஆர்வம் அப்போதுதான் 'சிந்தை வெங் கொடுந் துயர் தீரும்' என்பதும் அவன் நம்பிக்கை.

இந்த நம்பிக்கையோடு இராமபிரானை இருக்கும் இடத்தைத் தேட முற்பட்டான் பரதன். அப்போது, கைகேசியே, வந்து குறுகிட்டு இராமபிரானைப் பற்றிய செய்தியைக் கூறுகின்றாள்.

**கைகேசி கூறிய செய்தி :**

'தெவ்வடு சிலையினோய்! தேவி, தம்பி, என்று
இவ் இரு வோரொடும் கானத்தான்'

என்பது, கைகேசி கூறிய இராமபிரானைப் பற்றிய செய்தி.

இக்கூற்று, கைகேசியின் அறியாமையைக் காட்டுகின்றது: இதனைக் கேட்ட பரதனிடம் வெறும் புணர்ச்சியைத் தூண்டுகின்றது.

தன் மகனது தூய மன நிலையைப் புரிந்து கொள்ளாமல், இந்தத் தாய் செய்யும் செயல்களும், சொல்லும் சொற்களும், இவள் இப்போது அறிவு கலங்கிய நிலையில் இருக்கின்றாள் என்பதைக் காட்டுகின்றன.

பரதன் இராமபிரானைத் தேட முற்பட்டநிலையில். இவளே வலியனாகச் சென்று 'இராமன்' கானகம் 'சென்றான்' என்று சொல்லி சிக்கலில் மாட்டிக் கொண்டு விட்டாள். என்ன சிக்கல்? 'ஏன் கானகம் சென்றான்' எனக் கேட்டால் இவளே அதற்கு விடை கூற வேண்டியிருக்கும். அப்போது பரதன் கோபம் முழுமையும், இவள் மேலேயே திரும்பும் கோபத்தின் வேகத்தால் என்ன வேண்டுமானாலும் செய்துவிடுவான். கோபம், எந்தக் கொடுஞ்செயலையும் செய்யத் தூண்டும்: அந்தக் கொடுஞ் செயலுக்குப் பிறகுதான், அது ஆறும் அடங்கும். இத்தகையசிக்கலை இவளே ஏற்படுத்திக் கொண்டு விட்டாள். இது, கைகேசியின் அறிவு, கலக்கத்தில் உள்ளது என்பதை நிரூபிக்கின்றது.

அறிவு சரியான நிலையில் இருந்திருந்தால், 'இந்தச் செய்தியை வேறு யாராவது சொல்லி விட்டுப் போகட்டுமே' என அமைதியாகயிருந்திருப் பாள் இந்தத் தாய். அப்போது, பரதன் கோபம், செய்தியைச் சொன்னவர் பால்திரும்பும். இவள் தப்பித்துக்கொண்டிருந்திருக்கலாம். 'தந்தைஎங்கே' என்று நேரடியாகக் கைகேசியிடம் கேட்டான் பரதன் அதற்கு அவள் விடை கூற வேண்டியிருந்தது, இப் போது, தன் தாயிடம், இராமபிரானைப் பற்றி கேட்கவில்லை இந்த மகன். ஏன்? இவள் சொல்வது எல்லாம் துயரச் செய்தியாகவே இருக்கும் எனக் கருதினானோ என்னவோ?

ஆனால், இந்தத்தாயே மகன் முன் சென்று, செய்தி சொல்லி, பரதனின் வெறுப்புக்கும் கோபத் துக்கும் உள்ளாகிவிட்டாள்.

இப்போது, இவள் கூறிய, துயர்ச் செய்தி அடங்கிய இந்தக் கூற்று. பரதனது உள்ளத்தில் தசரதன் மரணத்தால் ஏற்பட்ட துன்ப உணர்வையும் தாயின்மேல் தோன்றும் கோப உணர்வையும் அடக்கி, ஒரு வெறுப்பு உணர்வை மேலோங்க வைத்து விட்டது.

என்ன வெறுப்பு உணர்வு? 'தனது உயிர்க்கு உயிராகயிருக்கும் பரமாத்மாவாகிய இராமபிரான் கானகம் சென்றான்' என்ற, துயர்ச்செய்தி கேட்கும் நிலைக்கு நாம் ஆளாகி விட்டோமே' என்று தன் மேலேயே தோன்றியது ஒரு வெறுப்புணர்ச்சி.

யார் மேலும் குறை காணாது. தன்னையே வெறுத்துக்கொண்ட, வெறுப்புணர்ச்சியும் பரதனது பண்பாட்டையே எடுத்துக் காட்டுகின்றது.

அந்த வெறுப்புணர்வுடன், 'இன்னமும் எனைத் துள கேட்பன துன்பம் யான்' என்று தாயிடம் நேராகக் கேட்டுவிட்டான் மகன்.

'யான் கேட்பன இன்னமும் எனைத் துள துன்பம்' என்ற தொடர், பரதன் தன்னை வெறுத்துக் கொண்டதைக் காட்டுகின்றது. இந்தக் கேள்விக்கு, கைகேசி உடனடியாகப் பதில் கூறுவதாகக் கவிதை இல்லை ஏன்?



இது, ஒரு பாத்திரப் படைப்புத் திறன். பாத்திரங்களின் குணநலன்களை வெளியிடுவதற்கு, இரு பாத்திரங்களைச் சந்திக்க வைப்பதையும், அவர்களை உரையாட வைப்பதையும் ஒரு உத்தியாகக் கையாளுவது காவிய மரபு. அதற்கேற்ப, கவிச்சக்கரவர்த்தி கம்பனும், தனது படைப்பாகிய பரதனது உயர்பண்பாட்டை வெளிப்படுத்துவதற்காக, கைகேசியை உடனே பதில் சொல்ல வைக்காமல், பரதனைச் சிந்தித்துப் பேசவைக்கின்றான்.

அவை இரு கவிதைகளாக அமைந்துள்ளன.

'ஏங்கினன் விம்மலோடு இருந்த ஏந்தல், 'அப்
பூங்கழல் காலவன் வனத்துப் போயது,
தீங்கு இழைத்த அதனினோ? தெய்வம் சீறியோ?
ஓங்கிய விதியினோ? யாதினோ?' எனா,

'தீயன இராமனே செய்யுமேல், அவை
தாய்செயல் அல்லவோ, தலத்துளோர்க்கு எலாம்?
போயது தாதைவிண் புக்க பின்னரோ?
ஆயதன் முன்னரோ அருளுவீர்' என்றான்.

பரதன், இராமபிரானை எவ்வளவு உயர்வாக மதித்துள்ளான் என்பதை இக் கவிதைகள் காட்டுகின்றன.

ஒரு நாட்டரசன் காட்டுக்குச் செல்வது வேட்டையாடுவதற்காகயிருக்கலாம்? இராமபிரான் தம்பி இலக்குவனோடும், மனைவி சீதாபிராட்டியோடும் சென்றிருப்பதால், வேட்டையாடுதல் காரணம் அல்ல காட்டுச் செலவுக்கு.

வானப்பிரஸ்த நிலையா? மனைவியுடன் சென்றிருப்பதால் அதுவும் அன்று. சமுதாயத்துக்குத் தீங்கிழைத்தவர்களைக் காட்டுக்கு ஓட்டுவது அரச மரபு. அப்படித் தீங்கு இழைத்ததாலா? நல்ல நிலையிலிருப்பவரும் தெய்வக் குற்றத்திற்கு உட்பட்டு அறிவுப் பித்தேறி காடு செல்வதுண்டு: (தெய்வம் சீறியோ) ஊழ்வினையாக இருக்குமா, யாது காரண மாகயிருக்கும்எனச்சிந்தித்துசிந்தித்துஒரு முடிவுக்கு வந்து, இறுதியில் ஒரு கேள்வி கேட்கின்றான் மகன் தாயிடம்.

கேள்வியை இறுதியில் கொண்ட இரண்டாவது கவிதையே பரதனது பண்பாட்டை நன்கு விளக்கு கின்றது. இதன் விளக்கத்தை. பேராசிரியர் திரு அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள் தெளிவாக்கி யிருப்பது மிகவும் பொருத்தமாக அமைந்துள்ளது.

‘இராமன் மாட்டு,அவன் கொண்டிருந்த அன்பும் நம்பிக்கையும் எத்தகையன? ’இராமனா தீமை செய் வான்?’ என்று ஒரு வினாவைஎழுப்பினான். அதற்கு ’ஆம்’ என்றோ, ‘அல்ல’ என்றோ யாரும் விடை கூற வில்லை’ ஒரு வேளை தீமையே செய்தான் என்று யாராவது கூறுவாராகில், அதற்கு விடை காண்கின் றது அவனுடைய பண்பட்ட உள்ளம். இராமன் செய்தவற்றில் நன்மை தீமை ஆராய்ச்சி செய்ய யாருக்கும் உரிமை இல்லை இது முறையா? ஏன் செய்யக் கூடாது‘ என்கிறீர்களா? இதோ விடை கூறுகிறான் பரதன்.

‘ஒரு குழந்தையை வளர்க்கும் தாய், நிலை மைக்கு ஏற்பக் குழந்தைக்கு ஆகாரத்தையும் மருந் தையும் தருகின்றாள்.சில சந்தர்ப்பங்களில் குழந்தை உணவை விரும்பிக்கேட்கும் பொழுது, தாய் மறுத்து விடுகிறாள். அது, விரும்பாத மருந்தைத் தருகிறாள்.

மருந்திலும் சிலநேரம் இனிப்புடைய மருந்தையும் இன்னும் சில நேரம் கைப்புடைய மருந்தையும் அல்லவா தருகிறாள்? உணவை மறுத்துவிட்டுத் தாய் கைப்பு மருந்தைக் கொடுக்கும் பொழுது, அத்தாயைக் காண்பார், யாராவது "இது கொடிய செயல்" என்று கூறுவதுண்டா? ஆனால், தாயே கொடுப்பினும் கைப்பு மருந்து இனிப்புடையதாக மாறிவிடுமா? கைப்பு கைப்புத்தான், தாயே அன்புடன் கொடுத்தாலும். ஆனால், அதனைத் தந்த காரணத்தால் தாயைக் கருணையற்றவள் என்று யாரும் கருதுவதில்லையே!

"அதே போன்று, இராமன் ஒரு கொடுமை செய்துவிட்டான் என்றால், அதனைக் கொடுமை என்று கூறுவதைக்காட்டிலும், கொடுமை வேறு இல்லை. தாய் தந்த மருந்தைக் கொடுமை என்று கூறும் பொழுதுதான், 'இராமன் செயலையும் கொடுமை என்று கூறவேண்டும். அதனாலேதான், "தீயன இராமனே செய்யும்?" என்று கேட்டான் பரதன்."

"இவ்வினாவிலேயே இராமன் தீமை செய்யவே மாட்டான் என்ற விடை கிடைத்துவிடுகிறது. ஒரு வேளை அவன் நன்மை என்று கருதிச் செய்ததைப் பிறர் கொடுமை என்று கருதினால், என் செய்வது? அதற்கு பரதன் விடை கூறுகிறான் இரண்டாம் அடியில். "செய்யுமேல் அவை நலத்துளோர்க்குத் தாய் செயல் அல்லவோ?" என்கிறான். இராமன் செயல்கள் அனைத்தையும் தாயின் செயலாகக் காணும் பரதனது பண்பாட்டையாரே அளவிட்டு அறிய முடியும்? ஆம்! அவ்விராமனே தன் வாயால் அறத்தின் வடிவென்றும், செம்மையின் ஆணி என்றும் பரதனைப் புகழ்கின்றான்." +

இது, பேராசிரியர் இந்தக் கவிதைப் பொருளை வெளிப்படுத்தத்தரும் விளக்க உரையாகும்.

---

+ தம்பியர் இருவர், பக் 112, 113.

**வினாவும் விடையும்:**

'போயது தாதை விண்புக்க பின்னரோ?
ஆயதன் முன்னரோ'-பரதன் வினா இது.
'அவ் அரசர் கோமகன் இருக்கவே
வனத்து அவன் எகினான்'-தாயின் பதில் இது.
'பெற்றவன் இருக்கவே. பிள்ளை கான்புக
உற்றது ஏன்? தெரிதர உனசெய்வீர்?'-பரதன் வினா.

'வாக்கினால் வரம்தரக் கொண்டு, மைந்தனைப்
போக்கினேன், வனத்திடை போக்கி, பார் உனக்கு
ஆக்கினேன்: அவன் அது பொறுக்க லாமையால்,
நீக்கினான் தன்உயிர், நேமி வேந்து'-தாயின் பதில்

இந்தப் பதில்தான், புகழேணியின் உச்சியில் நின்ற பரதனை, கோபக்குன்றின்மேல் ஏற்றிவைத்து விட்டது. 'கோபமே பாபம்' என்பது சான்றோர் களின் அனுபவமொழி, கோப உணர்வு, பாபச் செயல்களைச் செய்வதற்குத்தான் வழி வகுக்கும்: எற்றென்று இரங்குவ செய்யும்' செயல்களைச் செய்யவே ஊக்கம் அளிக்கும்: அத்தகைய கோப நிலையிலும் பாபச்செயல் எதுவும் செய்யவில்லை: 'ஐயோ இப்படிச்செய்து விட்டோமே' என்று கோபம்-அடக்கிய பிறகு, எண்ணிவருந்தும் செயல் களையும், செய்யவில்லை பரதன் 'கோபம்மிக்க நிலையிலும். பரதனது செயலோ, சொல்லோ, பண்பாட்டைக்குறைக்கும் வகையில் அமையவில்லை. இதைக் காட்டவே, கம்பநாடன், கதையில் இத்த கைய ஒரு சூழ்நிலையை அமைத்துள்ளான் என எண்ண வேண்டியுள்ளது.

தான் செய்த செயலைத் தன் மகன் நன்மை க்காகவே, செய்ததாகக் கொள்ளும் உறுதியுடைய கைகேசி,

'மைந்தனை-இராமனை வனத்திடைப் போக்கினேன்' என்றும், 'பார் உனக்கு ஆக்கினேன்' என்றும் தெரிவித்தாள். இது தன் செயல் என்றும், 'அது பொறுக்கலாமையால் நீக்கினான் தன் உயிர் நேமி வேந்து' என்பதன் மூலம், உயிர் போனது தசரதன் செயல் என்றும் கூறித்தப்பித்துக் கொள்ளலாம் என எண்ணி இத்தகைய பதிலைக் கூறினாள் கைகேசி.

கைகேசிக்கு முன்னால் இப்போது நிற்பவன், அவள் மகன் அல்ல! தசரதனின் மைந்தன் அல்ல! கோசல நாட்டுக் குடிமகன் அல்ல! இராமபிரானைத் தெய்வமாக மதித்து, அப்பிரானை வழிபாடு செய்யும் இராமபக்தன் நிற்கின்றான். தனது எதிரில் நிற்கும் பரதனது இராமபக்தியைப் புரிந்து கொள்ளாது பேசப் பட்ட பேச்சு, கைகேசி சொன்ன பதில் தனது வழிபடு தெய்வத்தையே காட்டுக்கு விரட்டியவள் இந்தக் கைகேசி என்றால், அவள் மேல் எவ்வளவு கோபம் வரும் பரதனுக்கு. அந்தக் கோப உணர்வு,பரதனிடம்வெளிப்பட்டது.அதைத்தனக்கே உரிய தனித்துவமுறையில், கவிதையில் படம் பிடித்துக் காட்டுகின்றான் கம்பநாடன்.

**கோபம்:**

'சூடின மலர்க்கரம், சொல்லின் முன், செவி
கூடின; புருவங்கள் குனித்துக் கூத்து நின்று
ஆடின; உயிர்ப்பினொடு அழல் கொழுந்துகள்,
ஓடின; உமிழ்ந்தன, உதிரக் கண்களே!' (2167)

'துடித்தன கபோலங்கள்; சுற்றும் தீச்சுடர்
பொடித்தன மயிர்த்தொளை; புகையும் போர்த்தது;
மடித்தது வாய்; நெடு மழைக்கை மண்பக
அடித்தன, ஒன்றொடு ஒன்று அசனி அஞ்சவே? (2168

---

கபோலம் - கன்னம். அசனி - இடி.

பரதனது கோபத் தோற்றத்தை வெளிப்படுத்த வந்த கவிதைகள் இவைகள். உள்ளத்துள் கொதித்து எழும் கோப உணர்வு, மனிதனது புறத்துறுப்புக் களை எவ்வெவ்வாறெல்லாம் ஆட்டிப் படைக்கும் என்பதை இதை விட, வேறு எந்தக் கவிஞனும் கவிதையில் வடித்துக் காட்டிவிட முடியாது. இது, இலக்கியத் திறனாய் வாளர்களின் தீர்ந்த முடிவு.

இவ்வளவு வேகமான கோபம் வந்தும், பரதன் யாரையும் எதுவும் செய்யவில்லை. இது, பரதன் பண்பாட்டின் சிகரமாகயிருக்கின்றான் என்பதற்கு எடுத்துக்காட்டு.

இந்தத் தாங்கருஞ் சினத்தைக் கண்டு, யாருக்கு என்ன ஆகுமோ,' என்று அஞ்சினார். யார்? யார்?

''அஞ்சினர் வானவர்; அவுணர் அச்சத்தால்
துஞ்சினர் எனைப்பலர்; சொரிமதத் தொளை
எஞ்சின திசைக்கரி, இரவி மீண்டனன்:
வெஞ்சினக் கூற்றும், தன்விழி புதைத்ததே.'' (2170)

தேவர்கள், அசுரர்கள், திசையானைகள், சூரியன், யமன் ஆகியோர் பரதனின் சினத்தைக் கண்டு அஞ்சினார்கள். எதற்கும் யாருக்கும் அஞ்சாதவர்களே, பரதனது பெருஞ்சினத்தைக் கண்டு அஞ்சினார்கள் என்றால், அக்கோபம், எவ்வளவு கொடுந்தோற்றத்துடன் வெளிப்பட்டி ருக்கும் என்பதை யூகித்து உணரலாம். அப்படி யிருந்தும், பரதன் செயல் பட்ட முறை, அவனது பக்திப்பண்பாட்டின் அடிப்படையில் தான் அமைந்திருந்தது.

**கோளரி:**

''கொடியவெங்கோபத்தால் கொதித்த கோளரி,
கடியவள் தாய் எனக் கருது கின்றிலன்;
'நெடியவன் முனியும்' என்று அஞ்சி நின்றனன்;
கிழஉரும் அனைய வெம்மொழி இயம்புவான்'' (2171)

---

அவுணர்-அசுரர்: கரி-யானை: கூற்று-யமன்: இரவி-சூரியன்.

கோபத்தால் கொதித்தவன் கோளரியாகச் செயல்படுகின்றான். 'அரி' என்றால் சிங்கம். 'கோள்' என்றால் கொள்கை. தனக்கு என்று ஒரு கொள்கையை உடையது சிங்கம். தனது கொள்கைக்கு யார் இடையூறு விளைவித்தாலும், அவர்கள் மேல் கோபத்தோடு பாய்ந்து கொல்லும் இயல்பினது சிங்கம்.

பரதன் இப்போது கோளரியாகத் தோற்றுகின்றான். ஆயினும் கோளரி போன்று செயல்படவில்லை இந்தப் பண்பாட்டாளன். இவனது கொள்கை குறிக்கோள் பகவத் கைங்கர்யம். அதாவது இராமபாதசேவை. தனது வாழ்க்கைக் குறிக்கோளாகிய இந்த இறைத் தொண்டுக்கு யார் இடையூறு செய்தாலும், அவர்களைக் கோபத்தோடு ஒழிக்க வேண்டியவன் இவன். ஆனாலும் அதனைச் செய்யவில்லை இந்தப் பெருமகன் ஏன்?

தனது குறிக்கோளுக்குத் தடையாக நின்றவள் தனது தாய். 'தாய்' என்பதனாலே அவளைக் கொல்லாமல் விட்டானா இவன்? அன்று. 'நெடியவன் முனியும்' என்பதால்தான், குறிக்கோளுக்குத்தடையாகயிருந்தவளைப் பரதன் தண்டிக்கவில்லை.

நெடியவன் முனிவான். (இராமபிரான் கோபிப்பான்) ஏன்? கைகேசியைத் தண்டித்து விட்டால், பரதனை இராமன் கோபிப்பிதற்குரிய காரணங்களை, பரதன் திருவுள்ளத்தை ஒட்டி ஆராய வேண்டும். அப்படி ஆய்ந்தவர் திருநாராயணையங்கார் சுவாமிகள். அய்யங்கார் ஆய்வுரை, பரதனது பக்தித் திருவுள்ளத்தை நன்கு விளக்குகின்றது.

'சர்வலோக நாயகனான இராமபிரான், எனக்கு அடியவனான இவன், பெண் கொலை செய்தானே என்று திருவுள்ளம் கன்றும்: அன்றியும், தாய்க் கொலை செய்தானே என்று திருவுள்ளம் கன்றும்; அன்றியும், என் தாயைக் கொன்றானே என்று திருவுள்ளம் கன்றும்: அன்றியும் எனக்குப் பரதந்திரனான இவன், ஸ்வதந்த்ரனாய் இது செய்தானே என்று திருவுள்ளம் கன்றும்.' என்பது அய்யங்காரது கருத்து. +

கோளரியாக நின்றும், தனது குறிக்கோளுக்கு இடையூறு விளைவித்த தாயை, பரதன் தண்டிக்காது விட்டதற்குக் காரணம் இராமபிரான் கோபிப்பான் என்று அவன் அஞ்சியதால்தான்.

இது, இராமபிரானிடம் பரதன் எவ்வளவு பயபக்தி உள்ளவனாகச் செயல்படுகின்றான் என்பதற்கு எடுத்துக் காட்டு.

பெற்ற தாயைக் கொல்ல அஞ்சிய பரதன், தனது கோபத்தையும் தாயின் செயலை வெறுத்த தனது வெறுப்புணர்வையும் தனது சொற்களால் அள்ளி அள்ளிக் கொட்டிவிட்டான். அவ்வளவையும், கவிமாமன்னன் கம்பன் 17 கவிதைகளாக வடித்துக் கொடுத்து விட்டான். அந்தக் கவிதைகள் அனைத்தும், பரதனது உள்ளத்து உணர்வுகளைப் பிழிந்தெடுத்துத்தருவனவாய் அமைந்துள்ளன.

தனது, 'துன்னரும் துயர் தீர' இனி என்ன செய்வது எனச் சிந்தித்தான் பரத நம்பி. சிந்தனையின் முடிவு, அவனை வளர்த்தெடுத்த தாயிடம் செல்லத் தூண்டியது. அவ்வாறே கோசலைப் பிராட்டியிடம் சென்றான் பரதன்.

---

+ செந்தமிழ்த் தொகுதி 37, பகுதி. 2, பக் 336-

[8]

# நின்னையாவரே நிகர்க்கும் நீர்மையர்

**கோசலைப்பிராட்டி :**

கோசலை, கோக்கள்வைகும் முற்றத்தான் (தசரதன்) முதல் தேவி: மூன்றுலகும் ஈன்றானை (பிரம்மனை) முன் ஈன்றானை (திருமாலை) மகனாகப் பெற்றவள்: ஆயினும் அவனை வளர்க்கும் பேறு அற்றவள். ஆனாலும், பங்கமில் குணத்துப் பரதனை, நிறைகுணத்து நம்பியாக வளர்க்கும் நற்பேறு பெற்றவள்: சுற்றத்தார், தேவரொடும் தொழுதற்கு ஒத்த உயர்வுற்றவள்; ஏழை வேடனை, இழிகுலத்தவன் என எண்ணாது, தம் மக்களுள் ஒருவனாக அணைத்துக்கொண்ட அன்புடைத் தாய். இந்தக்குகனை, 'கைவீரக் களிறு அனைய காளை' எனப் புகழ்ந்து, 'இவனோடு கலந்து நீவிர் ஐவீரும் 'ஒரு வீராய் அகலிடத்தை நெடுங்காலம் அளித்திர்' என்று தன் மக்களுக்கு ஆசீர்வாதம் செய்த அருளுடை அன்னை; குலம், பொறை, கற்பு இவை சுமந்த தூய கோசலை எனப்பட்டவள்.

இத்தகைய தூய கோசலைப் பிராட்டியை அடைந்து அத்தாயின் பொன் அடியைத்தொழுதால், தன் துயர் தீரும் என்பது பரதன் நம்பிக்கை. நம்பு தற்குக் காரணம், தன்னை வளர்த்தவள் கோசலை: அது மட்டும் அன்று: தன் உயிர்க்கு உயிரான பரமாத்மாகிய இராமபிரானை மகனாகப் பெற்ற தெய்வப் பெற்றியள் கோசலை. இந்த எண்ணமும் பரதனது நம்பிக்கைக்குக் காரணமாகும்.

இராமபிரானைக் காண இயலாததால், அவனைப் பெற்றெடுத்த தூய கோசலையின் பாதங்களையேனும் வணங்கித்துயர் தீர்த்துக் கொள்ள எண்ணினான் போலும் பரதன்.

**பரதன் புலம்பல்:**

கோசலைப் பிராட்டியின் பக்கம் சென்ற பரத நம்பி, துயரம் தாங்காமல், கீழே விழுந்தான்: அவள் பாதத்தைப் பற்றினான், இதைக்கவி, 'கேழ்கிளர் காண்தகு தடக்கையின், கமலச்சீறடி பூண்டனன்: கிடந்தனன்: புலம்பினான்' எனக் கூறுகின்றது.

கோசலைத்தாயின் இருபாதங்களையும் தன் இருகைகளால் அணைத்துக் கொண்டு, கீழே கிடந்த படியே அழுது புலம்பினான் பரதன். கடலில் மூழ்கும் நிலையில் உள்ளவன், தன்னைக் காத்துக் கொள் வதற்கு, ஏதேனும் ஒன்றைத் துணையாகப் பற்றிக் கொள்வான் அல்லவா? அது போன்று, இந்தப் பரதனும், தனது வளர்ப்புத் தாயின் பாதங்களை நன்கு பற்றிக் கொண்டான்; துயர்க் கடலில் மூழ்காமல் இருப்பதற்கு.

தனது பாதங்களைப் பற்றிக் கொண்டு புலம்பும் பரதனது உள்ளத்துயரத்தின் ஆழத்தைக் கண்டாள் கோசலைத்தாய்.

துயரத்தின் ஆழம் "எந்தை எவ்வுலகு உளான்? எம்முன் (இராமபிரான்) யாண்டையான்?" என்று சொல்லிக் கொண்டு புலம்புதலால் மட்டும் காணப்படுவது அன்று: பார் இருளை நீக்கும் வரதனில் (சூரியனில்) ஒளி பெற மலர்ந்த தொல் குலம் 'பரதன்' என்று ஒரு பழிபடைத்தது" என்ற—பரதனது தூய எண்ணத்தாலும் துயர்க்கடல் ஆழமானது.

சூரிய வம்சம் ஒளி பெற்றுத் (புகழ் நிறைந்து) திகழ்ந்த ஒரு பழமையான (தொல்) குலம். அந்தக் குலத்தில் தோன்றிய. வாய்மையின் விளக்கமாக வாழ்ந்த தசரதன், வானகம் எய்துவதற்கும், உலகத்தில் அறந்தலை நிறுத்தவந்த அறக் கடவுளான இராமபிரான் கானகம் செல்வதற்கும், தனது பிறப்பு தான் காரணம், என்று பரதன் கருதுகின்றான். அதனால், 'இந்தத்தொல் குலத்தின் ஒளியை (புகழை) மறைக்க வந்த களங்கம் இந்தப் பரதன்' என்று உலகத்தார் தன்னைப் பழிப்பார்களே என்ற அச்சத்தாலும் துயரம் மிகுதியாயிற்று பரதனுக்கு. 'இந்தப் பழியை எவ்வாறு போக்கிக் கொள்வது?' என்று, தாய் செய்த செயலுக்குத் தன்னை நொந்து கொள்கின்றானே இந்தப் பரதன்! இதன் மூலம், பரதனது உள்ளத் தூய்மையை உணர்ந்தாள் கோசலைத்தாய்.

துயரப் புலம்பல், உள்ளத் தூய்மையைப் புலப்படுத்தியது. மனித வாழ்க்கையில், சோதனை ஏற்படும் போதுதான், சோதனைக்கு உட்பட்ட உள்ளம், எவ்வாறு செயல்பட்டுக் கொண்டிருந்தது? என்பது விளங்கும். அப்படி, இந்தச் சோதனை, பரதனை, பங்கம் (குற்றம்) இல் குணத்தின் என்பதை வெளிப்படுத்தியுள்ளது.

**தாயின் வினா:**

பரதனது உள்ளத் தூய்மையைத் தான் உணர்ந்திருந்தாலும், உலகத்தினருக்கு அத் தூய உள்ளத்தின் பெருமையைப் புலப்படுத்துவதற்காகப் பரதனிடம் ஒரு கேள்வி கேட்டாள் கோசலைத் தாய். அக் கேள்வி, உலகத்தார் பரதனைப் பற்றி என்ன நினைப்பார்கள் என்ற ஐயத்தைத் தன்மேல் ஏற்றிக் கொண்டதாக அமைந்துள்ளது,

**'மை அறு மனத்துஒரு மாசு உளான்அலன்;**
**செய்யனே' என்பது தேறும் சிந்தையாள்,**
**கைகயர் கோமகள் இழைத்த கைதவம்**
**'ஐய!நீ அறிந்திள போலுமால்' என்றாள். (2197)**

இக் கவிதையின் முற்பகுதி பரதனது உள்ளத் தூய்மையைச் சிறிதும் ஐயம் அறத் தெளிந்தாள் கோசலை என்பதையும், பிற்பகுதி, அவள், ஐயத்துடன் கேட்ட கேள்வியையும் தெரிவிக்கின்றது. கவிதையின் முன் இரண்டு அடிகள் உணர்த்தும் பொருளை அடிப்படையாக்கிக் கொண்டுதான். பின் இரண்டடிகளின் கருத்தை இன்னதென்று தெளிய வேண்டும்.

பரதன் இயற்கையாகவே குற்றம் அற்ற மனத்தினன்: (மைஅறுமனம்) நடந்துள்ள நிகழ்ச்சிகளைக் கொண்டு பார்த்தால், (தந்தை வானகம் போயது: தமையன் கானகம் சென்றது) செயற்கையாக ஏதேனும் வஞ்சனைக் குற்றம் வந்திருக்குமோ எனச் சிலர் கருதலாம்: அப்படியும் மாசு (குற்றம்) உளான் அலன்: அதனால், அவன் முழு நேர்மையாளனே. (செய்யனே) இது, கோசலையின் தெளிவான முடிவு (தேறும் சிந்தையாள்) முதல் இரண்டடிகள் தெரிவிக்கும் கருத்து' இது.

---

கோமகள்-கைகேசி: கைதவம்-வஞ்சனை: தேறும்-தெளியும்.

தெளிந்த சிந்தையள், ஐயத்தோடு கேள்வி கேட்டது ஏன்? சிந்தையில் தெளிவு வந்த பிறகு ஐய உணர்வுடன் கேள்வி வரக்கூடாது. வந்துள்ளது. அது என்ன காரணத்தால் வந்தது? அதில் ஏதேனும் ஆழ்ந்த கருத்து இருக்க வேண்டும்.

எந்தச் சொல்லுக்குப் பொருள் காண்பதாயிருந்தாலும், அதனைச் சொன்னவர்களது உள்ளத்து உணர்வுக்கு ஏற்பப் பொருள் காண வேண்டும். 'கைதவம்' என்றசொல் இங்கு கையாளப்பட்டுள்ளது கைதவம் என்றால் வஞ்சனை என்று பொருள் எது வஞ்சனை? தனது சொந்த நலனுக்காகவே, யாருக்கும் தெரியாமல், பிறர்க்குத் தீங்கிழைக்கும் சூழ்ச்சி. வஞ்சனை எனப்படும். திருட்டைவிட, வஞ்சனை மிகமிகக் கொடிய பாதகச் செயல். இத்தகைய பொருள் தரும் சொல், தூய கோசலையின் வாயில் வந்துள்ளது. அதுவும் யாருக்காக வந்துள்ளது? 'பங்கம் இல் குணத்தவன்' என்று இராமபிரானாலும் 'நிறைகுணத்தவன்' என்று கோசலைப் பிராட்டியாலும் பாராட்டப் பெற்ற பரதனுக்காக வந்துள்ளது 'கைதவம்' என்ற கொடுஞ்சொல்.

> "கைகயர் கோமகள் இழைத்த கைதவம்
> ஐய! நீ அறிந்திலை போலும்!"

என்பது கோசலைப் பிராட்டியின் ஐயப்பாட்டு உணர்வுதழுவிய கேள்வி;

கைகேசி இழைத்தது கைதவம்-வஞ்சனைதான் தனது மகன் கோசல நாட்டு அரசனாக முடி சூட வேண்டும். அதற்காக, இரவில் யாருக்கும் தெரியாமலும், பிறருக்கு வரும் துன்பங்களைப் பொருட்படுத்தாமலும் தசரதன் மூலம் தனது காரியத்தைச் சாதித்துக் கொண்டு விட்டாள் கைகேசி.

இது, பிறகு உலகறிந்த இரகசியமாயிற்று. தன் மகன் நாடு ஆளட்டும். கைகேசி அத்தோடு நின்றிருக்கலாமே! இராமபிரானைக் காட்டுக்கு அனுப்ப முயன்றது ஏன்? இதில்தான், அரசியல் அனுபவம் நிறைந்த வஞ்சனை அடங்கியுள்ளது. சூழ்ச்சி நிறைந்துள்ளது.

என்ன சூழ்ச்சி? 'உரிமை உடையவனிடமிருந்து அரசாட்சியைப் பறித்துக் கொள்வது ஒரு செயல். ஆனால், அவ்வுரிமையாளன், நாட்டுமக்கள் கண்ணெதிரே உலவி வருவானாகில், முடி பறித்து ஆள்பவனுக்கு, ஆபத்துத்தான் எஞ்சும். முடி இழந்தவன் மேல், மக்கள் கருணை சிறிது சிறிதாகச் சேர்ந்து, இறுதியில் ஆள்பவனுக்கே உலை வைத்து விடும். எனவே, அறிவுடைய ஒருவன் உரிமை உடையவனை நீக்கி விட்டு, அவன் முடியைப் பெற்றால், உடனே உரிமையாளனை மக்கள் முன்னிலையிலிருந்து அகற்றிவிட வேண்டும். "எதிரே இல்லாதவன் நினைவை உடன் மறப்பதே பொது மக்கள் பண்பு". —இதனால். அரசியல் சூழ்ச்சியை நன்கு அறிந்த ஒருவனே இராமனைக் காட்டுக்கு அனுப்ப ஏற்பாடு செய்திருத்தல் வேண்டும். அவன் யார்? இவ்வாறு நினைந்து பார்க்கின்றாள் கோசலை. கைகேயி இவ்வளவு ஆழ்ந்து அரசியல் நுணுக்கங்களை ஆய்பவள் அல்லள்; எனவே, அவளே செய்தது அன்று இச்செயல், யாரோ அவளைத் தூண்டியிருத்தல் வேண்டும் அது யாராய் இருக்கலாம்..............

பிறர் ஒருவர் மேலும் ஐயம் கொள்ளாத வியலாத நிலையில் பரதன் மேற்கொண்ட சிறு ஐயம், பெரிய உறுதிப்பாடாய் அவள் மனத்தில் நிலைத்து விட்டது. அவன் ஒரு வேளை கேகய நாட்டிற்குச் செல்வதற்கு முன்னரே, இவ்வாறு ஒரு கருத்தைத் தாயிடம் கூறிப் போயிருந்தாலோ! நல்லறிவும் ஆழ்ந்த கல்வியறியும் உடையவனாகிய பரதனுக்கே இந்தஅரசியல் சூழ்ச்சி தெரிந்திருக்க நியாயம் உண்டு.

எனவே, அவனே இதனைச்செய்தான் என்ற முடிவுக்கே வந்துவிட்டாள் கோசலை,' இது, பேராசிரியர் திரு. **அ.ச.ஞானசம்பந்தன்** அவர்களது கோசலைபற்றியதிறனாய்வு.பேராசிரியர், இலக்கியத் திறனாய்வுத்துறையில் மிகமிக மேம்பட்டவர். யாரும் இத்துறையில் அவரை மிஞ்சமுடியாது என்பது உண்மைஆனால், இங்கு,கவிச்சக்கரவர்த்திகம்பனால் படைக்கப்பட்ட கோலைப் பாத்திரத்திறனாய்வில் பேராசிரியர் உள்ளம் நடு நிலை தவறி விட்டதோ என எண்ணத் தோன்றுகின்றது.

கோசலை, பாத்திரப் படைப்புக் கலைத்திறனில் உச்ச நிலையில் நிற்கும் கம்பனால் படைக்கப்பட்ட பாத்திரம். கோசலைப் பிராட்டி தூய்மைதவழும் நல்ல ஒரு சிறந்த பாத்திரமாகக் காவியத்தில் படைக்கப் பட்டுள்ளாள். அவளது சொல்லிலோ, செயலிலோ யாரும் எங்கும், எப்பொழுதும் குறைகண்டதில்லை, இந்தத் தூயதாய்மைப் பிராட்டியிடம் எதையேனும் தவறாகக் கண்டால், அவரே தவறினவராவார்.

பரதனை, பிறப்பிலிருந்து அன்போடு வளர்த்தெடுத்து, அவன் இல்லாத இடத்தில் — பெற்றமகன் இராமபிரானிடத்தில், 'நின்னினும் நல்லன்' 'மும்மையின் நிறைகுணத்தவன்' என்று அவன் பெருமையைப் பேசிய கோசலை, பரதன் உள்ளத்தைச் சந்தேகிப்பாளா' மேலும், அவனைநேரில் பார்த்த பிறகு, தந்தை, தமையன் பிரிவுக்கு அவன் வருந்திப் புலம்பிய துயரப் புலம்பலைக் கேட்ட பிறகு, பரதன் மேல் ஐயம் கொள்வாளா இந்தக் கோசலைத்தாய்? இந்தக் கேள்வியைக் கேட்பவள் யார்? தேறும் (தெளிந்த—ஐயம் தெளிந்த) சிந்தையள்: 'செய்யனே— நேர்மையாளனே' என்று தீர்மானமாகத் தெளிந்த சிந்தை பெற்றவள்.

அதற்கு மேலும், இந்த ஐய வினாவை எழுப்பும் முன், அந்தக் கோசலைப் பிராட்டியின் திருவுள்ளம் எவ்வளவு தெளிவாக்கபட்டுள்ளது என்பதைக் கவனிக்கவேண்டும், 'செய்யனே' எனத் தேறிய சிந்தனை பரதனைத் தவறிழைத்தவனாகக் காணுமா' காணவே காணாது. அப்படியானால், இந்தக் கேள்வி, எந்த உணர்வின் அடிப்படையில் எழுந்தது?

பரதனது தூய உள்ளத்தை, தான் உணர்ந்தது மட்டும் போதாது: உலகினர் அனைவரும். உணரும் வண்ணம் செய்ய வேண்டும் என்றதூய எண்ணத்தில் எழுந்ததே கோசலையின் இந்தக் கேள்வி.

'பரதனால் இந்தச் சூரிய வம்சத்துக்கு ஒரு களங்கம் வந்து விட்டது' என்று 'உலகினர் தன்னைப் பழிப்பார்களே என் செய்வேன்!' எனச் சொல்லிப் பரதன் புலம்பியதைக் கேட்டவள் இந்தக் கோசலைப் பிராட்டி. அதனால், 'பரதன் பழிப்புக்கு உரியவன் அல்லன்' என்பதை உலகினர்க்கு உணர்த்தவேண்டி, இந்தக் கேள்வி கேட்டாள் கோசலைத் தாய்.

பரதனது கள்ளம் கபடற்ற தூய உள்ளத்தை நன்கு உணர்ந்திருந்தும், கோசலை, பரதன் உள்ளத்தைத்தாக்கும் வண்ணம் 'கைதவம். என்றசொல்லைப் பயன் படுத்தி இந்தக் கேள்வியைக் கேட்டது, பரதனின் உள்ளத்தூய்மையை உலகினர்க்கு உணர்த்துவதற்குத்தான். இதுதான் இந்தப் பாத்திரத்தைப் படைத்த கவிச் சக்கரவர்த்தியின் கருத்தாக இருக்க வேண்டும்.

தான் படைத்த பாத்திரத்தூய்மையை உலகினர்க்கு எடுத்துக் காட்டுவதற்கு, கம்பன் இந்த உத்தியைக் கையாண்டிருப்பதை காவியத்தின் பிற இடங்களிலும் காணலாம்.

**இராமபிரானும் சீதா பிராட்டியும்:**

பத்து மாதம் அயலவன் சிறையில் தனது கற்பொழுக்கத்தைக் காத்து, தனது கணவனின் பெருமையை நிலை நாட்டிக் கொண்டிருந்த சீதா பிராட்டி, இராமபிரான் முன் வந்து நிற்கின்றாள். 'கற்பினுக்கு அரசினை———தற்பிரிந்து அருள் புரி தருமம் போலியை' நோக்கினான், யார்? அத்தலைவன் இராமபிரான். எப்படி? அன்போடு, (அற்பின்) என்ன பார்வை? (அமைய) பிராட்டியின் உள்ளத் தூய்மை விளங்க.

அந்த நோக்கம், பிராட்டியின் கற்பொழுக்கத் தூய்மையைத் தலைவன்—இராமபிரான் உணர்ந்து கொண்டுவிட்டான் என்பதைக் காட்டுகின்றது. அதற்குப் பிறகு, இராமபிரான், சீதாபிராட்டியைப் பார்த்து பேசிய பேச்சு இருக்கிறதே! அதை என்ன என்று சொல்வது! அவ்வளவு கொடுமையான பேச்சு. பலவாறாகப் பிராட்டியைத் திட்டித் தீர்த்த பிறகு 'சாதியால்; அன்று எனின் தக்கது ஓர் நெறி போதியால்' என்று சொல்லி முடித்தான் இராமபிரான். ஏன்? எதற்கு! பிராட்டியைத் தீயில் குளிக்க வைத்து, அவளது கற்புத் தூய்மையை உலகினர்க்குப் புலப்படுத்துவதற்குத்தானே!

**மற்றும் ஓர் இடம்:**

அனுமன், 'கல்லாத கலையே இல்லை' என்றும், 'நுணங்கிய கேள்வியன்' என்றும், 'சொல்லின் செல்வன்' என்றும் பலவாறாகப் பாராட்டப் பெற்ற பேரறிஞன். இத்தகைய நல்லறிஞன், அசோக வனச் சிறையில் சீதாபிராட்டியிடம் ஒரு வேண்டுகோள் விடுக்கின்றான். இந்த வேண்டு கோள், பிராட்டியினால் ஏற்கப்படமாட்டாது என்பது. இந்த நுணங்கிய கேள்வியனான அனுமனுக்கு நன்கு தெரியும் தெரிந்தும், 'கேட்டி அடியேன் உரை' என்று தொடங்கி, 'முனிந்தருளல்' என முன்னுரை வகுத்துக்

கொண்டு, 'அடியேன் தோள் ஏறு கடிது' என்று சொல்லி, தனது வேண்டுகோளை-விண்ணப்பத்தை முடித்தான் அனுமான்.

விண்ணப்பம் ஏற்கப்படமாட்டாது என உணர்ந்திருந்தும் அனுமன் ஏன் இதனைச் சொன்னான்? பிராட்டியின் திருவாய் மூலம் பல உண்மைகளை-அவளது கற்புத் திண்மையைத் தெரிந்து கொள்வதற்குத்தான் இந்த விண்ணப்பம். அவ்வாறே பிராட்டி பல உண்மைகளை உணர்த்தினாள்.

தனது படைப்புப் பாத்திரத் தூய்மையை, உலகினர்க்கு உணர்த்துவதற்கு, பிறபாத்திரங்களைக் கேள்வி கேட்கவைக்கும் உத்தியைக் கையாளுகின்றான் கவிஞர் பெருமான் என்பதை இதன் மூலம் நாம் நன்கு உணரலாம்.

அந்த உத்திதான், கோசலை பரதன் உரையாடலில் கையாளப் பட்டுள்ளது.

'கைதவம் நீ அறிந்திலை போலும்' என்று கோசலைத்தாய் சொல்ல, அதனைக் கேட்டதும் பரதன் உள்ளம், குமுறிவிம்மியது. அவ்விம்முதலுடன் 'நாள் உறுநல் அறம் நடுங்க, நாவினால், சூளுரை கட்டுரை சொல்லல் மேயினான் அப் பெருமகன்.

**சூளுரை :**

பரதனது உள்ளத்திலிருந்து பொங்கிக்கொண்டு சபதமாக வந்த உறுதி மொழிகள் இருபது கவிதைகளாக விரிந்துள்ளன. உலகத்தில்நடைபெறும்பாபச் செயல்கள் அனைத்தையும் அள்ளிக்கொட்டிக்காட்டி, அந்தப்பாபிகளுக்கு என்ன தண்டனை கிடைக்குமோ, அந்தத்தண்டனையை நான் பெறுவேன். எப்போது, இந்தக் கைதவத்தை நான் அறிந்திருந்தால் என்று சொல்லி முடித்தான் பரதன்.

'இந்த நம்பி கூறிய சபத மொழியைக் கேட்டு, அறக்கடவுளே நடுங்கிப் போகும் 'என, கவிதை தெரிவிக்கின்றது.

**சாதுமொழி கேட்ட தாயின் நிலை:**

‘தூய வாசகம் சொன்ன தோன்றலை,
தீய கானகம் திருவின் நீங்கி,முன்
போயி னான்வரக் கண்ட பொம்மலாள்,
ஆய காதலால், அழுது புல்லினாள்.’ (2218)

பரதன் சொன்ன தூயவாசகத்தைக் கேட்டதும், கோசலை அளவற்ற மகிழ்ச்சி அடைந்தாள். எவ்வளவு மகிழ்ச்சி? அரச செல்வத்தை நீக்கிவிட்டு, கானகம் சென்றானே, அந்த அன்பு மகன் இராமனே திரும்பி வந்துவிட்டால் எவ்வளவு மகிழ்ச்சியிருக்குமோ அவ்வளவு மகிழ்ச்சி. அந்த மகிழ்ச்சிப் பெருக்கு, ஆனந்தக் கண்ணீராக வழிந்தது. ஆனந்தக் கண்ணீரோடு, அன்பு தவழ பரதனைத் தன் மார்பாரத் தழுவிக் கொண்டாள் கோசலைத் தாய்.

தனது தாய் அன்பை, அண்ணலை-பரதனைத் தழுவிக் கொண்ட செயலின் மூலம் வெளிப்படுத்திய கோசலைப் பிராட்டி, தன் வாய்ச் சொல் மூலமும் காட்டுகின்றாள். எந்தப் பரதன், தனது பிறப்பால், சூரிய வம்சமே களங்கம் அடைந்துவிட்டது என்று வருந்தினானோ, அந்தப் பரதன் தோன்றியதால் தான், குலம் உயர்ந்தது என்று சொல்லி தனது அன்பு மகனை வாழ்த்தினாள் கோசலைப் பிராட்டி. எப்படி ?

“முன்னை நும்குல முதலுளோர் கள்தாம்,
நின்னை யாவரே நிகர்க்கும் நீர்மையார்?’
மன்னர் மன்னவா!’ என்று வாழ்த்தினாள்:
உன்னி உன்னி நைந்து உருகி விம்முவான்.” (2220)

கோசலைத் தாய், தனது அன்பிற்குரிய வளர்ப்பு மைந்தனாகிய பரதனை வாழ்த்தியதையும், அதனைக் கேட்டு, பரதன் அழுததையும் தெரிவிக்கின்றது இக்கவிதை.

---

பொம்மல்-மகிழ்ச்சி; விம்முவான்-அழுபவனானான்.

பரதன் சூளுரையைக் கேட்டு, கோசலை ஆனந்தக் கண்ணீர் விட்டு, பரதனை வாழ்த்தினாள். இது கோசலையின் தூய உள்ளத்தையும் பண்பாட்டையும் காட்டுகின்றது. கோசலையின் வாழ்த்தைக் கேட்ட பரதனோ மனம் நொந்து அழுகைக் கண்ணீர் வடிய நின்றான். இது, இவனுடைய உள்ளத் தூய்மையையும் பண்பாட்டையும் காட்டுகின்றது.

வருத்தமும் கோபமும் வெறுப்பும் கலந்த நிலையில் பேசிய பரதனது சூளுரைப் பேச்சு, கோசலைக்கு மகிழ்ச்சியைத் தந்தது: ஆனந்தக் கண்ணீரை அப்பிராட்டியிடம் வரவழைத்தது: பரதனை "மன்னர் மன்னவா" என்று வாழ்த்தவும் செய்தது.

கோசலையின் அன்பு கலந்த வாழ்த்துரையோ, பரதனை மனம் நோகச் செய்தது: துன்பத்தால் உள்ளத்தை உருக்கியது: உருகியதை அழுகை நீராகக் கண்களில் வடியச் செய்தது. ஏன்?

இவைகள் தான், இவ்விருவரின் பண்பாடுகளை வெளிப்படுத்துவன. அப்படிப் பாத்திரங்களைப் படைத்திருக்கின்றான் கவிச் சக்கரவர்த்தி கம்பன்.

'இந்த இரகு வம்சத்தில், மனு, சிபி, தசரதன் முதலிய வரலாற்றுப் புகழ் படைத்த பலர் தோன்றியுள்ளார்கள். அவர்களில் உன்னை ஒத்த புகழுடையவர் ஒருவரும் இவர். நீ, முன்னையர், அனைவரினும் மேம்பட்டு நிற்கின்றாய். அதனால், நீயே சக்கரவர்த்தி: (மன்னர் மன்னன் - அரசர்களுக்கு எல்லாம் அரசன்) ஆகவே தாயாக இருக்கும் நான் உன்னை வாழ்த்துகின்றேன்' என்ற நல்லுணர்வுடன் பரதனை வாழ்த்தினாள் கோசலைப் பிராட்டி.

'மன்னர் மன்னவா!' என்று தன்னை அழைத்து வாழ்த்தியது தான் பரதன் உள்ளத்தை மிகவும் துன்பத்துக்கு உள்ளாக்கி விட்டது. ஏன்? இந்த அழைப்பும் வாழ்த்தும் இராமபிரானுக்கல்லவா சேர வேண்டும்! தனக்கு எதற்கு? அடியவன் என்ற நிலைக்கு இது மாறுபட்டதல்லவா? பரதந்திரன் என்ற நிலையில் வாழும் (தலைவனைச் சார்ந்து அவனுக்கு அடிமைப்பட்டவனாக வாழ்தல்) தன்னை, சுவதந்திரன் (தன்னுரிமை உள்ளவன்) என்று அழைக்கலாமா? என்ற எண்ணம் தான், பரதனை வாட்டியது. என்றும் எங்கும் இராமபிரானுக்கு அடியவன் என்ற நிலையில் வாழ்வதையே தனக்கு இயல்பாகக் கொண்ட பரதன்

எதனைக் கேட்டால் எவருக்கும் இன்பமாகயிருக்குமோ, அது, இப்பெருமகனுக்குத் துன்பத்தைக் கொடுக்கின்றது. இப்பரதநம்பி முழுமையாக உலகப் பற்றற்றவன் என்பதைக் காட்டுகின்றது இவ்வழுகை.

'மன்னர் மன்னவா!' என்று தான் பெற்ற மகனாகிய இராமபிரானை வாழ்த்த வேண்டியவள் இந்தக் கோசலைப் பிராட்டி. அதற்கு வாய்ப்பில்லை இப்போது பரதனைக் கண்டது, இராமபிரான் கானகத்திலிருந்து வந்ததாகப் பார்க்கின்றாள். அதனால், முன்பு இழந்த வாய்ப்பு கிட்டியது போன்ற மகிழ்ச்சியில் பரதனை வாழ்த்தினாள் இந்தக் கோசலைத்தாய்,

ஆக, இந்தக் கவிதை, வாழ்த்திய கோசலைப் பிராட்டியின் பெருமையையும், வாழ்த்தினைக் கேட்டு அழுது கொண்டிருக்கும் பரதநம்பியின் பெருமையையும் காட்டுகின்றது.

[9]

# வாழிய நின் புகழ்

**மறுஇல் மைந்தனும் மாதவனும்:**

'மைந்து' என்றால் வலிமை என்று பொருள். பரதன், மைந்தன் என்று அழைக்கப்படுகின்றான். யாரால்! அவனது தந்தை தசரதனால் அல்ல! அவன் தான், இவனால் காண இயலாதவனாகி வானகத் தானாகி விட்டானே! மாதவனால் 'மைந்தன்' என்று அழைக்கப்படுகின்றான். அதனால், இங்கு மைந்தன் என்பதற்கு 'மகன்' என்ற பொருள் கொள்ள முடியாது.

மாதவன்—பெரியதவத்தை உடைய வசிட்டன். இவ்வளவு பெருந்தவத்தோன்தான் பரதனை 'மைந்தனே' என்று அழைத்தான். சந்தர்ப்பம்என்ன? கோசலைத்தாயின் கால்களில் (அன்னை தாளில் வீழ்ந்து தொழுது மாழ்கினான்) விழுந்து பரதன் அழுது கொண்டிருந்த போது (இன்ன வேலைவாய்) வசிட்ட மாமுனிவன் அங்குவந்தான். அப்போது

தான், பரதன் மனத்தூய்மையை உணர்ந்த வசிட்ட முனிவன் 'மைந்தனே' என்று அழைத்தான் பரதனை.

மைந்து-வலிமை. எதனால் வந்தது பரதனுக்கு? இதற்கு முன்னால் வந்த சொற்கள் காட்டுகின்றன பரதனுக்குச் சேர்ந்த வலிமையின் காரணத்தை. மறு இல் மைந்தனே! என்று அழைத்தான் வசிட்டன். மறு—(குற்றம்) இல்லாத வலிமையோன். எந்தவிதமான குற்றமும் இல்லாதவன்தான் வாழ்க்கையில் வலிமை உடையவனாய் — வளம் பெற்றவனாய் விளங்க முடியும்.

பரதன், சூளுரை கூறி, கோசலைப் பிராட்டியின்தாளில் விழுந்து புலம்பிக்கொண்டிருந்ததைக் கண்டான் வசிட்டன். இவன் வாசகம் தூயதுதான் என்று கோசலைத்தாய் உணர்ந்தது போன்று, முனிவனும் உணர்ந்தான்: அதனால் பரதனை 'மறு இல் மைந்தனே' என்றான் கைதவம் நீ அறிந்திலை போலும் என்று கோசலை பரதனைக் கேட்காது விட்டிருந்தால். பரதனது உள்ளார்ந்த சூளுரை வந்திருக்காது. வசிட்டன் பரதனது மறு இல் தன்மையை உணர்ந்திருக்க முடியாது. இதனாலும் உறுதிப்படுகின்றது, பரதனது உளத்தூய்மையை உலகினர்க்கு உணர்த்துவதற்குத்தான் இக் கேள்வியைக் கேட்டாள் என்பது.

மறு—குற்றம். மனிதன் எதனால் குற்றம் செய்கின்றான்? உலகப்பொருள்மேல் கொண்ட ஆசையே மனிதனைக் குற்றம் செய்யத் தூண்டுகின்றது. ஆசை அடங்கினால், குற்றம் என்பது பக்கத்தில் எட்டியும் பாராது. கோசல நாட்டுப் பேரரசை ஆளும் ஆசையையே வெறுத்தவன் இந்தப் பரதன், அப்படியிருக்கும்போது இவன் பக்கம் எந்தக் குற்றம் வரும்?

குற்றம் அற்ற இவன் பெற்றியை நன்கு உணர்ந் தான் வசிட்டன். எதனால்? இவனும் உலக ஆசையை அறவே அகற்றிய அந்தணப்பெரியோனான மாமுனிவன் அல்லவா? அதனால், பரதநம்பியை, 'மறு இல்மைந்தனே' என்று அன்புடன் அழைத்தான் மேற்கொண்டு நடத்த வேண்டிய காரியங்களுக்காகத் தன்னுடன் அழைத்துக் கொண்டு சென்றான் முனிவன். முனிவன் கண்ட உண்மையை மற்றவர் களையும் உணர வைக்கின்றது. வசிட்டன் இனி நடத்தப் போகின்ற காரியம்.

## மேலும் பரதன் புலம்பல்:

தன்னுடன் பரதனை அழைத்துச் சென்ற மாத வன், அவனுக்கு, தைலத்தில் இருக்கும் தந்தையின் படிவத்தைக் காட்டினான். பரதன், அந்தஎண்ணெய் உண்ட பொன்எழில் கொள்மேனியை, தருமம் நல்கி னான் பன்னு தொல் அறப்படிவமாகக் கருதி நோக் கினான். பரதன், முன்பு கேகயம் போகும் போது அரச கோலத்தில் கண்டு வணக்கம் செலுத்தினான் இத்தந்தைக்கு. திரும்பிவரும் போது, அத்தந்தை உயிர் அற்ற அவக்கோலத்தோடு கிடந்தால் மைந்த னுக்கு எவ்வளவு துன்பம் வரும்! அத்துன்பத்தை அளவிட்டுக் காட்டுவதற்கு அளவுகருவி உண்டா! இல்லை! இல்லை!

உயிர் அற்ற நிலையில் தந்தை தைலக் கடலில் கிடக்கின்றான். அதனைக் கண்டபரதன், உயிருடன் துயர்க்கடலில் மூழ்கிக் கொண்டிருக்கின்றான். இதனை, 'மண்ணின் மேல் விழுந்து அலறி மாழ்கு வான், அந்த சரமசரீரத்தை—எழில் கொள்மேனியை தன் கண்ண நீரினால் கழுவி ஆட்டினான்.' எனக் கவிச்சக்கரவர்த்தி காட்டுகின்றான் இக் காட்சியை.

**புலம்பலின் தொடர்ச்சி:**

தைலத்தில் வைக்கப்பட்டிருந்த தசரதனின் சரமசரீரத்தை, யானையின்மேல் ஏற்றினர். இறுதி இடத்துக்கு இட்டுச்சென்றனர்: சரயு நதிக்கரை எய்தினர்: சிதையில் வைத்தனர். ஈமச்சடங்கினை நடத்திவைக்கும் புரோகிதர்கள் (நூலுளோர்) பிறகு, பரதனிடம், 'நுந்தைபால் பொய் இலாக்கடன் கழித்தி போந்து' (வந்து) என்று கூறினார்கள். அப்போது, வசிட்டன் குறுக்கிட்டான். ஒன்று சொன்னான், அது, பரதனை மேலும் தொடர்ந்து புலம்பவைத்து விட்டது.

அப்படிச் சொன்னது என்ன?

**'அன்னை தீமையால், அரசன் நின்னையும்**
**துன்னு துன்பத்தால், துறந்து போயினான், முன்னரே.'**

என்பதுதான் முனிவன் சொன்ன வார்த்தை. எந்த விதமான குற்றத்தையும் செய்யாத ஒரு மைந்தனை, தன்னிடம் அளவற்ற அன்பு காட்டிய ஒரு மகனை, 'அவன் எனக்கு மகன் அல்லன்' என்று. உறவை வெறுத்து அறுத்து ஒரு தந்தை சொன்னான் என்றால், அதைக்கேட்ட தூய புதல்வன் எவ்வளவு துடித்துப் போயிருப்பான்.

தனது உள்ளத் துடிப்பைப் பலவிதமாகப் பன்னிப் பன்னி அழுது புலம்புதல் மூலம் வெளிப்படுத்துகின்றான் பரதன்.

**'தடுக்கல் ஆகலாத் துயரம், தன்னுளே**
**துடிக்க, விம்மி நின்று அழுது சொல்லுவான்'**

என்பது பரதன் நிலையைக் காட்டும் கவிதைத் தொடர். பரதனது துயரம் யாராலும் தடுக்க-விலக்க இயலாதது. அது உள்ளத்துள் துடிக்கின்றது.

'எந்தை முதலியோர் பிரத பூசனைக்கு உரிய பேறு இலேன்: நான் பிறந்து அவத்தன் ஆனவா?: துன்னு தாள் வனம் சுமந்த தாழையில் பன்னுவான் குலைப்பதடி ஆயினேன்.' என்று கூறி இடரின் மூழ்கினான் இரவி குலத் தோன்றலாகிய பரதன்.

பரதனது இந்தப் புலம்புதலால், அவனுடைய உள்ளத்துடிப்பை உணர்ந்தனர் அங்குக்கூடியிருந்த அனைவரும். இந்தப்புலம்பல்கள், தன்னை வெறுத்து ஒதுக்கிய வனாகவிருந்த தந்தையிடமும், எவ்வளவு அன்பும், மரியாதையும், மதிப்பும் கொண்டவனாகப் பரதன் இருந்தான் என்பதைக் காட்டுகின்றன.

**உள்ளத்து உறுதி:**

பரதனின் உள்ளம், இராமபிரானுக்கு அடிமைப் பணி செய்தலையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டது. இந்தக் குறிக்கோளை நிறைவேற்று வதில் உறுதி படைத்தது நம்பியின் உள்ளம். இந்த உறுதியை யாரும் தளர்த்திவிட முடியாது. உறுதி யைத் தளர்த்த நடந்த முயற்சிகள் தோல்வியுறு கின்றன.

தோல்விக்குரிய செயல்கள் தொடர்ந்தன. அப்போது.

தசரதனுக்குச் செய்யவேண்டிய இறுதிச் சடங்குகள் முடிந்தன. பிறகு அரச காரியம் நடைபெற வேண்டி அமைச்சர்கள் ஒன்று கூடினர்: தமது தலைமை அமைச்சனாகிய சுமந்திரனை முன்னிட்டுக் கொண்டு ராஜகுருவாகிய வசிட்ட முனியிடம் சென்றனர்: பரதன் அரச பதவியேற்க வேண்டும் என்ற தமது கருத்தை வெளியிட்டனர்.

---

பிரதம்-பிணம்: அவத்தன்-பயனற்றவன்:
தாழை-தென்னை: பதடி-உள்வீடு இல்லாதது.

அமைச்சர்களது கருத்தை ஏற்றுக் கொண்ட வசிட்ட மாமுனியும், பரதன் அரச பதவி ஏற்க வேண்டிய தன் அவசியத்தைக் காரண காரியத்துடன் விளக்கிக் காட்டினான். இறுதியாக,

'உந்தையோ இறந்தனன்; உம்முன் நீத்தனன்;
வந்ததும் அன்னைதன் வரத்தில்; மைந்த! நீ
அந்தம் இல் பேர் அரசு அளித்தி; அன்னது
சிந்தனை எமக்கு' எனத் தெரிந்து' கூறினான்.' (2254)

பரதனது உறுதியைத் தளர்த்துவதற்கு, வசிட்ட முனிவன், தனது இறுதிக்கருத்தாக உரைத்தது இது. பரதன், கோசலப் பேரரசை ஏற்றுக் கொண்டேயாக வேண்டும் என்பதை மறுக்க முடியாதபடி வலியுறுத்திக் கூறப்பட்டது இக் கருத்து.

அரசை ஏற்க வேண்டியதன் காரணங்கள்: நாட்டைஆண்டுகொண்டிருந்தவாய்மை மன்னனான தசரதன் இறந்துவிட்டான்: அதற்கு அடுத்த வாரிசு ஆகிய இராமபிரானோ, காடு சென்றான்; கைகேசியின் வரத்தினால், அரசன் ஆணையைப் பெற்று, தானாகவே பரதனைத் தேடிவந்துள்ளது பதவி. இந்த அரசைப் பரதனே ஏற்க வேண்டும் என்பது அமைச்சர்கள், அரசவை ஞானியாகிய வசிட்டன் முதலிய அனைவரது விருப்பம்.

அரசியலில் அங்கம் வகிக்கும் அனைவரது அனுமதியுடன் பரதனைநாடிவந்தது இந்தக்கோசலப் பேரரசுப்பதவி. இது எவ்வளவு பெரிய நற்செய்தி! அளவற்ற மகிழ்ச்சி தரக் கூடிய சிறப்புடைச் செய்தி! ஆனால், இது பரதநம்பிக்கு எத்தகைய செய்தியாக அமைந்தது?

---

உந்தை—உன் தந்தை: (தசரதன்) உம்முன்—உமது முன்னோன்: (அண்ணன் இராமன்) அளித்தி காப்பாய்: அன்னை - தாய். (கைகேசி)

'தஞ்சம் இவ் உலகுஎலாம் நீ தாங்கு வாய்' என,
செஞ்சவே முனிவரன் செப்பக் கேட்டலும்,
'நஞ்சினை நுகர்' என நடுங்கு வாரினும்
அஞ்சினன் அயர்த்தனன்—அருவி கண்ணினான்?
(2255)

'நடுங்கினன்: நாத்தடு மாறி, நாட்டமும்
இடுங்கினன்: மகளிரின் இரங்கும் நெஞ்சினன்;
ஒடுங்கிய உயிரினன்; உணர்வு கைதர,
தொடங்கினன், அரசவைக்கு உள்ளம் சொல்லுவான்;
(2256)

இந்த இரு கவிதைகளும், முனிவன் கூறியதைக் கேட்டதும், பரதன் அடைந்த பதட்ட நிலைகளைக் காட்டுவன. அந்தப் பதட்டத்தோடு தனது உள்ளத்து உறுதியை தெளிவுபடுத்தத் தொடங்கு வதையும் தொட்டுக் காட்டுகின்றது இரண்டாவது கவிதையின் இறுதிப் பகுதி.

முதல் கவிதை, 'கோசலநாட்டு அரசுப் பொறுப்பை ஏற்க வேண்டும்' என்ற முனிவன் பேச்சைக் கேட்டதும் பரதன் அடைந்த நிலையையும், அதன் காரணத்தையும் கூறுகின்றது. பரதன் பயந்தான்: சோர்ந்தான் ஏன்? நடுக்கம், அவனை அஞ்சச் செய் தது: சோர்வடையச் செய்தது. என்ன நடுக்கம்.

உடலில் இருக்கும் உயிரைப் பிரிக்க கூடிய விஷத்தைக் கொடுத்து, 'இதை நீ உண்டுதான் ஆக வேண்டும்' என்று ஒருவன் சொன்னால், அதனைக் கேட்டவன் எவ்வளவு நடுங்குவான்! அந்த நடுக்கம் பரதனுக்கு ஏற்பட்டுவிட்டது இப்போது. பரதனுக்கு உயிர்க் கொள்கையாக - உயர் குறிக்கோளாக இருப்பது இராமகைங்கர்யம். அதனைப் பறிக்கும் தன்மையுடையது அரச பதவிப் போகம்.

உலகியல் ஆசையினர்க்கு இச்செய்தி எவ்வளவு இன்பத்தைத் தருமோ, அதைவிடப் பன்மடங்கு துன்பத்தைத் தந்தது பரத நம்பிக்கு, பரதன் பெற்றுள்ள 'உனக்குப் பணிசெய்திருக்கும் தவம் உடையேன்' என்ற பகவத் கைங்கர்ய ஆனந்தத்துக்கு முன்னால், இந்த அரச போகம் வெகுதுச்சமானது.

'மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளும் இவ்
வையம் தன்னொடும் கூடுவது இல்லையான்'

என்ற குலசேகராழ்வரது பெருமாள் திருமொழிக் கருத்து இங்கு சிந்திக்கத்தக்கது.

பரதந்திரனாய் (தலைவனைச் சார்ந்தவனாக) வாழ எண்ணும் பரதனுக்கு, சுவதந்திரனாய் (தன்னுரிமையாளனாக) வாழவேண்டும் என்று சொன்னது 'நஞ்சினை நுகர் நீ' எனக் கட்டளையிடுவது போன்று கொடுமையாகத் தோன்றியது, அதனால் நடுங்கினான்: அஞ்சினான்: அயர்ந்தான் பரதன்.

பரதனுடைய பாரதந்திரயத்துக்கு, சுவாதந்திரயம் எவ்வளவு தடையானது என்பது இந்த நம்பிக்குத் தெரியும்: பிறருக்குப் புரியாது. அதனைப் புரியவைக்கின்றான் பரதன் எங்கு? அந்த வேத்தவையில். (அரசவையில்)

இதனைச் சொல்லத்தொடங்கும்முன், பரதனது நாக்கு சொல் தடுமாறியது: கண்கள் சுருங்கின: உயிர் ஒடுங்கியது. இவை, 'பதவியை நீ ஏற்றுக் கொள்' என்ற வார்த்தை பரதன் உள்ளத்தை எவ்வாறு வாட்டியுள்ளது என்பதைக் காட்டுகின்றன. பரதன், தனது உன்னதமான இலட்சியப் பாதை எது என்பதைத் தெளிவாக்குகின்றான் இங்கு.

**பரதன் கேள்வி :**

'மூன்று உலகினுக்கும் ஓர் முதல்வ னாய், முதல்
தோன்றினன் இருக்க, யான் மகுடம் சூடுதல்,
சான்றவர் உரைசெயத் தருமம் ஆய தேல்,
ஈன்றவள் செய்கை இழுக்கு உண் டாகுமோ? (2257)

தான் வகுத்துக் கொண்ட உன்னதமான இலட்சியப் பாதையில், தான் நடப்பதற்கு, வசிட்ட முனிவன் கூறியதை ஏற்றுக் கொள்வது தடையாக அமையும் என்பதையும் சுட்டிக் காட்டுகின்றான் பரதன்.

முதலில், 'உம் முன் நீத்தனன்' என்பதை மறுக்கின்றான் பரதநம்பி. உம் முன் யார்? இராமபிரான். அவன் யார்? மூன்று உலகினுக்கும் ஓர் முதல்வன். விண்ணுலகம், மண்ணுலகம், பாதாளலோகம் என்ற மூன்று உலகங்களுக்கும் நிரந்தரமான தலைவன் நாராயணன். அவன் தான் இங்கு இராமபிரானாக வந்துள்ளான். சொன்னாலும் சொல்லாவிட்டாலும், இராமபிரானே இந்த மண்ணுலகத் தலைவன் கோசல நாட்டு மன்னன். அப்படியிருக்க அவன் எப்படி நீத்தவனாவான் என்பது பரதனது கேள்வி.

மூன்றுலகங்களுக்கும் நிரந்தரமான நீங்காத தலைவனாக விளங்கும். நாராயணன், இங்கு இப்போது இராமபிரானாக எப்படித்தோன்றியுள்ளான் முதல்வனாக. மூத்தவனாகத் தோன்றிய இராமபிரான் இருக்க, இளையவனாகிய நான் (மகுடம்) முடி சூடுதல் தருமமாகுமா? சான்றோர்களாகிய நீங்களே. இந்த முறையற்ற செயலைத் தருமம்தான் என்று சொல்வீரானால், என்னை ஈன்றவளான கைகேசியின் செயலுக்குக் குற்றம் உண்டாகுமா? முறையற்ற இந்தச் செயல் சான்றோர்களால் தருமமாக்கப்பட்டால்

கைகேசியின் கைதவச் செயலும் தருமத்துக்குள் அடங்கும். அவள் செயல் வஞ்சனை இழுக்கு உடையதுதானே! அது போன்று தான், சான்றோராகயிருந்தாலும், நீங்கள்கூறுவதும் இழுக்குடையதே. மேலும்

..........'புவியுள் தோன்றினார்
மூத்தவர் இருக்கவே முறைமையால், நிலம்
காத்தவர் உளர் எனின், காட்டிக் காண்டிர்,

என்று அச்சபையில் ஒரு கேள்வி கேட்டான் பரத நம்பி.

'மூத்தவன் உயிருடன் வாழ்ந்துகொண்டிருக்கும் போதே, இளையவன் ஒருவன் அரசமுடி சூடியதை நிரூபித்துக்காட்டுங்கள் பார்க்கலாம்' என்று யாரும் பதில் சொல்ல இயலாத ஒரு அழுத்தமான கேள்வியைக் கேட்டான் பாரதவள்ளல்.

**பரதனது திட்டம்**

பரதன் கேட்ட கேள்விக்கு யார் பதில் கூற முடியும்? அரசவை அமைதியாயிற்று. அமைதி தவழும் அமைச்சர்கள் கூடியுள்ள அப் பேரவையில் தனது திட்டத்தைக்கூறுகின்றான் பரதநம்பி. திட்டம்என்ன?

'நல்நெறி என்னினும்; நான், இந் நானில
மன் உயிர்ப் பொறை சுமந்து இருந்து வாழ்கிலேன்;
அன்னவன் தனைக் கொணர்ந்து, அலங்கல் மாமுடி
தொல் நெறி முறைமையின் சூட்டிக் காண்டிரால்.'
(2260)

'அன்றுஎனின், அவனொடும் அரிய கானிடை
நின்று, இனிது இருந்தவம் நெறியின் ஆற்றுவென்;
ஒன்று இனி, உரைக்கின், என் உயிரை நீக்குவென்;
என்றனன்; என்ற போது இருந்த பேரவை. (2261)

பரதன் வகுத்துக் கொண்ட திட்டம் நான்கு. இது அவன் உரைத்த உறுதி மொழி, இவ்வளவுக்கும் அடிப்படை, அந்நம்பி, கொண்ட இராம பாத சேவை செய்தலாகிய குறிக்கோள் உணர்வு.

ஒன்று; நீங்கள் சொல்கின்ற கோசலப் பேரரசு முடி சூடுதல், நல்ல அற நெறிதான் என்றாலும், நான் அதனை ஏற்றுக்கொண்டு உயிர் சுமந்து வாழமாட்டேன், அது, நான் கொண்டமெய்ந் நெறி ஒழுக்குக்கு இழுக்குதருவதாகும்.'

இரண்டு; 'இந்த நாட்டுக்கு அரசன் இல்லாத குறையைப் போக்கவும் முடிவு செய்துள்ளேன், அம் முடிவை, காட்டுக்குச் சென்று, இராமபிரானை அழைத்து வந்து, அப்பிரானுக்கு தொல் நெறி முறைப்படி முடி சூட்டுதல் மூலம் நிறைவேற்று வேன், இதனை நீங்கள் கண்ணாரக் காணுங்கள்?

மூன்று; 'அவ்வாறு இராமபிரானை அழைத்து வந்து மூடிசூட்டுதல் கைகூடாது போனால், நானும், அப் பெருமானுடனே காட்டில் தங்கி அருந்தவத்தை நெறிப்படி செய்து கொண்டிருப்பேன்?

நான்கு; 'இந்த எனது கொள்கைக்கு மாறாக ஏதேனும்ஒன்றைச்சொல்லி,முடிசூடிக்கொள்ளுமாறு கட்டுப் படுத்துவீர்களானால், அப்போதே என் உயிரை மாய்த்துக் கொள்வேன்.'

இந்த உறுதி மொழியில், பரதனது களங்கம் அற்ற தெளிவான, துணிவான இராமபக்தி உணர்வு ஒளி வீசி நிற்பதைக் கண்டனர் அவையினர்;

உடனே பரதனை உளமார வாழ்த்த தொடங்கினர்.

## அவையினர் வாழ்த்து:

'ஆன்றபேர் அரசனும் இருப்ப, ஐயனும்
ஏன்றனன், மணிமுடி ஏந்த: ஏந்தல் நீ,
வான்தொடர் திருவினை மறுத்தி; மன் இளந்
தோன்றல்கள் யார்உளர் நின்னின் தோன்றினார்?'
(2262

'ஆழியை உருட்டியும். அறங்கள் போற்றியும்,
வேள்வியை இயற்றியும், வளர்க்க வேண்டுமோ?
ஏழினோடு ஏழ்னும் உலகம் எஞ்சினும்,
வாழிய நின்புகழ்!' என்று வாழ்த்தினார். (2263)

பரதனது செயலை இராமபிரானது செயலோடு ஒப்பிட்டுப்பார்க்கின்றனர் அவையினர். அந்த ஒப்புமையில், பரதனின் செயலே உயர்ந்திருப்பதாக உணர்கின்றனர் அவர்கள். அதனால், பரதனைப் பார்த்து. நீ ஏந்தல் - பெரியவன் என்றனர் அவையினர். பெருமை மிக்க அரசனாகிய தசரதன் இருக்கும் போதே, இராமபிரானும் ரத்தினம் பதித்த அரசமுடியைப் பெற்றுக் கொள்வதற்கு ஒத்துக் கொண்டான். நீயோ, பேரரசன் சுவர்க்கம் சென்ற பிறகும், அந்த அரசபதவியை ஏற்க மறுத்துவிட்டாய் அதனால், உன்னைப் போன்று புகழ் பெற்ற இளவரசர்கள் இந்தக்குலத்தில் யாரும் தோன்றவில்லை என அறிகின்றோம்.

உன் குலத்து உதித்த முன்னோர்கள், நாட்டில் ஆணைச்சக்கரத்தைச் செலுத்தியும், அறச்செயல் களைப்போற்றிச் செய்தும், யாகங்கள் நடத்தியும் புகழ் பெற்றார்கள். ஆனால் நீயோ அவைகள் எதுவும்

எதுவும் செய்யாமல் புகழ்பெற்று விளங்குகின்றாய். அவர்கள் செய்தது எதுவும் செய்யாமல் அவர்களினும் மிஞ்சிய புகழ் பெற்றவனானாய்.'

'எங்கள் அறியாமையால்தான், நீயும் உனது முன்னோர்களைப் போன்று. ஆழியை உருட்டுதல் முதலிய நற்காரியங்களைச் செய்து புகழ் பெற்று வாழ வேண்டும் என்பதற்காக நீமுடி சூடிக்கொள்ள வேண்டும் என எண்ணிவிட்டோம், அதனை இப் போது உணர்கின்றோம்.'

'பெரியோனே! பதினான்கு உலகங்கள் அழியினும் உனது இயற்கைக் குணத்தால் அமைந்த புகழ், என்றும் ஓங்குக! வளர்க! வாழ்க!' என்று கூறி உளமார பரதனை வாழ்த்தினார்கள் அவையினர். அவர்கள் அமைச்சர் முதலிய அறிவுடைப் பெருமக்கள்.

பரதன் இயல்பிலேயே நற்குணங்களைப் பெற்றவன். அக்குணங்களின் வெளிப்பாட்டால், அப் பெருமகனது புகழ் வளர்ந்தது. அந்தப் புகழை யாராலும் அளவிட்டுக் கூற முடியாது. கதாப்பாத்தி ரங்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக அந்தநம்பியின் புகழை எடுத்துப் பேசிமகிழ்கின்றனர். அவர்களுள் இந்த அவையினர் ஒரு வகையினர்.

பரதனாகிய இந்தப் பாத்திரத்தை அவ்வளவு அற்புதமாகப் படைத்துள்ளான் கவிமா மன்னன் கம்பன்.

கம்பனின் காவியக் கலைத்திறனால் உருவாகிய இந்தப் பரதன் என்ற பாத்திரப் படைப்பு பற்றி, இலக்கியத் திறனாய்வாளர் ஒருவர் கூறியுள்ள கருத்து அறிவுக்கு விருந்தாக அமைந்துள்ளது.

அவர் ஆழ்ந்த நாட்டுப் பற்றினர்; உயர்ந்த தெய்வப்பக்தியர்; நிறைவான இலக்கிய ஆர்வத்தினர்: ஆழங்காண முடியாத பல மொழிச் சீரிய சிந்தனையாளர்; கவிச்சக்கரவர்த்தி கம்பனிடத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்: வ. வே. சு. அய்யர் என்ற சுருங்கிய பெயரில் பெரும் புகழினராய் உலகில்உலாவியவர்.

அவர் கம்பன் கண்ட பரதனைப் பற்றி, நன்கு திறனாய்வு செய்துள்ளார்.

'ஆதி கவி கூறும் பரதனைக்காட்டிலும் கம்பன், தன் காவியப் பரதனை, உணர்ச்சியில் மேம்பட்டவனாகத் தோன்றும் வண்ணம் படைத்துள்ளான்'.

'இராம காதையைப் பயிலும் அன்பர்கள், பரதனைப் பற்றி அறியவில்லை என்றால், இராம காதையில் பாதிக்கு மேற்பட்ட பேரழகைக் காணாது இழந்தவராவர்: மேலும், வரலாறும் இதிகாசமும் காணாத நிலையில், நேர்மையும் இளகிய நெஞ்சமும் பெற்ற உள்ளத்தைத் தொடும் கதாப் பாத்திரங்களில் மிகச் சிறந்த ஒன்றை அறியாத பேரிழப்பிற்கு ஆளாவர்?

"பரதனின் பண்பு என்ற தங்கத்தை, முறையற்ற ஐயம், மற்றும் பழிச்சொல் (அவதூறு) ஆகிய நெருப்பிலே இட்டு, மீண்டும் மீண்டும் உருக்கி, அப்பரதனின் தூய்மையை எடுத்துக்காட்டும் கவிஞனின் திட்டமே பரதன் படைப்பு." +

இது பரதனைப் பற்றிய நல்ல திறனாய்வு ஆகும்.

---

+ அங்கில மொழிபெயர்ப்பு திரு. **ஆ. இராமபத்திரன்** நம்பியும் தம்பியும் பக். 322, 323.

## (10)

## என் புகழ்கின்றது.

**பரதன் புறப்பாடு :**

மனித உள்ளத்து எண்ணம், உலக நன்மை கருதும் தூயதாக இருக்குமானால், அது செயல்படு தற்குப் பிறதுணை தானாக வந்து அமையும். தன்னலம் பற்றிய எண்ணத்துக்குத் தடைகள் பல வரும்.

பரதன் எண்ணம், "இரகு குலத்துத்தொல் முறையை நிலைநாட்ட வேண்டும்: நாட்டுமக்கள் யார் அரசனாகயிருக்க வேண்டும் என விரும்புகின்றார்களோ, அவனை அரச முடி ஏற்கச் செய்ய வேண்டும்: தனது இராம கைங்கர்யம் தொடர்ந்து நடைபெற வேண்டும்' என்பதாகும்.

இதனைச் செயல்படுத்துவதற்கு, பரதன். கானகம் புறப்பட்டான், எந்தக் கோலத்தில்? அரச கோலத்தில் அல்ல! அக்கோலம், "யான், எனது" என்ற அகங்காரமமகாரங்களையல்லவா வளர்க்கும்! அதனால், அந்த அகம்பாவத்தை அகற்றக் கூடிய துறவுக் கோலத்தை ஏற்றான் பரதன்.

அடியார்க்கு அடியனாக இருந்து சேவை செய்யும் சத்துருக்கனனும் அண்ணனைப் போன்றே 'தன்னுடைத் திரு அரைச் சீரை சாத்தினான்.

பாகவதனும் பாகவத அடியானுமாக, இந்த அண்ணனும் தம்பியும் கானகம் நோக்கிப் புறப்பட்டனர். இவர்களது கோலமும் நடையும், இராம இலக்குவர்களை நினைவூட்டியது மக்களுக்கு 'அயோத்தி நகரமே இந்த இருவர்களைப் பின் தொடர்ந்தது' என்று சொல்லும் படியாயிற்று இவர்களைத் தொடர்ந்த மக்கட் கூட்டம். அரச அதிகாரிகள், அமைச்சர்கள், படைகள், பட்டத்து ராணிகள், வசிட்ட முனிவன் முதலிய அனைவரும் இராமபிரானை அழைக்கச் செல்லும் திருக்கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

இவர்களுக்கு வரவேற்பு கிடைத்தது. எங்கு? இராமபிரானிடம் அல்ல! அதற்கு முன்னாலேயே, இருவரால் வரவேற்கப்பட்டனர். இத்திருக்கூட்டத்தினர். வரவேற்ற இருவரும் தோற்றத்தாலும், கல்வி அறிவாலும், ஞானத்தாலும், இருப்பிடத்தாலும் மிகவும் வேறுபட்டவர்கள். ஆனால் இருவரும் இராம பக்தர்கள், அதனால், இராமபக்தர்களாகச் செல்லும் இந்தத் திருக்கூட்டத்தினரை வரவேற்று அவர்கள் மகிழ்ந்தார்கள்.

**முதல் வரவேற்பு:**

கங்கையின் வடகரையைச் சென்று அடைந்தது இந்தத் திருக்கூட்டம். இங்குதான் முதல் வரவேற்பு வரவேற்கயிருப்பவன், கங்கை ஆற்றின் தென் கரையில் தங்கியுள்ளான். வரவேற்கப்படவேண்டியவர் வடகரையினர்: வரவேற்க இருப்பவன் தென்

---

அரை—இடை: சீரை-மரவுரி.

கரையினன். இடையில் ஆழநெடுந்திரைக் கங்கையாறு. ஆறு, இப்போது இத்திருக்கூட்டத்தினரின் நோக்கத்துக்கு இடையூறு. எப்படி இடையூறு? இவர்கள் நோக்கம் என்ன?

வடகரையில் உள்ள திருக்கூட்டத்தினரின் நோக்கம், சித்திரகூடத்தில் தங்கியுள்ள இராமபிரானைச் சென்று சேர்வது. அந்நோக்கம் நிறைவேற வேண்டுமானால், இந்த ஆற்றைக் கடக்க வேண்டும். ஆற்றைக்கடப்பது இவர்களால்முடியுமா? நோக்கம் உயர்வாகயிருந்தாலும், அதனை நிறைவேற்றுவதற்கு இறைவன் திருவருள் துணை வேண்டும்.

அப்படி, இங்கு இவர்களது நோக்கத்தின் நிறைவேற்றத்திற்குத் துணையாக வருபவன்தான் கங்கையின் தென் கரையில் நிற்பவன். இவன் யார்? 'கங்கையிருகரையுடையான்; கணக்கிறந்த நாவாயான்; இராமபிரானுக்கு உயிர்த்துணைவன்: உயர் தோளான்: இராமபிரானால், யாதினும் இனிய நண்ப' என்றும். 'என் உயிர் அனையாய்' என்றும் முடிவு உளது என உன்னா அன்புள, இனி, நாம் ஓர் ஐவர்கள் உளரானோம்' என்றும் சொல்லி, தம்முள் ஒருவனாக இணைத்துக் கொள்ளப்பட்டவன் குகன் என்னும் பெயருடையான்.

வடகரையில் இருப்பவர்களைக் கங்கையாற்றைக் கடக்க வைத்து, சித்திர கூடத்துக்கு அவர்களை அழைத்துச் சென்று, இராமபிரானிடம் சேர்ப்பிக்கும் தகுதியுடையவன் இந்தக்குகன் என்று தெரிகின்றது. இவனுடைய உதவியில்லாமல், இந்தத் திருக்கூட்டத்தினர் நோக்கம் நிறைவேறாது என்பது, அந்தச் சூழல் உணர்த்தும் உண்மை.

---

நாவாய்-படகு:

**தத்துவம்:**

இந்தக் கங்கைச் சூழலில். ஆழ்ந்த ஒரு தத்துவக் கருத்தை அடக்கி வைத்துள்ளான் கவிச்சக்கரவர்த்தி கம்பன். அதனை நுணுக்கமாக அணுகி ஆய்ந்து பார்த்தால் உணரலாம்.

அடியார்கள் ஆண்டவனை அடைய வேண்டும் என்ற பெரு நோக்கத்தினர். அந்த நோக்கம் நிறை வேறுவது எப்படி? அடியார்கள், தாமே ஆண்டவ னிடம் செல்ல முடிவதில்லை· ஆண்டவனை அடைய முடியாத படி இடையிலே குறுக்கிடுவது, பிறவிப் பெருங்கடல். இதனைக் கடந்தால்தான் ஆண்ட வனை அடைய முடியும். இதனைக்கடப்பது எப்படி? ஆண்டவன் அருள் பெற்று ஆசீர்வதிக்கப் பெற்ற ஒருவன்தான், அடியாரைப் பிறவிக் கடலைக் கடக்க வைத்து இறைவனிடம் சேர்ப்பிக்க முடியும். அத்தகைய அருள்பெற்றவனுக்கு ஆசாரியன் என்று பெயர். ஆசாரியன் என்றால் வழி நடத்திச் செல் பவன் என்று பொருள்.

அடியவனை வழி நடத்திச் செல்லும், (இறைவ னிடம் அழைத்துச் செல்லுதல்) ஆற்றல் ஆசாரிய னுக்கு எப்படி வந்தது? இறைவன் திருவருளால் வந்தது; ஆசீர்வாதத்தால் வந்தது. இறைவன் திருவருள் பெற்ற பிறகு, ஆசாரியன் மனித உருவில் இருந்தாலும், அவன் தெய்வமே. 'குரு சாட்ஷாத் பரப்பிரமம்' என்பது உப நிடதவாக்கு.

அடியவன் ஆண்டவனைச் சென்று அடைவதற்கு ஆசாரியன் துணை இன்றியமையாதது என்பது சமயத் தத்துவம்.

**குகன்:**

இப்போது, இந்தக் கங்கைச் சூழலில், வட கரையில் நிற்கும் திருக் கூட்டத்தினரின் நோக்க நிறைவேற்றத்துக்கு, தென் கரைக்குகன் இன்றிய மையாதவனாக உள்ளான். இவர்கள் இராமபிரானைச் சென்று சேருவதற்கு உதவயிருக்கும் குகன் திறமையாலும் தகுதியாலும் ஏற்புடையவனாக உள்ளான். சுருங்கச் சொன்னால், இப்போது, இவன் ஒருவனே இதற்கு ஏற்றவன் என்னலாம்.

கங்கை இரு கரைஉரிமை: கணக்கிறந்த நாவாய்கள் உடைமை: வெங்கரியின் ஏறு அனைய வலிமை விற்பிடித்த வேலைத் திறமை: அதற்கும் மேலாக இராமபிரானது அன்பையும் அருளையும் ஆசியையும் நிரம்பப் பெற்றமை. இவைகள் குகனை ஏற்றவனாக்கி (உயர்ந்தவன்) வைத்து விட்டன.

இவன், குலத்தால் வேடன்: குணத்தால் இராமபிரானுக்கு உயிர்த்துணைவன்: பதவியால் வேடர் குலத்தலைவன்: அன்பால், தாயினும் நல்லான்: இராமபிரான் அருளால் குகப் பெருமாள் வைணவ சம்பிரதாயத்தில், இவன், குகப் பெருமாள் என்றே போற்றிப் பாராட்டப் பெறுவான். இராமாயணக் கதாப் பாத்திரங்களில் 'பெருமாள்' என்ற பட்டம் குகன் ஒருவனுக்கே உண்டு. அதனாலேயே, குகனது ஏற்றம் விளங்கும்.

இவ்வாறு ஏற்றம் பெற்று விளங்கும் குகப் பெருமாள், தனது படகில் இவர்களை ஏற்றுவித்து இராமபிரானிடம் கொண்டு சேர்ப்பிக்கும் செயலாலும், தகுதியாலும் இங்கு ஒரு ஆசாரியஸ்தானம் வகிக்கின்றான் என்றால், அது மிகையாகாது.

**முதல் பார்வை :**

கங்கையின் தென்கரையில் நின்றகுகன், பெருங் கூட்டத்தினருடனும், படைகளுடனும் பரதன் வடக ரையில் தங்கியிருப்பதைக்கண்டான். கண்டதும் அவன் உள்ளத்தில் ஒருஐயம் தோன்றியது. காரணம், வடக்கேயிருந்து ஒருபடையுடன் வருவது என்றால், அது அயோத்தி அரசாகத்தான் இருக்க வேண்டும்; அதன் தலைவன் பரதன்: அவன் நாட்டை இழந்துவந்த இராமனின் சகோதரன்: தன் அண்ணன்மேல் போர் தொடுக்கும் எண்ணமா கத்தான் இருக்கவேண்டும். என்ற உலகியல் நிலை யில் குகன் உள்ளத்தில் தோன்றிய கருத்தே, ஐயத் துக்குக் காரணமாகும்.

அந்தஐய உணர்வால், குகனது பார்வையே மாறியது. பார்வையின் மாற்றத்தால் குகனது வாய் கோபச் சொற்களாகக் கொட்டித் தள்ளியது. இந்தக் கோபச் சொற்கள் எதுவும் பரதன் காதைச் சென்று சேர்ந்திருக்காது. ஆறு, இடைவெளித் தடையாக அமைந்தது குகனுக்கு நல்லதாயிற்று.

இவ்வளவு கோபத்துக்கும் அடிப்படை, இராம பிரான்பால் கொண்ட அளவற்றபக்தி. குகனது இராமபக்திதான், பரதனை, இராமப் பகைவனாக எண்ணச் செய்தது. அவனும் இராம பக்தன்தானே! பக்தனை, பகைவனாக்ப் பார்க்கும் பார்வையினா னான் குகன். ஏன்? பரதன் படையுடன் வந்திருந்தது படைகொண்டு வருபவன் அதனால், பகைவனாகத் தானேயிருக்கவேண்டும்! குகனது முதல் பார்வை, பக்தப் பரதனை, பகைமைப் பரதனாகத்தான் கண்டது!

**பந்திப் பார்வை :**

சுமந்திரன் கூறிய யோசனைப்படி, குகனைத் தானே முன் சென்று காண வேண்டும் என்ற ஆர்வத்தோடு, பரதன் தன் தம்பியுடன் வட கரையின் உச்சியில் வந்து நின்றான். நின்றவனது தோற்றத்தைக்கூர்ந்து கவனித்தான் எதிர்க்கரையில் நின்ற குகன். அத்தோற்றம், குகனது பார்வையை மாற்றியது: அவன் உள்ளத்தில் பரதனைப் பற்றிய உயர்வான எண்ணத்தைத் தோற்றுவித்தது. பரதன், இராமபிரானுக்கு எதிரானவன் அல்லன் என்று நன்கு உணர்ந்தான் குகன்.

பரதன் பகைமை எண்ணத்தோடு வந்திருந்தால் போர்க்கோலம் கொண்டிருப்பான். வந்திருப்பது, அதற்கு எதிரான துறவுக் கோலத்தில். இதைக்கண்ணுற்றான், ஐயப் பார்வையினனான குகன். உடனே அவன் திகைத்து நின்றான். இதனைத் தெரிவிக்கும் கவிதை, கற்பார் உள்ளத்தில் பரதனது உள்ள நிலையை உணர்த்தும் தோற்றத்தையும், ஐயப்பாடு நீங்கிய குகனது தோற்றத்தையும் அப்படியே நிற்கச் செய்துவிடும்.

“வற்கலையின் உடையானை,
மாசுஅடைந்த மெய்யானை,
நற்கலைஇல் மதிஎன்ன
நகைஇழந்த முகத்தானை,
கற்கனியக் கனிகின்ற
துயரானைக் கண்ணுற்றான்;
விற்கையினின்று இடைவீழ,
விம்முற்று, நின்றொழிந்தான்.” (2331)

---

வற்கலை — மரவுரி; மெய் — உடல்; மதி — சந்திரன்.

துறவுக்குரிய மரவுரி தரித்த கோலம்: புழுதி படிந்த திருமேனி: கலை இழந்த சந்திரன் போன்று சிரிப்பு நீங்கிய திருமுகம்: எதற்கும் உருகாத கல்லும் உருகும்படியான அவ்வளவு ஆழ்ந்த துயரம். இத்த கைய நிலையில் பரதனைக் கண்ணுற்றான் குகன். (கண்ணுற்றான்—கவனித்து உற்று நோக்கினான்) உண்மை உள்ளபடி புலப்பட்டது குகனுக்கு. தான் முன்பு கொண்ட கருத்துக்கு மாறாக அமைந்த தோற்றமாகக் காணப் பட்டதால், குகன் பெரு மூச்சு விட்டுக் கொண்டு அப்படியே அயர்ந்து நின்று விட்டான். அதனால் போருக்காகத் தயார் நிலையில் அவன் கையில் இருந்த வில், நழுவிக் கீழே விழுந்து விட்டது.

பரதனது புனிதத் தோற்றத்தைக் கண்ட பிறகு குகன் தன் உள்ளத்தில் எழுந்த உணர்வை வெளியிடுகின்றான். எப்படி?

**'நம்பியும் என் நாயகனை**
**ஒக்கின்றான்; அயல் நின்றான்**
**தம்பியையும் ஒக்கின்றான்;**
**தவவேடம் தலை நின்றான்;**
**துன்பம் ஒரு முடிவு இல்லை;**
**திசை நோக்கித் தொழுகின்றான்;**
**எம்பெருமான் பின்பிறந்தார்**
**இழைப்பரோ பிழைப்பு' என்றான் (2332)**

தான் முன்பு கண்டு தரிசித்த இராம இலக்குவர் களாகவே, பரத சத்துருக்கர்களைக் காண்கின்றான் குகன்.

---

அயல்-பக்கம்; பிழைப்பு-தவறு.

தான் முன்பு கண்ட தோற்றத்தினரை விட, இப்போது காணும் தோற்றத்தினர், காண்பாரது உள்ளத்தை உருக்கவும் சிந்திக்கவும் வைக்கின்றனர் என்றும் உணர்கின்றான் இந்தக் குகன். அந்த உணர்வின் உந்துதலால் ஒரு கருத்தையும் வெளியிடுகின்றான். அதுதான், இக்கவிதையின் ஈற்றடியாக வந்துள்ளது. 'எம்பிரான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு? என்பதுதான் அவ்வுணர்வுக் கூற்று. இராமபிரானுக்குத்தம்பியாகப்பிறந்தவர்கள் தவறு செய்வார்களா? 'தவறு செய்ததாகத் தவறாக உணர்ந்து விட்டோமே' என்ற அவனுடைய வருத்தத்தைப் புலப்படுத்துகின்றது ஈற்றடி.

**நம்பி:**

பரதனை, நம்பியாகக் காண்கின்றான் குகன், அப்படிக் குகனைக் காணவைக்கின்றான் கம்பநாடன். 'நம்பி' என்றால் நிறைந்தவன் என்று பொருள். எதனால் நிறைந்தவன்? குணங்களால் நிறைந்தவன் பரதன். என்ன குணம்?

'நம்பி' என்ற இந்தச் சொல்லை பரதனுக்கு இணைத்து வைத்து ஆழ்வார்கள் பாசுரம் இட்டுள்ளார்கள்.

**'படி இல் குணத்துப் பரத நம்பிக்கு, அன்று**
**அடி நிலை ஈந்தானை பாடிப்பற' (3.9.6)**

என்று பெரியாழ்வாரும்,

**'பாராளும் படர் செல்வம் பரத நம்பிக்கே அருளி'**
**ஆரா அன்பு இளையவனோடு அருங் கானம் அடைந்த**
**வனே' (723)**

என்று குலசேகராழ்வரும் பரதனை நம்பியாகக் கண்டு பாடி மகிழ்ந்தனர்.

---

படி—உவமை; அடிநிலை—பாதுகை.

**ஆழ்வார்கள் அனுபவம்:**

இரண்டு ஆழ்வார்களும் பரதநம்பிக்கு இராம பிரான் அருள் செய்தமையைக் குறிக்கின்றனர். அருள் செய்தமையை இருவரும் வெவ்வேறு வகை யாக அனுபவிக்கின்றனர்.

பெரியாழ்வார், 'படி இல் குணத்துப் பரதநம்பிக்குஅடிநிலைஈந்ததை' அனுபவிக்கின்றார். உவமைக்காக எதுவும் காணமுடியாத உயர்ந்த குணத்தினன் பரதன். அந்த நம்பிக்குத் தனது பாது கையைத் (அடிநிலை) தருதல் மூலம் அருள் செய் தான் இராமபிரான். இது பெரியாழ்வார் அனுபவம்.

குலசேகராழ்வார், பாராளும் படர் செல்வம் பரதநம்பிக்கே அருளி' என்று அனுபவிக்கின்றார். பரதநம்பிக்கு, கோசலை நாட்டை ஆளும் அரசச் செல்வத்தைக் கொடுத்தலின் மூலம் அருள் செய் தான் இராமபிரான். இது குலசேகராழ்வார் அனுபவம்.

அடிநிலை (பாதுகை,) தந்ததும் இராமபிரான் அருள்தான்: அரசு தந்ததும் அவன் அருள்தான். இந்த இரண்டைப் பெறுவதிலும் பரதன், நம்பியாக உயர்கின்றான். 'திருப்பொலிந்த சேவடி என் சென்னியின் மேல் பொறித்தாய்' என்று மகிழ்ந்தவர் பெரியாழ்வார். அதனால் அடி நிலை ஈந்ததைக்கூறினார். 'கொல்லிகாவலன் கூடல் நாயகன் கோழிக் கோன் குலசேகரன்' என்று சொல்லப்படும் குலசேகராழ்வார், அரச நிலையைக் கண்டவராதலால் பாராளும்படர் செல்வத்தைப் பற்றிக் கூறினார்.

இந்த இரண்டு பேற்றிலும், இவன் பரதநம்பி யாகத் திகழ்வதை வியக்கின்றனர் ஆசிரியர்கள்.

தமது நுண்மாண் நுழைபுலம் கொண்டு பக்தி உணர்வுடன் தெளிவு படுத்தியுள்ளார்கள்.

திருவாய் மொழிப் பிள்ளை என்ற ஆசாரியர், திவ்யப்பிரபந்த வியாக்கியானக்கர்த்தாக்களுள் ஒருவர்: கூரகுலோத்தமதாசருக்குச் சீடர்: மணவாள மாமுனிகளுக்கு ஆசாரியர்: 'ஸ்ரீசைலர்' என்ற திரு நாமத்தினர். இவர் பரதநம்பி என்ற தொடருக்கு அருளியுள்ள வியாக்கியானம் அறிஞர்கள் சிந்தை யுள் என்றும் நிற்கத்தக்கது.

'இவரும் இதுவே நமக்குப் புருஷார்த்தம் என்று கைக் கொண்டபின்பிறே, படி இல்குணத்துப் பரதநம்பிஆய்த்ததும்' (பரதனும் அடிநிலை சூடுதலே நமக்கு உறுதிப் பொருள் என்று ஏற்றுக் கொண்ட பிறகுதான் படிஇல் குணத்துப் பரதநம்பி ஆயினான்) என்பது ஆசாரியர் தரும் வியாக்கி யானம்.

மேலும், (பரித்தல்—தாங்குதல்) 'திருவடிநிலை களைப் பரித்த (தாங்கிய) பின்பிறே, அடி சூடும் அரசாய், பரதனாய்த்ததும்' என்றும், 'இவற்றாலே யிறே பூரணன் ஆய்த்ததும்' என்றும் ஆசாரியர் பரதநம்பி என்ற தொடருக்கு விளக்கம் அளிக்கின் றார்.

'பரதநம்பி' என்ற இத் தொடருக்கு பெரிய வாச்சான் பிள்ளை தரும் வியாக்கியானமும் சிந்த னைக்கு விருந்தளிப்பது. 'பாரதந்தர்ய பூரணனாய் இருக்கிற ஸ்ரீபரதாழ்வான்' என்பது இந்த ஆசாரி யார் தரும் விளக்கம். தலைவனைச் சார்ந்துநடக்கும் குணங்களால் நிறைவுடையவன் என்பது கருத்து.

தன் வசமாகப்பணி புரியாது, தலைவன் வசமாக நின்று பணி புரியும் பெரும் பண்பால் நிறைவு பெற்றவன் பரதநம்பி. இவ்வளவு உயர்கருத்துகள் அடங்கிய நம்பி என்ற சொல் ஆழ்வார் பாசுரங்களில் மிளிர்வதைக் கண்டான் கம்ப நாடன்.

ஆகவே, தனது காவியத்தில் பொருத்தமான இடத்தில் நம்பி என்ற சொல்லை அமைத்து வைத்து விட்டான் கவிமாமன்னன்.

குகன், பரதவள்ளலை நம்பியாகவே நம்பிக் கண்டான். நம்பியதற்குக் காரணம் பரதன் கொண்ட தவ வேடமே (துறவுக் கோலம்) முக்கியமானதாகும்: எதிர்க்கரையில் இருந்து கொண்டு பரதனைக் கணித்த, குகன் இனி, பக்கத்தில் சென்று பார்ப்போம் என்று எண்ணி னான். எண்ணியதற் கேற்ப பரதனைக் காண முற்பட்டு, ஒரு படகில் ஒரு தனியே தான் வந்தான் குகன்.

**இராமபக்தர்கள் சந்திப்பு:**

வந்த குகனும், இருந்த பரதனும் ஒருவரை ஒருவர் இப்போதுதான் முதன்முதல் நேரில் காண் கின்றார். சந்திப்பு, இதுதான் முதல்: கயிருந்தாலும், ஒருவர் தம் பெருமையை மற்றொருவர் உணர்ந்து கொண்டுள்ளனர்.

இருவரும், இராமபிரானையே தெய்வமாகக் கொண்டவர்கள்: அதனால் இராமனடியார்கள்: இராமபிரானால் சகோதரர்களாகக் கருதபட்ட வர்கள்: உள்ளத்தால் மிக மிக உயர்ந்தவர்கள்.

இப்படிப்பட்டவர்களது முதல் சந்திப்பு எப்படி அமைந்திருக்கும் என்பதைத் தன் மனக் கண்ணால் கண்டு, கண்ட அக் காட்சியைக் கவிதையில் வடித்துத் தருகின்றான் கவிச்சக்கரவர்த்தி. அந்தக் கவிதை மிக மிக உயர்ந்த ஒன்றாகும். ஏன்? கம்பசித்திரம் என்றும் கம்பசூத்திரம் என்றும் அறிஞர்களால் கணிக்கப்படுவது அது இதோ, அந்தக் கவிதை:

'வந்து, எதிரே தொழுதானை
வணங்கினான்; மலர் இருந்த
அந்தணனும் தனை வணங்கும்
அவனும், அவன் அடிவீழ்ந்தான்;
தந்தையினும் களிகூரத்
தழுவினான்—தகவுடையோர்
சிந்தையினும் சென்னியினும்
வீற்றிருக்கும் சீர்த்தியான்.' (2334)

இந்தக் கவிதையில், பரதன், குகன் என்ற இயற்பெயர்ச் சொற்கள் இல்லை, அரவர்களது பெருமைகளைக் காட்டும் சொல் தொடர். அவரவர்களைக் குறிப்பதாக வந்துள்ளன. சந்தித்த இருபக்தர்களது செயல்களை மட்டும் தெரிவிக்கின்றது இது. அச் செயல்கள் ஒருவர்பால் ஒருவர் கொண்ட அன்பையும் ஆர்வத்தையும் மதிப்பையும் உயர்வெண்ணத்தையும் வெளிப்படுத்துகின்றன.

சந்தித்த இரு பக்தர்களும், தம் பண்டைக் குலத்தை மறந்து. தொண்டக் குலத்தினராய் பக்தி உணர்வோடு கூடிக்களித்தார்கள்.

அதுபோன்று, நாமும் நம்மை மறந்து, பக்தி உணர்வோடு, இந்தக் கவிதையை நெருங்கினால் தான், அந்த இருபக்தர்களின் அன்புத்தழுவலைக் கண்டு களிக்கமுடியும்.

இருபக்தர்களது செயல்களாக, மூன்று வந்துள்ளன இந்த நான்கு அடிக் கவிதையில், அதனை நாம் ஒன்றி நின்று பார்த்தால் உள்ளபடி காணலாம்: வணங்குதல், அடி வீழ்தல், தழுவுதல் என்பன அந்த மூன்று செயல்கள், யார் யார் எவ் வெச் செயல்களைச் செய்தனர் என்பதனைக் காட்ட அவரவர்களது இயற்பெயர் எழுவாயாகவரவில்லை, அதனால்தான், இந்தக் கவிதை சித்தரமாகவும் (அழகு) சூத்திரமாகவும் (திட்ப நுட்பம் செறிந்தது) அறிஞர்களுக்குக் காணப் படுகின்றது.

இதன் முதல் கவிதை 'ஒருதனியேதான் வந்தான்' எனமுடிகின்றது. இது, வந்து எனத் தொடங்குகின்றது. அதனால் 'வந்து' என்பது குகனைக் குறிப்பதாகக் கொள்ளவேண்டும். குகன், தென்கரையிலிந்து வடகரைக்குவந்து, தனக்கு எதிரில் திசைநோக்கித் தொழுது கொண்டு நின்ற பரதனை, தனது இருகை குவித்து, மண்ணுறப் பணிந்து வணங்கினான். இதனைக்கண்ட பரதனும் (அவனும்) தன்னை வணங்கிய அந்தக் குகனுடைய பாதங்களில் விழுந்து, தொழுதான் (அவனும் அவன் அடி வீழ்ந்தான்) அடி வீழ்ந்த பரதன், தாமரை மலரில் வீற்றிருக்கும் படைப்புக் கடவுளாகிய பிரம்ம தேவனும் தலைதாழ்த்தி வணங்குதற்கு ஏற்ற பெருமை உடையவன். (மலர் இருந்த அந்தணனும் தனைவணங்கும் அவனும்)

தன்னுடைய பாதங்களில் (அடி வீழ்ந்த) விழுந்து வணங்கிய பரதனை, குகன் வாரித் தன் மார்பில் அனைத்துக் கொண்டான். அந்த அணைப்பு—தழுவல், ஒருதந்தைதன் மகனைத்தழுவிக்கொள்ளும் அன்பைவிட உயர்ந்ததாக அமைந்திருந்தது. தசரதத் தந்தை பரத மைந்தனைத் தழுவிக் கொண்டதாக, கதையில் எங்கும் இல்லை, இங்கு, இறந்த தந்தை உயிர் பெற்று எழுந்து வந்து இந்த அன்பு மைந்தனைத் தழுவிக் கொண்டால் எப்படியிருக்கும்? அந்த அன்புத் தழுவலையும் விஞ்சியதாக இருக்கும் இந்தக் குகன் தழுவிய தழுவல், (தந்தையினும் களி கூரத் தழுவினான்) தழுவியதுயார்? குகன். இந்த இயற்பெயர்ச் சொல் எழுவாயாக அமையவில்லை, அதற்குப் பதிலாக, குகனது பெருமையை வெளிப் படுத்தும் நீளமான ஒரு தொடரே எழுவாயிடத்தை நிறைவு செய்கின்றது.

'தகவு உடையோர் சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான்' என்பதே, தழுவினவன் யார் என்பதைக் காட்டவந்த அருஞ்சொல் தொடர். சீர்த்தியான் - புகழுடையவன். எவ்வளவு புகழ்? அன்பாலும், அறிவாலும், பக்தியாலும் யார் யார் எல்லாம் மிக்க தகுதி உடையவர்களாகயிருக்கின்றார் களோ, (தகவு உடையோர்) அவரவர்களது உள்ளத்திலும், தலையிலும் (மூளையிலும்) நீங்காது வீற்றிருப்பதற்கு ஏற்றபுகழ். தக்கார் தமது சிந்தையாலும், சென்னியாலும் வணங்குதற்குரிய பெருமையன் — புகழினன் குகன் என்பது கருத்து.

**தங்கார்:**

அப்படி வணங்கியதக்கார் யார்? சீதாபிராட்டி, இலங்கைச் சிறையில் இருந்த போது, மாகத்தார் தேவி மாரும் தொழுவதற்கு ஒத்தகற்புடை மைத்தக் கவளாகக் காணப்பட்டாள். அந்தக் கற்புத்தெய்வம் தன் சிந்தையில்-மனத்தில் இந்தக் குகன் நினைப் பதற்குரியவனாகப் பெருமை பெறுகின்றான்.

'ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்கு, 'எம்பி நின் தம்பி; நீ
தோழன்; மங்கை கொழுந்தி; எனச்சொன்ன
வாழி நண்பினை உன்னி, மயங்குவாள்' (5091)

இது, தகவுடையோர் சிந்தையில் குகன் வீற்றி ருக்கும் சீர்த்தியன் என்பதற்கு எடுத்துக்காட்டு.

'ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது
இரங்கி மற்றவற்கு இன்னருள் சுரந்து
'மாழை மான்மட நோக்கி உன் தோழி;
உம்பி' எம்பி என்று ஒழிந்திலை, உகந்து
'தோழன் நீ எனக்கு; இங்கு ஒழி' என்ற
சொற்கள் வந்து அடியேன் மனத்து இருந்திட
ஆழி வண்ண! நின் அடியிணை அடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்து அம்மானே!'
(பெரியதிருமொழி 8.5 1)

என்ற பாசுரம், திருமங்கை ஆழ்வாரது சென் னியில் வீற்றிருக்கும் சீர்த்தியான் குகன் என்பதற்கு, எடுத்துக்காட்டு.

இவ்வளவு பெருமையும் புகழும் உடையவனே, பரதனைப் புகழப் போகின்றான் என்பதற்குத்தான், குகனுக்கு இவ்வளவு சிறப்பு கொடுக்கப்பட்டுள்ளது இந்தக் கவிதையில்,

**வினாவும் விடையும்:**

பரதன் எதற்காக இந்தத் துறவுக் கோலத்தினனாய், மக்கள், படைகள் சூழவந்துள்ளான் என்பது குகனுக்குத் தெரியாது. தெரியாதஒன்றைத் தெரிந்து கொள்ளவேண்டும். அதற்கு என்ன செய்யவேண்டும்? கேள்வி கேட்க வேண்டும். அப்படி ஒரு கேள்வி கேட்டான் வேடர் குலத்தலைவன்.

'எழுவினும் உயர்ந்த தோளாய்! எய்தியது என்னை?' என்பது குகன் கேட்ட கேள்வி. யாரைக் கேட்டான்? தாமரைச் செங்கணானை-தாமரை மலர் போன்ற சிவந்த அழகிய கண்களை உடைய பரதனை கேட்டது யார்? 'தழுவின புளிஞர் வேந்தன்' என்பது பதில். பரதனைத் தழுவிக் கொண்ட வேடர் தலைவன். இது, தந்தையினும் களிகூரத் தழுவிக் கொண்டது குகன்தான் என்ற முதல் பாடலின் கருத்தை உறுதிப்படுத்துகின்றது. எய்தியது எதற்காக என்ற குகன் வினாவுக்கு விடையாக,

'முழுது உலகு அளித்த தந்தை
முந்தையோர் முறையினின்றும்
வழுவினன்; அதனை நீக்க
மன்னனைக் கொணர்வான்'

என்று கூறினான் பரதநம்பி. 'என் தந்தை தசரதன் கோசலை நாட்டை நன்கு ஆட்சிபுரிந்த நல்லரசன் தான். ஆயினும், முன்னோரது அரசமரபினின்றும் வழுவிவிட்டான்: தவறிவிட்டான். அதனைப்போக்க, நாட்டுக்குரிய அரசனை-இராமபிரானை அழைத்துக் கொண்டு செல்வதற்காக வந்தேன்' என்பது பரதன்

அளித்தபதில். இந்தப் பதில், கேள்வி கேட்ட குகனை வியப்பில் ஆழ்த்தியது, 'அடே அப்பா! இப்படியும் ஒரு மனித உள்ளமா? உலகில் எங்கும் என்றும் காண இயலாத உயர்ந்தமனமாக அல்லவா உள்ளது என்பது குகன் மனத்தில் தோன்றிய வியப்பு-ஆச்சரியம்! இந்த உணர்வு, அந்தக் குகனை என்ன செய்தது என்பதனை அடுத்தகவிதை காட்டுகின்றது.

'கேட்டனன், கிராதர் வேந்தன்;
கிளர்ந்து எழும் உயிர்ப்பன் ஆகி
மீட்டு ம்,மண் ணதனில் வீழ்ந்தான்;
விம்மினன், உவகை வீங்க
தீட்ட அரு மேனி மைந்தன்
சேவடிக் கமலப் பூவில்
பூட்டிய கையன், பொய்யில்
உள்ளத்தன், புகல லுற்றான்? (2336)

இந்தக் கவிதை, ஒரு பகவத் பக்தன் மற்றொரு பகவத் பக்தனது பெருமையை அறிந்தால், அறிந்த உடன் என்ன செய்வான் என்பதைக் குகப்பெருமாள் மூலம் தெளிவு படுத்துகின்றது.

பரதன் கூறிய பதிலைக் கேட்டதும் குகனது உள்ளத்தில் வியப்புஉணர்வு எழுந்தது: அது. பெருமூச்சாக வெளியேறியது. பரதன் திருவடியில் மேலும் ஒரு முறை விழ வைத்தது; பரதனைப் புகழ்ந்து பேசத் தூண்டியது. பரதன் கூறிய வியப்புச்செய்தியால் குகனின் உள்ளம் மகிழ்ந்தது: உடல் பூரித்தது.

---

கிராதிர்-வேடர்; கமலம்-தாமரை; புகல்-சொல்லுதல்

முதலில், கண்டதும் பரதன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிய குகன், பரதனது பேருள்ளப் போக்கை பெருமைக் குணத்தை உணர்ந்ததும் மீண்டும் ஒரு முறை பரதநம்பியின் பாதங்களில் விழுந்து தொழுதான். முன்பு, வணங்கியதும் எழுந்தான். இப்போது தொழுததும் எழுந்திருக்கவில்லை. அவன் திருவடிகளை தனது கைகளால் இறுக்கமாகப் பிடித்துக் கொண்டு கீழேயே கிடந்தான் குகன். கிடந்தவாறே பரதன் புகழைப் பேசலானான். பேசுபவன் யார்? பொய்யில் உள்ளத்தான். பொய்ம்மை கலவாத தூய மெய்யன் குகன். அதனால் இவன் சொல்வது உண்மை. 'வெறும் புகழ்ச்சியன்று' என்பது குறிப்பு.

**பொய்யிலான், சூட்டும் புகழாரம் :**

தாய்உரை கொண்டு தாதை
 உதவிய தரணி தன்னை
தீவினை என்ன நீத்து,
 சிந்தனை முகத்தில் தேக்கி,
போயினை என்ற போழ்து,
 புகழினோய்! தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ்
 ஆவரோ, தெரியின் அம்மா! (2337)

'என்புகழ் கின்றது, ஏழை
 எயினனோன்? இரவி என்பான்
தன்புகழ்க் கற்றை மற்றை
 ஒளிகளைத் தவிர்க்கு மாபோல்
மன்புகழ் பெருமை நுங்கள்
 மரபினோர் புகழ்கள் எல்லாம்
உன்புகழ் ஆக்கிக் கொண்டாய்
 உயர்குணத்து உரவுத் தோளாய்' (2338)

---

தாதை—தந்தை: தரணி—நிலம்: (அரசு) கேழ்-ஒப்பு: எயினன்-வேடன்: இரவி-சூரியன்: உரவு-வலிமை: கற்றை-தொகுதி.

இந்த இருகவிதைகளும் புகழப் படுகின்ற பரதன் பெருமையையும், புகழ்கின்ற குகன் பெருமையையும் ஒருசேர உணர்த்துகின்றன.

குகனது பொய்யில் உள்ளம், பரதனது செயலை இராமபிரானது செயலோடு ஒப்பிட்டுப் பார்க்கின்றது. அந்த ஒப்பீட்டில், பரதனது செயல் மிகமிக உயர்ந்து நிற்கின்றது. அதனால் உணர்ந்ததை உணர்ந்தபடியே, "ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ?" என்று துணிந்து கூறிவிட்டான் இராம பக்தனாகிய குகன். ஒன்றனுடைய உயர்வை அளவிட வேண்டுமானால், அதற்குச் சமமான ஒன்றோடு இணைத்து வைத்துப் பார்ப்பது உலக இயல்பு.

அதுபோன்று, இங்கு, பரதனது பெருமைத் தன்மையை அளந்து காண்பதற்கு, தன்னை "என் உயிரனையாய்" என்றும், "யாதினும் இனிய நண்ப" என்றும் சொல்லித் தன்னோடு இணைத்துக் கொண்ட இராமபிரானையே அளவு கருவியாக்கிக் கொண்டான் இந்தக் குகன். அவ்வளவு சிறப்புக் குரிய இராமபிரானைவிட ஆயிரம் மடங்கு உயர்ந்தவன் பரதன் என்பது குகனது கருத்து. எதனால்?

தந்தை தசரதன் சொல்ல, மைந்தன் இராமபிரான் கோசலை சாம்ராஜ்யத்தை ஏற்க இசைந்தான். அதேபேரரசு, தாயின் ஆசியுடன், தந்தையின், அணைப்படி, தானாக இந்தப் பரதனைவந்து சேர்ந்தது. அவ்வளவு பெரிய அரசப் பதவி தன்னை நாடிவந்ததைக்கண்டு, உலகத்தார்மகிழ்வதுபோன்று இவன் மகிழவில்லை. மகிழாதது மட்டும் அன்று! 'தான் செய்த தீ வினையின்பயன் இந்த அரசபதவி.

என எண்ணினான் இந்தப்பரதன். அதுமட்டும் அல்ல இந்தப் பேரரசு யாருக்கு உரியதோ. அந்த இராம பிரானிடம் இதை ஒப்படைத்து விடவேண்டும். அந்தப் பெருமானும் ஏற்கவில்லை என்றால் என் செய்வது என்ற ஆழ்ந்த சிந்தனையை முகத்தில் தேக்கி வைத்துக் கொண்டு வந்துள்ளான். வரும் போது, படைகளையும் நாட்டுமக்களையும் உடன் அழைத்து வந்துள்ளான். இது எதற்கு? இராம பிரானை, கோசல நாட்டுப் பேரரசனாக முடி சூட்டி அரச மரியாதையுடன் அழைத்துச் செல்வதற்காக.

இவைகளை எல்லாம் உணர்ந்து பார்த்தால் தான், 'ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ? என்று சொன்னான் இந்தப் பொய்யில் உள்ளத்தான்.

மேலும், குகனது பொய்யில் உள்ளம், ரகு வம்சத்தில் இதற்கு முன் தோன்றிய புகழ் பெற்ற மன்னர்கள் அனைவரையும் பரதன் முன் கொண்டு வந்து நிறுத்தி நினைத்துப் பார்க்கின்றது. பரதன் தோற்றத்துக்கு முன், அவர்களது புகழ் ஒளி விட்டுக் கொண்டுதான் இருந்தது, இந்தப் பரதனது புகழுக்கு முன்னால், அந்த முன்னோர்களது புகழ்கள் எல்லாம் ஒளி மழுங்கி, இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டன.

இதற்கு ஒரு உவமை வேண்டுமே! சூரிய உதயத்துக்கு முன்னால், சந்திரன் முதலிய கோள்கள் ஒளி விட்டுக் கொண்டிருக்கும். சூரியன் உதித்தவுடன், மற்றைய எல்லா ஒளிகளும் சூரிய ஒளியுள் அடக்கம். அது போன்று, 'நுங்கள்மரபினோர் புகழ்கள் எல்லாம் உன் [illegible] டாய்'

என்று புகழ்ந்தான் மெய்ம்மைச் செல்வனாகிய குகன். இதனைச் சொல்லத் தொடங்கும் முன் 'என் புகழ்கின்றது? யானோ ஏழை எயினேன்' என்று தனது பேச்சுக்கு முன்னுரை வகுத்துக்கொண்டான் வேடர் தலைவன்.

'அறிவில்லாதவனான (ஏழை) நான் எப்படிப் புகழ்வது' என்றவனது புகழ் மொழியே, சூரியன் அளவுக்கு உயர்ந்தது என்றால், கற்றவர் புகழும் மொழி எவ்வளவு உயர்வாக அமையும் என்பது கருத்து.

இரவி என்பான்தன் புகழ்க் கற்றை மற்றைய ஒளிகளைத் தவிர்த்தல் என்பது இங்கு உவமையாக்கப்பட்டுள்ளது. கம்பநாடன், இந்த உவமையை ஏழை எயினன் வாயிலாக வெளிப்படுத்தியதில் ஒரு கருத்து உண்டு.

**உவமை :**

காளிதாசன் வடமொழிக் கவிஞர் உலகில் சக்கரவர்த்தி என்று போற்றப் படும் மிகப்பெரிய கவிஞன். இவன் செய்த வடமொழி நூல்கள் அனைத்தும் அம்மொழி இலக்கிய வரிசையில் ஒளிவிட்டுத் திகழ்வன. இது வடமொழி நல்லறிஞர் கணிப்பு.

இந்தக் கவிச்சக்கரவர்த்தியின் கலைவண்ணம் பெற்ற நூல்களுள் 'இரகுவம்சம்' என்பது ஒன்று. அக்காவ்யத்தில் பத்தாவது சர்க்கத்தில் இராமபிரான் சரித்திரம் பேசப் படுகின்றது. அதில் 68வது சுலோகம் இராமாவதாரம் பற்றியது அதன் கருத்து: 'பிரசவ அறையில் இருந்த ரத்தின தீபங்கள் எல்லாம், ரகுவம்சத்தை விளக்குகின்ற நிகரற்ற ஒளியை உடைய இராமனால் ஒளிமழுங்கச் செய்யப்பட்டன?

இந்தக் கருத்தைக் கவனித்த நம் தமிழ்க் கவிச் சக்கரவர்த்தி, அதனை மேலும் விரிவுபடுத்தினான் தனது காவியத்தில். வடமொழிக் காவியத்தில் இராமனால், இரவுத் தீப ஒளிகள்தான் மழுங்கின. தமிழ் காவியத்தில் "சூரிய ஒளியையே மறையச் செய்து விட்டது இராமபிரானது திருமேனி ஒளி" என்று பாடுகின்றான் கம்ப நாடன்.

"வெய்யோன் ஒளி, தன்மேனியின் விரிசோதியில் மறைய"

என்பது தமிழ் மொழிக் கவிச் சக்கரவர்த்தியின் கவிதைத் தொடர்.

சூரிய ஒளியைத் தனது திருமேனியின் விரிந்த சோதியில்-ஒளியில் மறையச் செய்தான் இராமபிரான் அந்த இராமபிரானது புகழ் ஒளியையும் தனது புகழ் ஒளியில் அடங்கச் செய்துவிட்டான் இந்தப் பரத நம்பி. சூரிய ஒளி உவமையையும் மிஞ்சிவிட்டது பரதனது புகழ் ஒளி என்பது கருத்து.

இவ்வளவு புகழ் மொழியையும் பரதன் செவி, கேட்கப் பொறுக்காது என்பதால்தான், இந்தப் பொய்யில் உள்ளத்தான், பரதனது பாதங்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு (பூட்டிய கையன்) கீழே கிடந்தவாறே எடுத்துரைத்தான்.

பெரியோர்கள், தம் புகழைப் பிறர் சொல்ல அதனைக் கேட்க விரும்பமாட்டார்கள். அப்படிக் கேட்கும் நிலை ஏற்பட்டால், தலை சாய்த்து மனம் வாடி நிற்பர். அத்தகைய பெருமகன் இந்தப்பரதன்,

# (11)

# அன்பத்துக்கு எல்லை உண்டோ?

**எல்லை:**

உலகத்துப் பொருள்கள் ஒருவகையில் இரண்டு பிரிவில் அடங்கும். ஒன்று காட்டும் பொருள்: மற்றொன்று காட்டலாகாப் பொருள். இவைகளை உருவப் பொருள் அருவப் பொருள் என்றும் சொல்லலாம். கண்ணால் காணக் கூடியவைகள் உருவம் உடையன. காணமுடியாதவைகள் அருவத்தின.

கண்ணால் காணப்படுபவைகள் எதுவாகயிருந்தாலும் அவை கால, இட எல்லைகளுக்கு உட்பட்டனவே. உருவம் உடையது ஒரு காலத்தில் இருக்கும் ஒரு இடத்தில் தான் இருக்கும். காலத்தையும் இடத்தையும் கடந்து நிற்பவை அருவப் பொருள்களே,

எது ஒன்று கண்ணால் காணமுடியாததாக இருக்கின்றதோ அது, எக்காலத்திலும் எல்லா இடங்களிலும் நிறைந்து இருக்கும். ஆனால் அதே சமயத்தில் மறைந்துதான் இருக்கும். எங்கும் எல்லாவற்றிலும் பரந்து கிடப்பது, கரந்து கிடக்கும்,

'கரந்த சில் இடந்தொறும், இடந்திகழ் பொருள் தொறும் கரந்தெங்கும் பரந்துளன் இவை உண்டகரனே' என்ற திருவாய்மொழிக் கருத்து இதனை உறுதிப்படுத்தும். அதனால், உருவமாக யில்லாமல் அருவமாக இருப்பது, கால, இட எல்லைகளுக்கு அப்பாற்பட்டு நிற்கும் என்பதை உணரலாம்.

**அன்பு:**

அந்த அருவங்களுள் அன்பு என்பது ஒன்று. அன்பு என்ற உணர்வு எல்லாக் காலத்திலும் எல்லா இடங்களிலும் உண்டு. இதற்கு ஒரு எல்லை-வரம்பு இல்லை. இது 'முடிவு உளது என உன்னா அன்பு' என இராமபிரானால் கூறப்பட்டது. அந்த அன்பு ஒரு பசை போன்றது. உருவம் உடைய இரண்டை ஒன்று சேர்ப்பதற்கு-ஒட்டவைப்பதற்குப் பயன் படுவது பசை. அது போல, அன்பு என்ற மனிதமன உணர்வு, மக்களை ஒன்றாக இணைக்கின்றது.

அயோத்தியில் சக்கரவர்த்தி திருக்குமாரனாக வாழ்ந்த இராமபிரான், கங்கைக்கரையில் வேடுவர் குலத்தினனாக வாழ்ந்த குகனைத் தனது சகோதரனாக ஏற்றுக் கொண்டான். வேடர் குலத்தானை, சக்கரவர்த்தித் திருக்குமாரர் குடும்பத்தில் ஒருவனாச் சேர்த்து வைத்தது எது? அதுதான் அன்பு. அந்த அன்பு என்ற பசை, அந்தப் பெருங்குடும்பத்தினரோடு ஒருவனாகக் குகனை ஒட்ட வைத்து விட்டது.

அதனால்தான், அந்தக் குகனைப்பார்த்து, இராமபிரான், 'முன்பு உளம் ஒரு நால்வேம்: இனி ஐவர்கள் உளரானோம்.' என்று கூறினான். நால்வருடன் குகனும் சேர்ந்து ஐவர் ஆதற்குக் காரணம், 'அன்பு உள': அது முடிவு உளது என உன்னாதது எல்லை அற்றது' என்பதைச் சுட்டிக் காட்டினான் இராமபிரான்.

## உணர்வு வெளிப்பாடு:

கண்களுக்குப் புலப்படாதது: உள்ளேயே அடங்கி கிடப்பது அன்பு. ஆயினும், இந்த உணர்வு, தான் இருக்கும் இடத்தை வெளிப்படுத்திக் காட்டும் இயல்பினது. அருவமாகயிருக்கும் அன்பு தன்னை வெளிப்படுத்திக் கொள்வது எப்படி? உருவம் உடைய ஒன்றன் உதவியால்தான் அருவம் வெளிப்படும்.

அன்பு. எங்கு யாரிடம் தங்கியிருக்கின்றதோ, அவரது செயல்களின் மூலம் தன்னை வெளிப் படுத்திக் கொண்டு விடும். வேடர் குலக்குகன், சக்கரவர்த்தித் திருக்குமாரனைக் காணவரும் போது, கையுறைப் பொருளாக, தேனும் மீனும் கொண்டுவந்தான். இந்தப் பொருள்கள், குகனது அன்பின் வெளிப்பாடு. இதனைக் கண்ட இராம பிரான் இப்பொருளை எப்படி மதிப்பிடுகின்றான்? 'உள்ளத்து அன்பினால் அமைந்த காதல் தெரிதரக் கொணரப்பட்டது; அதனால் அமிழ்தினும் சீர்த்தது இந்தக் கையுரைப் பொருள். என்பது இராமபிரான் மதித்த மதிப்பீடு. அதனால், குகன், 'தாயினும் நல்லானாக' மதிக்கப்பட்டான் இராமபிரானனால்.

மேலும், அன்பு, சொற்களாகவும் வெளிப்படும்: கண்ணீராகவும் வெளிப்படும். இராமபிரான் மேல் கொண்ட அளவற்ற அன்புதான், பக்தப் பரதனை, பகைப்பரதனாகக் கருதச் செய்தது; குகனை:

உடனே அவன் வாயினின்றும் கோபச் சொற்களாக வெளிப்பட்டது. தன்னால் அன்பு செய்யப்பட்டவர்க்கு ஆபத்து என்றால், எதனையும் செய்யத் தூண்டும் இந்த அன்பு உயிரினும் இனிய வற்றையும் தியாகம் செய்விக்கத் தூண்டும் இந்த அன்பு.

'தோழமை என்று அவர் சொல்லியசொல் ஒரு சொல் அன்றோ? 'ஏழமை வேடன் இறந்திலன்' என்று எனை ஏசாரோ 'என்று, அன்புடையார்க்காகத் தியாகம் செய்ய, குகனைத் தூண்டியது அருவமாய் உள்ளிருந்த அன்புதான்.

அன்பு, கண்ணீராக வெளிப் படுதலை,

'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்? ஆர்வலர்
புண்கண்ணீர் பூசல் தரும்' (71)

என்று வள்ளுவம் தெளிவாகக் கூறும்.

'நின்னை இங்ஙனம் பார்த்த கண்ணை ஈர்கிலாக் கள்வனேன்யான்' என்று இராமபிரானைப் பார்த்து, தனது உணர்வின் வெளிப் பாடாகக் குகனைப் பேசவைத்தது இந்த அன்புதான்.

இவ்வாறு, உடன் பிறவா ஒருதம்பியின் அன்பு வெளிப்பாடே இப்படி இருக்குமானால், உடன் பிறந்த தம்பியின் அன்புச் செயல்கள் எவ்வளவு உருக்கமாக அமைந்திருக்கும்?

உள்ளத்து உணர்வுதான், மிறரது துன்பத்தைத் தான் துன்பமாக மனிதனைக் காணச் செய்கின்றது. அதனால் உருக்கம் ஏற்படுகின்றது,

**பரதன் பண்பு :**

அந்த உருக்கக் காட்சிக்குக்கதை தொடர்கின்றது. பரதனது சேவடிக் கமலப் பூவில் பூட்டிய கையினனாய், அவனைப் புகழ்ந்து பாராட்டிய குகன், பிறகு, அவர்களுக்கு வேண்டியன செய்தான். இந்தச்செயல்கள் ஏன்? 'ஆர் அவற்கு அன்பு இலாதார்? என்பது, கவிக்கூற்றாக வந்தவிடை.

தனது உடல் சுகம் எதையும் விரும்பாத பரதன், அன்புக்குகனிடம், தனது உயிர்க்குயிராய் விளங்கும் இராமபிரான் அங்குயிருந்த நிலைபற்றிவிசாரித்தான் எப்படி? 'தென் திசைச் செங்கை கூப்பி, 'எவ்வழி உறைந்தான் நம்முன்' என்று கேட்டான் பரத நம்பி. தனது கைகளைக் குவித்துக் கொண்டு வணக்கத்துடன் கேட்டான் பரதன் யாருக்கு வணக்கம்? எதிரில் நிற்கும் குகனுக்கா' அப்பால் கங்கை கடந்து சித்திர கூடத்தில் தங்கியுள்ள இராமபிரானுக்கா' இருவருக்கும்தான்! எதிரில் நிற்பவன், குகப் பெருமாள்: இப்போது ஆசாரியஸ்தானம் வகிப்பவன். திருச்சித்திர கூடத்து அமர்ந்தவன், அடியவன் சென்று சேர்வதற்குரிய பரம்பொருள் ஸ்தானம் வகிப்பவன். ஆகையால், வணக்கத்தை ஆசாரியனுக்கும் ஆண்டவனுக்கும் உரித்தாக்கினான் பக்தப் பரதன்.

மென்மையான பஞ்சணைப்பள்ளியில் படுத்துக் கண்வளரும் மேன்மைத் திருமேனியனான இராமபிரான், இரவில் துயின்ற இடம் எதுவோ? இங்கு உள்ளன எல்லாம் வன்மையனவே! அதனால்தான், "எவ்வழி உறைந்தான் எம்முன்' எனக் கேட்டான் பரதன்.

சேட்ட பரதனுக்கு 'யானே காட்டுவல் எழுக' என்று குகன் பதில் கூறினான்: உடனே அவனை அழைத்துச் சென்றான்: இராமபிரான் துயின்ற இடத்தைக் காட்டினான். கண்டான் பரதன். எதனை? வார்சிலைத் தடக்கை வள்ளலாகிய இராமபிரான் வைகிய கல்லிடைப் படுத்த புல்லின் பள்ளியை.

கண்டதும், பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான் பரதன். ஏன்? 'நம்மால் அல்லவா எம்பிரானுக்கு இத்தகைய துன்பம் வந்தது? மெல்லணைமேல் முன் துயின்றவன், இந்தக் கல்லணையில் துயில்வதா?' என்ற எண்ணம் பரதனை வாட்டியது. வாடினவன் கீழே சாய்ந்தான். சாய்ந்தவன், பருவால் பரவை புக்கான் (துன்பக் கடலில் மூழ்கினான்.) துன்பக் கடல் நீர், பரதனது கண்களின் வழியாக வடிந்தது. அன்புக்குரியார் படும் துன்பத்தைக் கண்டால், கண்டகண்களினின்றும் அழுகை நீர் தானாக வழிந்து ஓடத்தானே செய்யும்: அந்தக் கண்ணீரை எப்படி அடைத்துவைக்க முடியும்? உள்ளிருக்கும் அன்பு உணர்வு அல்லவா கண்ணீராக வடிகின்றது? அதனை அடைக்கும் தாழ் எங்கு உள்ளது? எங்கும் இல்லை!

பரதனது அழுகைச் செயலை, கவிச்சக்கரவர்த்தி, தனக்கே உரிய கற்பனை நயத்துடன் அழகாகக் கூறியுள்ளான். அழுகையிலும் அழகைக் காட்டுவது இந்தக் கவிஞனின் இயல்பு அல்லவா?

'வார்மணிப் புனலால் மண்ணை
மண்ணுநீர் ஆட்டும் கண்ணான்'

என்பது கம்பநாடன் காட்டும் பரதன் உகுக்கும் துன்பக் கண்ணீர்காட்சி. துன்பக்கண்ணீர் அன்பின் வெளிப்பாடுதான்! ஆனாலும், அதற்குமேலும் ஒன்றைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது இந்தக் கவிதைத்தொடர். புலப்படுத்துவது என்ன? பரதனது பண்பு. என்ன பண்பு?

இராமபிரான் உடன் பிறந்த சகோதரனாகயிருந்தாலும், அவனை, பரதன், தான் வழிபாடு செய்யும் தெய்வமாகத்தான் மதித்தான். தெய்வம் மனித உருவில் சகோதர உறவில் அமைந்துள்ளது. அதனால் அந்தத் தெய்வம், தங்கிச் சென்ற இடத்தைப் புனிதமாகக் கருதினான். அந்தப் புனித இடத்தைத்தனது கண்ணீரினால் திருமஞ்சனம் செய்தான். 'மண்ணு நீர் ஆட்டும் கண்ணான் என்ற தொடர், இராமபிரானைத் தெய்வமாக மதிக்கும் பரதனது பண்பைக் குறிப்பாகக் காட்டுகின்றது.

குறிப்பாகக் கட்டப்பட்ட பரதனது பண்பு, அடுத்து வரும் கவிதையில் அவன் உள்ளம் உருகி வந்த சொற்களாகவே, காட்டப்படுகின்றது.

'இயன்றது என்பொருட்டினால், இவ்இடர்
உனக்கு என்ற போழ்தும்,
அயின்றனை, கிழங்கும் காயும்
அமுதுஎன: அரிய புல்லில்
துயின்றனை; எனவும், ஆவி
துறந்திலென்: சுடரும் காசு
குயின்றுஉயர் மகுடம் சூடும்
செல்வமும் கொள்வென் யானே!' (2342)

---

புனல்—தண்ணீர்; இடர்—துன்பம்.

'பெருமானே! என்னால்தான் இத்துன்பமெல்லாம் உனக்கு வந்தது என்று கேட்டவுடன், நான் அன்புடையவனாகயிருந்திருந்தால், உயிரை உகுத்திருக்க வேண்டும்; அது போகட்டும்! கானகத்துக்கிழங்கையும், காயையும் நீ அமிழ்தமாக எண்ணி அயின்றாய்: (சாப்பிட்டாய்) இந்தப் புல்லும் கல்லும் நிறைந்த இடத்தை மெல்லணையாகக் கருதி, துயின்றாய் (தூங்கினாய்) என்றதை நேரில் கண்ட போதும் எனது உயிரை விடாது இருக்கின்றானே! அதனால், 'யானும் பொய்யன்: என் நெஞ்சும் பொய். அன்பிலேன் என்பதேமெய்.'பொய்யனனாகியநானா, கோசல நாட்டு அரச முடி சூடிக் கொள்வது?! அது நடவாது; என்று சித்திர கூடத்தில் தங்கியுள்ள இராமபிரானை, தனது நெஞ்சில் நேர் நிறுத்திப் பேசிப் புலம்புகின்றான் இந்த பரதநம்பி. இது பரதனது உயர் பண்பாடு.

## அன்புச் செயல்:

அன்புச் செயல் எப்படியிருக்கும் என்பதைக் காட்டும் வகையில், மேற்கொண்டு இந்த இருவரது உரையாடல் தொடர்கின்றது.

அடுத்து பரதன் கேட்ட கேள்வியும் அதற்கு, குகன் கூறிய பதிலும், அன்புச் செயலைக் காண்பதற்கு உதவும். 'நிமிர்ந்த நேயம் (அன்பு) பூண்டவன், பின்னே தொடர்ந்து போந்தவன் (இலக்குவன்) இராப் பொழுது நீத்தது எங்கு? எவ்வாறு? என்பது பரதன் கேள்வி. இதற்குக் குகன் அளித்த பதில், பரதனை மேலும் உருக்கிவிட்டது.

"அல்லை ஆண்டுஅமைந்த மேனி
அழகனும் அவளும் துஞ்ச,
வில்லை ஊன்றிய கையோடும்
வெய்துயிர்ப் போடும் வீரன்,
கல்லை ஆண்டுஉயர்ந்த தோளாய்!
கண்கள்நீர் சொரிய, கங்குல்
எல்லைகாண்பு அளவும் நின்றான்;
இமைப்பிலன்; நயனம்" என்றான்.

இராமபிரான்பால் நிமிர்ந்த நேயம் (அன்பு) பூண்டவனாய் உடன் வந்த இலக்குவனது அன்புச் செயலை விவரிக்கின்றது இந்தக் கவிதை.

அன்புக்குரியவர் நலம் பெற வேண்டி, தனது நலன்கள் முழுவதையும் தியாகம் செய்பவன் எவனோ, அவன்தான் முழுமையான அன்பினன். அப்படிப்பட்ட இலக்குவன், பெருமானும் பிராட்டியும் துயின்றுகொண்டிருந்தபோது, துயிலாது நின்றான். இரவில் துயிலாதது மட்டும் அல்ல! காட்டில் எந்தவிதமான இடையூறும் வராதபடி இருக்க வேண்டுமே! அதற்காக வில்லை ஊன்றிய கையோடு நின்றான். எவ்வளவு நேரம்? கங்குலின் எல்லை காணும் வரை. விடியும் வரை. அப்படி நின்ற இளைய பெருமாளின் அன்புக்கு எல்லை காண முடியுமா? அல்லுக்கு (இரவு) எல்லை (முடிவு) உண்டு: அன்புக்கு எல்லை இல்லை.

இராப்பொழுது முழுவதும் வில்லை ஊன்றிய கையோடு நயனம் (கண்) இமைக்காமல் இளைய பெருமாள் நின்றபோது, அவன் கண்கள் நீரைச் சொரிந்த வண்ணம் இருந்தன.

---

நயனம்-கண்; கங்குல்-இரவு.

நீரைச் சொரிந்தது ஏன்? தான் துயிலாததற்கா அன்று! அன்று! மெல்லணையில் முன் துயின்றவர் கல்லணையில் துயில்பவர்களாயினரே! இந்தத்துன் பக்காட்சியைக் காணும் நிலை ஏற்பட்டு விட்டதே: இதை நினைத்து, இலக்குவன் உள்ளம் பெருமூச்சு விட்டது: (வெய்துயிர்த்தது) கண்கள் துன்ப நீரைச் சொரிந்தன. இவ்வாறாக இளைய பெருமாளின் அன்புச் செயலை விவரித்தான் குகப்பெருமாள்.

### அழகிது என் அடிமை:

இதனைக் கேட்டுக் கொண்டிருந்த பரதநம்பி, இலக்குவனின் அன்புச் செயலையும் தனது செயலையும் ஒப்பிட்டுப் பார்க்கின்றான். உடனே தனது உள்ளத்து உணர்வை உரையாக வடிக்கின்றான் பரதவள்ளல்.

என்பத்தைக் கேட்ட மைந்தன்,
'இராமனுக்கு இளையார் என்று
முன்பு ஒத்த தோற்றத் தேமில்,
யான்என்றும் முடிவு இலாத
துன்பத்துக்கு ஏது ஆனேன்;
அவன், அது துடைக்க நின்றான்;
அன்பத்துக்கு எல்லை உண்டோ?
அழகிது, என் அடிமை' என்றான். (2344)

குகன், பரதனுக்குப் புதியவன்: இன்று அறிமுக மானவன். இருப்பினும், அவன் சொன்னதை அப்படியே நம்பினான் இந்தப் பரதன். ஏன்? குகன் பொய்யில் உள்ளத்தவன் அல்லவா? தமது குடும்பச் செய்தியை ஒளி மறைவின்றிக் கூறுகின்றான்.

பரதன் இந்தப் புதியவனிடம். எதனால், குகன், இராமபிரானால், தம்குலத்து ஒருவனாக அணைத்துக் கொள்ளப் பட்டதனால். இராமபிரான் அங்கீகரித்த பிறகு, அவன் எப்படிப் புதியவனாவான்?

'நானும் இராமபிரானுக்குத் தம்பி; இலக்குவனும் தம்பி. இராமபிரானுக்குத் தம்பிகள் என்ற அளவில், நாங்கள் இருவரும் ஒத்த நிலையினராகயிருந்தோம் முன்பு. பிறப்பால் ஒத்த தோற்றத்தோம் முன்னர். இப்போது நாங்கள் இருவரும் செயலால் வேறு பட்டுவிட்டோம் எப்படி?

'நான், இராமபிரானுக்கு வந்த எல்லையில்லாத துன்பத்துக் காரணமாகயிருந்தேன்; என்னால்தான் அப்பெருமானுக்கு இவ்வளவு பெரிய துன்பம் வந்தது. ஒரு தம்பி அண்ணனுக்குத் துன்பத்தை ஏற்படுத்தினான். மற்றொரு தம்பியாகிய இலக்குவனோ, அண்ணனுக்கு வந்த துன்பத்தைப் போக்குவதற்காகவே, தன்னைத் தியாகம் செய்துவிட்டான், தன், நலம் முழுவதையும், அண்ணனுக்கு ஏற்பட்ட துன்பத்தைத் துடைத்து, நன்மை ஏற்படுத்துவதற்காகவே தியாகம் செய்தான். எதனால்? இராமபிரான் மேல் கொண்ட அளவற்ற அன்பினால். துன்பம் தந்தவனும் தம்பி: துன்பத்தைத் துடைப்பவனும் தம்பியா? அதனால் இலக்குவன் அன்பின் மெய்யன்: நானோ அன்பில் பொய்யன்.'

'ஆகவே அன்பு உணர்வு இப்படித்தான் வெளிப்படும் என்று கணித்துச் சொல்லமுடியாத எல்லைக்கு அப்பாற்பட்டது' என்று பரதன் தன் உள்ளத்தில் பட்டதை உள்ளபடி எடுத்துக் கூறினான்.

'எல்லை ஒன்று இன்மை எனும் பொருளதனை கம்பன் குறிகளால் காட்டிட முயன்றான், என்று மகாகவி பாரதி, கவிச்சக்கரவர்த்தியைப் பற்றி மதிப்பிட்டான். கம்பன் தந்த இந்தக்காப்பியத்தில், எதனைக்கண்டு பாரதி இவ்வாறு கணித்திருப்பான்

அன்பு எல்லை இல்லாதது. அதனை, குகன், இலக்குவன், பரதன் முதலிய பாத்திரங்களின் வாயிலாக (குறிகள் - அடையாளப் பொருள்) அமைத்துக் காட்டியிருப்பதைக் கண்டுதான் பாரதி இவ்வாறு கூறியிருக்க முடியும்.

அன்பின் அடையாளச் சின்னங்கள். குகன், இலக்குவன், பரதன் முதலிய பாத்திரங்கள்.

குகன், அவனது அன்பினால் தாயின் நல்லான் எனப்பட்டான். அந்தக் குகனால், மரபினோர் புகழ்கள் எல்லாம் உன் புகழ் ஆக்கிக் கொண்டாய்' என்று புகழப்பட்டான் பரதன். அந்தப் பரதனால். அன்பின் எல்லையாக நிற்பவன் என்று போற்றப்பட்டான் இலக்குவன்.

மூவரும் தத்தம் அன்பினால், உயர் பெயர் பெற்று விளங்குகின்றனர். குகப்பெருமாள்: பரதாழ்வான்: இளைய பெருமாள். என்பன அவர்களது ஏற்றமான பெயர்கள்: அவர்களது ஏற்றத்தைக் காட்டும் பெயர்கள்.

## (12)

## உள்ளம் குளிர்ந்தது.

### பரதனும் பரத்துவாசனும் :

குகன், பரதன் முதலிய அனைவரையும் படகில் ஏற்றி கங்கையாற்றைக் கடக்கச் செய்தான்: வேண்டியன தந்து உபசரித்தான். பிறகு சித்திரகூடத்தை நோக்கி அவர்களை அழைத்துச் சென்றான். முன்பு இராமபிரான் கங்கையாற்றைக் கடக்க உதவிய போது, குகனுக்குச் சித்திரகூடம் செல்ல வாய்ப்பு கிடைக்கவில்லை. அந்தவாய்ப்பு இப்போது. தானாக வந்து கிட்டியுள்ளது குகனுக்கு. பகவானைவிட பாகவதனோடு சேர்வதுதான், நற்பயனுக்கு வழி காட்டும் என்பதற்கு இது ஒரு எடுத்துக் காட்டு போலும்!

திருச்சித்திரகூடம் சென்று சேரும் முன், வழியில் ஒரு ஆசிரமம், இது பரத்துவாச முனிவனுடையது. பரத்துவாச ஆசிரமத்தில் இவர்கள் தங்க வேண்டிய வரானார்கள். சிரமத்தைப் போக்குவது தானே ஆசிரமம்! வழி நடைச்சிரமத்தையும்போக்கும் அங்கு தங்கியுள்ள முனிவனது தரிசனம், வாழ்க்கை வழி நடைச்சிரமத்தையும் நீக்கும்.

ஆசிரமத்துக்கு வந்தவனும் மாதவத்தோன்: வரவேற்பவனும் மாதவத் தோன். வரும் மாதவத் தோன், பாரத்தைத்தன் மேல் ஏற்றிக் (தாங்குபவன் கொள்பவன். வரவேற்கும் மாதவத்தோன். பாரத்தை (வினைச்சுமை) இறக்கியவன். வந்தவன் தவக் கோலத்தில் புதியவன்: வரவேற்பவன் தவக் கோலத்தில் பழைமையன். வந்தவன், இந்நிலைக்குப் புத்தடியான்: இருந்தவன், பழவடியான், வந்தவன் நோக்கம், இராமபிரான் இருக்கும் இடம் சென்று சேர்வது. இருந்தவன், இராமபிரானை ஏற்கனவே வரவேற்று உபசரித்த பழக்கத்தினன். ஆகையால், இவன் நோக்கம், வந்தவனை வரவேற்று உபசரித்து இராமபிரானிடம் அனுப்பி வைப்பது.

**வருதலும் வரவேற்பும்:**

'பரத்தின் நீங்கும் பரத்துவன் என்னும் பேர்
வரத்தின் மிக்கு உயர் மாதவன் வைகுஇடம்;
அருத்தி கூர, அணுகினன்; ஆண்டு அவன்
விருத்தி வேதியரோடு எதிர் மேவினான்.' (2374)

பரத்தின் நீங்கும் பரத்துவன் வைகும் இடத்துக்கு. பாரத்தைத் தாங்குபவன் (பரதன்) ஆசையோடு வந்தான் என்ற நயம்பட, கவிதை அமைந்துள்ளது. பாரம் நீங்கியவனோ. (வினைச் சுமை நீங்கிய பரத்துவாச முனிவன்) பாரத்தைத் தாங்குபவனை, வேதியத் தொழில் சுமையை உடையவரோடு வந்து வரவேற்றான். எதிர்மேவினான்— எதிர்கொண்டு வரவேற்றான். அரண்மனை, ஆசிரமத்தை நாடியுள்ளது. அதனால் நல்ல வரவேற்பு.

---

பரம்-பாரம்: (வினைச்சுமை) அருத்தி-ஆசை

விருத்தி-தொழில்: ஓதல் ஓதுவித்தல் முதலிய ஆறு தொழில்)

தன்னை வரவேற்க வந்த மாதவத்தினனான பரத்துவாசனை முதலில் வணங்கினான் பரதன். எப்படி? 'தந்தை ஆம் எனத் தாழ்ந்து வணங்கினான்' என்பது, கவிதை தரும் விடை. பரதன் உள்ளத்தில் தந்தை தசரதன், எவ்வளவு அன்புடையவனாக மதிக்கப்பட்டுள்ளான் என்பதற்கு எடுத்துக்காட்டு. பரத்துவாசனது முதிர்ந்த கோலம், பரதனுக்கு, தன் தந்தையின் திருவுருவத்தைத்தான் நினைவூட்டியுள்ளது. அதனால், தந்தையாகவே கருதி, முனிவனை வணங்கினான் பரதன். இந்தப்பரதநம்பி, தந்தையால் மைந்தன் அல்ல என்று வெறுக்கப்பட்டாலும், இவன் தன் தந்தையிடத்தில் எவ்வளவு அன்புடையவன் என்பதைக் கவிச்சக்கரவர்த்தி ஆங்காங்கு காட்டிச் செல்வான்.

தன்னை வணங்கிய பரதனுக்கு முறைப்படி ஆசிகள் வழங்கினான் ஆசிரமத்து முனிவன். ஆசிக மொழி வழங்கிய முனிவனுக்கு, வந்திருப்பது பரதன் என்று தெரியும். ஆனால், இந்தத் தவக் கோலத்தோடும் பெரும் படைகளோடும் வந்திருப்பது எதற்கு என்பது தெரியாது. தெரியாததைத் தெரிந்து கொள்வதற்குப் பரதனிடமே விசாரித்தான் பரத்துவாசன். எப்படி?

'எடுத்த மாமுடிசூடி நின்பால் இயைந்து
அடுத்த பேர்அரசு ஆண்டிலை; ஐய!நீ
முடித்த வார்சடைக் கற்றையை மூசுதூசு
உடுத்து நண்ணுதற்கு உற்றளது யாது' என்றான்
(2376)

'நீ தலையின் அரச முடி சூடி, இடையில் பொன்னாடை புனைந்து சிம்மாசனம் ஏறி ஆட்சி செய்ய

---

வார்-நீண்ட: மூசு-மொய்த்த: தூசு-ஆடை. (மரவுரி)

வேண்டியவன். அவ்வாறு செய்யாமல், தலையில் சடாமுடி தரித்தும், இடையில் மரவுரியைத் தரித்தும் தவக்கோலத்தோடு வந்ததன் காரணம் யாது? அரச கோலம் அவக் கோலம் எனக் கருதி அகற்றினையோ? துறவுக் கோலமே நம் உறவுக் கோலம் எனத் தாங்கினையோ? யாது நும் நோக்கம்' எனக் கேட்டான் பரத்துவாச? மாதவத்தோன். இதற்குப் பரதன் அளித்த பதில், கேள்வி கேட்ட பரத்துவாசனைத் திகைப்பில் ஆழ்த்தியது: மகிழ்ச்சி பெருக வைத்தது. உள்ளம் குளிரவைத்தது.

**பரதன் பதில் :**

"சினக்கொடுந் திறல்சீற்ற வெந்தீயினான்,
மனக்கடுப்பினன், மாதவத்து ஓங்கலை,
'எனக்கு அடுத்தது இயம்பிலைநீ' என்றான்:
'உனக்கு அடுப்பது அன்றால் உரவோய்' என்றான்."
(2377)

"மறையின் கேள்வற்கு மன்இளந் தோன்றல், 'பின்,
முறையின் நீங்கி முதுநிலம் கொள்கிலேன்;
இறைவன் கொள்கிலன் ஆம்எனின், யாண்டுஎலாம்
உறைவென் கானத்து ஒருங்குஉடனே" என்றான்.
(2378)

பரதன் பதில் கோப உணர்வுடன்தான் புறப்பட்டது. பதில் தெளிவானதுதான்! ஆனால், அது தோன்றிய வேகம், கோப உணர்வை வெளிப்படுத்தியது. ஏன் கோபம்.

உள்ளத்தூயோனான முனிவனுக்கு, எதிரில் நிற்பவனது உளப்பாங்கை அறிந்து கொள்ளும் ஆற்றல் உண்டு. அப்படியிருந்தும், பரதன் உள்ளத்தைப் புரிந்து கொள்ளாமல் இம்முனிவன் இப்படி

---

சீற்றம்–கோபம்: மறை-வேதம்: இறைவன்-இராமன்: ஓங்கல்-மலை.

ஒரு கேள்வி கேட்டு விட்டானே? என்ற எண்ணத் தால்தான் பரதன் உள்ளத்தில் கோபம் வந்தது.

அதனால்தான், மிகமிகக்கடுமையான கோபத் தீயினன் ஆனான் பரதன்: முனிவன் மேல் வெறுப் பினனாகவும் ஆனான் இவன். பரதனுக்கு எதிரில் நிற்பவன் மாதவத்து ஓங்கல். தவத்தின் ஆற்றலால் மலை போன்ற உயர்வும் பெருமையும் பெற்றவன் பரத்து வாசன்.

அந்த மாதவத்து, மலையைப் பார்த்து, மாதவக் கோலத்தினனான பரதன், 'முனிவா! நீ கேட்டது, எனக்கு அடுத்ததும் (பொருத்த மானதும்) அல்ல! உனக்கு அடுத்ததும் அல்ல!' என்று முதலில் தனது கோப உணர்வுடன் பேச்சைத் தொடங்கினான், 'நீ உரவோய்! (எதனையும் சொல்லாமலேயே, கேட்டுத் தெரிந்து கொள்ளாமலேயே அறிந்து கொள்ளும் அறிவாற்றல் பெற்றவன்) இப்படிக் கேட் கலாமா? கேட்டபிறகு பதில் சொல்லாமல் இருக்க லாமா? சொல்கின்றேன்' என்று தனது பேச்சுக்கு ஒரு முன்னுரை வகுத்துக் கொண்டான் பரதன்.

தேவநாயகனான இராமபிரானுக்குத் தம்பி யாகத் தோன்றியவன் இந்தப் பரதன். அதனால், 'தம்பியாகிய நான், அரச முறை நீங்கி, ஆட்சியை ஏற்றுக் கொள்ளமாட்டேன். இராமபிரான் இந்தக் கோசலப் பேரரசுக்கு உரிமையும் தகுதியும் உடை யவன்: உரிமை உள்ளவனிடத்தில் இதனை ஒப்ப டைக்க வந்தேன். இது, எனது வருகையின் நோக்கம்'.

'ஒரு வேளை எனது நோக்கம் நிறைவேற்றப் படாது போனால், நானும் துறவியாக நின்று இராமபிரானுடன். சேர்ந்து கானகத்திலேயே வாழ் வேன், அதற்குத்தான் இந்தத் தவக் கோலம் இது, எனது குறிக்கோள்; என்று கருத்தைத் தெளிவாக் கினான் பரதநம்பி.

**உள்ளம் குளிர்ந்தது:**

'உரைத்த வாசகம் கேட்டலும், உள்எழுந்து
இரைத்த காதல் இருந்தவத் தோர்க்குஎலாம்
குரைத்து மேனியொடு உள்ளம் குளிர்ந்ததால்
அரைத்த சாந்துகொடு அப்பியது என்னவே' (2379)

தன் வருகையின் நோக்கத்தையும். தவக் கோ லத்தின் குறிக்கோளையும் இன்னது என்று பரதன் தெளிவு படுத்தியதைக் கேட்டனர் பரத்து வாசன் முன்னிட்ட ஆசிரமத்தில்இருந்தமுனிவர்அனைவரும். உடனே தங்கள் உள்ளம் குளிரப் பெற்றனர், எவ்வளவு குளிர்ச்சி கல்லில் இட்டு நன்றாகஅரைத்த சந்தனத்தை அப்பினால், உடம்பு எவ்வளவு குளிர்ச்சி அடையும். அவ்வளவு குளிர்ச்சி முனிவர் களது உள்ளத்துக்கு. பரதன் கூறிய பதில், முனிவர்கள் உள்ளத்துக்குப் பூசும் சந்தனமாயிற்று.

ஆசிரமத்துமுனிவர்கள்,முன்புஇராமபிரானைக் கண்டு, அப்பெருமானிடம் பேரன்புகொண்டவர்கள். அத்தகைய உள்ளங்களுக்குச் சந்தனம் பூசியது போன்றதாயிற்று பரதன் உரைத்த பதில் இதன் கருத்து என்ன? இராமபிரானைக்கண்டு தரிசித்துப் பெற்ற மகிழ்ச்சியினும்; பாத தரிசனத்தாலும், பேச்சாலும் பெற்ற மகிழ்ச்சி, மிகுதியானது என்பது பொருள்.

---

குரைத்தல்-பூரித்தல்.

இங்கு, கோசுவாமி துளசிதாசர் தமது இராம காவியத்தில் கூறியுள்ள கருத்து சிந்திக்கத்தக்கது.

பரத்து வாசர், தமது ஆசிரமத்துக்கு வந்த பரதனைப் பார்த்துக் கூறுவது. பரதா! இங்கு இராமர் தங்கியிருந்த இரவு முழுவதும் உன்னைப் புகழ்ந்து புகழ்ந்து கழிந்தது. இராமருக்கு உன் மீது அவ்வளவு விருப்பம் உண்டு. நான் உன்னை இராமரின் அன்பே உருவெடுத்து வந்துள்ளது போன்று கருதுகின்றேன். இராம பக்தியாகிய இரசத்தைப் பெறும் வாய்ப்பு இப்பொழுது'தான் தொடங்குகின்றது. உன்னுடைய புகழ் களங்கமற்ற புதிய சந்திரனாகும். இராம பக்தர்கள் அதைக் கண்டு மகிழும் குமுதமும் சகோதரப் பறவைகளும் ஆவர் ......... நான் காட்டில் வாழும் பற்றற்ற துறவி. எனக்கு இராமர், சீதை, இலக்குமணர் இவர்களுடைய காட்சி கிடைத்தது, எல்லாச் சாதனைகளின் சிறந்த பயன் கிட்டியதாகும். அந்தப் பலன் கிடைத்ததன் பயனாகத்தான் உன்னுடைய காட்சி கிடைத்தது இப்பொழுது. இதனால் நானும் இப் பிரயாகைத் தீர்த்தமுமே பெரும் பேறு பெற்றோம். உலகில் இவ்வளவு புகழ் தேடிய நீ பெரும் பேறு பெற்றவனானாய்' என்று கூறி முனிவர் அன்பில் மூழ்கினார். +

இது, இராமதரிசனத்தினும், பரத தரிசனம் முனிவர்களது உள்ளங்களை அதிகம் மகிழ்வித்தது என்பதனை உறுதிப்படுத்துகின்றது.

பரதனைப் புரிந்து கொள்ளாமல், பரத்துவாசன் இக்கேள்வியைக் கேட்டானா? புரிந்து கேட்டானா?

---

+ இராம சரித மானஸ் என்னு இராமாயணத்தின் சுருக்கம். மொழி பெயர்ப்பு. திரு. தி. வேங்கட கிருஷ்ணயங்கார் பக்-240-241,

என்பது ஒரு கேள்வி. அவ்வளவு பெரிய திரி காலம் உணரும் ஞான முனிக்கு இது தெரியாமலா இருக்கும். தெரிந்திருந்தால், பின் ஏன் கேட்டான் முனிவன்.

இதனைக் தெளிவு படுத்துகின்றார், திரு. கே.எஸ். ஸ்ரீனிவாஸன் அவர்கள் தமது காவ்ய ராமாயணம் என்ற நூலில். அது, வால்மீகி இராமா யணத்தை ஒட்டிய கருத்தாகும்.

பரதனது பதிலைக் கேட்டு, மகிழ்ந்த முனிவர், 'இது வல்லவோ உன் குலத்தோருக்கு அழகு! உன் மனம், உறுதியாயிருக்கிறதாவென்று பார்க்கவே அப்படிச் சொன்னேன்' என்று கூறி ஆசீர்வதித்து அனுப்புகின்றார். +

உலகப் பற்றற்ற உத்தம முனிவர்களது உள்ளங் களையும் வியப்பில் ஆழ்த்தும் அளவிற்கு, பரதனது தூய எண்ணம் உயர்வுடன் வளர்ந்திருக்கிறது. இதனையார் யாரெல்லாம் கேட்கின்றார்களோ அவர்களது உள்ளங்களும் மகிழ்ச்சியினால்குளிர்ச்சி பெறும்.

---

+ காவ்யராமாயணம். பக் 75.

# (13)

# செம்மையின் ஆணி

## ஆசீர்வாதப் பயன்:

மனிதன் தனது முயற்சியால், எடுத்துக் கொண்ட காரியத்தில் வெற்றி பெறலாம். அந்த வெற்றி முழுமையானதாக நிரந்தரமானதாக இருக்க வேண்டுமானால் அதற்குப் பெரியவர்களது ஆசீர்வாதம் வேண்டும். ஆசீர்வாதம் கலந்த வெற்றி, சிறப்புடையதாக அமையும். அந்த ஆசீர்வாதத்தை, குடும்ப வாழ்க்கைப் எரியோர்களும் வழங்கலாம். அதைவிட எந்தவிதமான, உலகப் பற்றும் இல்லாத-ஆசாபாசங்கள் அனைத்தையும் அறவே அகற்றிய துறவிகள் மூலம் பெறும் ஆசீர்வாதம் மேலும் பயன் தருவதாக அமையும்.

அந்த ஆசீர்வாதமும், கேட்டுப் பெறாமல், வழங்குபவர், தானாகவே முன் வந்து அன்புளத்துடன் அவரால், செய்யப்படுமானால். அதனுடைய நற்பயன் உடனடியாகக் கிடைக்கும். அப்படி, பரதனது பெருங்குணத்தைக் கண்டு மாதவத்தோனாகிய பரத்துவாசன், தானாகவே பரதனுக்கு ஆசிகள் வழங்கியுள்ளான். அதன் பலன் உடனடியாகப் பரதனுக்குக் கிடைத்தது.

பலன், கைப் பொருளாகவும் வரலாம்: காதர்ல் கேட்கும் புகழ் மொழிகளாகவும் வரலாம். கைப் பொருள் அநித்தியமானது: புகழ் மொழி நித்திய மானது. அதனால் புகழ் மொழியே சிறந்தது. அந்தப் புகழ் மொழியும், தன்னை விடத்தாழ்ந்தவர் தன்னை ஒப்பவர், இவர்கள் மூலம் வருவதைக் காட்டிலும், தன்னைவிட மேலானவர் மூலம்வந்தால் அது, ஏற்றம் பெற்றதாக அமையும்.

மேலோரால் கூறப் பெறும் புகழ் மொழியும், நேருக்கு நேராக இல்லாமல், புகழுக்குரியவன் இல்லாத விடத்தில் அமையுமானால், அது மேலும் சிறப்புடையதாகும். புகழுக்குரியவன் இல்லாத இடத்திலும், அவனை யார் பகைவனாகக் கருதி இகழ்கின்றாரோ அவர் முன்னிலையில் பேசப்படு மானால், அந்தப் புகழ் மொழி பன் மடங்கு மேம் பட்டதாகும்.

அத்தகைய மேம்பட்ட புகழ் மொழி, பரதனுக் காகத் தோன்றுவதற்குரிய சூழ்நிலை உருவாகின் றது சித்திர கூடத்தில்.

## இலக்குவன் சீற்றமும் மாற்றமும்:

பரத்து வாச முனிவனது நல்லாசியைப் பெற்றுக் கொண்டு, ஆசிரமத்தை விட்டுப் புறப்பட்ட பரதன், தன்படைகளுடன் சித்திரகூடத்தை நோக்கி விரைந்தான். இராமபிரானைக் காணவேண்டும் என்ற ஆர்வத்தினால் நடை வேகமாயிற்று. படை களின் வேக நடை புழுதியைக் கிளப்பிக் கொண்டு சென்றது. சித்திர கூட வழியில் கிளம்பிய புழுதி, சித்திர கூட மலையில் ஒருவன் உள்ளத்தில் கோபப்

புயலைக் கிளப்பி விட்டுவிட்டது. அப்படிக் கிளப்பி விடப்பட்ட கோபப் புயலினன் யார்? அவன் உள்ளத்தில் கோபம் புயலாகக் கிளம்பியது ஏன்?

கோபப் புயலினன், இராமபிரானோடேயே, என்றும் எங்கும் ஒன்றியிருந்து அணுக்கத் தொண்டனாய்க் குற்றேவல் செய்யும் தம்பி இலக்குவன் ஆவான். 'வடக்கேயிருந்து இவ்வளவு பெரும் படையுடன் வருவது பரதனாகத்தான் இருக்க வேண்டும் பரதன், பெரும் படை கொண்டு வருவது இராமபிரானோடு போர் செய்வதற்காகத்தான் இருக்க வேண்டும்'. என்ற ஒரு தவறான எண்ணம் இலக்குவன் உள்ளத்தில் தோன்றிவிட்டது. எல்லாம் தூரப் பார்வையின் கோளாறுதான். அதனால், பரதன்மேல் கோபமாக வடிவெடுத்தது அவ்வெண்ணம்.

கோபம் என்ற ஒரு கொடிய உணர்வு, உள்ளத்தில் நுழைந்து விட்டால், அது, வாய் வந்தன எல்லாம் கூறத்தான் செய்யும்! மறைந்த நாவாகயிருந்தாலும் உள்ளத்துச் சீற்றம், ஏற்றம் அற்ற மாற்றங்களையே (வார்த்தைகள்) அள்ளிக்கொட்ட செய்யும்:

அதுவும், தன்னால் அன்பு செலுத்தப்படுபவருக்கு ஆபத்து வருகிறது என்றால், அதனைத் தடுக்க வரும் கோபம், அளவுக்கு மீறியதாகத்தான் இருக்கும் படைகளைக் காண்பதற்கு, இலக்குவன் சித்திர கூடத்து மலை உச்சியில் ஏறி நின்றான் கண்டதும் அவன் உள்ளமும் கோபக்குன்று ஏறியது.

குணம் என்னும் குன்றேறிநிற்கும் பரதநம்பியை, தம்பி இலக்குவன், கோபம் என்னும் குன்றேறிய உள்ளத்தினனாய்க் காண்கின்றான்.

---

குன்று — மலை

பரதன் மேல் கொண்ட கோபத்தினால் இலக்குவன் கொட்டித்தள்ளிய வார்த்தைகள் இருபது கவிதைகளாக விரிந்துள்ளன. துறவுக் கோலத்தில் இராமபிரானுக்குத் தொண்டு செய்ய வந்த இலக்குவன், இப்போது, தன் அண்ணனுக்கு உதவுவதற்குப் போர்க் கோலம்தான் பூண வேண்டும், என அக் கோலத்தினன் ஆனான்.

துறவுக் கோலம், மென்மையும் இனிமையும் அன்பும் கலந்த பேச்சினையே பேசச் செய்யும் போர்க்கோலமோ. வன்மையும் கொடுமையும் வெறுப்பும் நிறைந்த கோபப் பேச்சினைத்தான் பேசச் செய்யும். ஆனால், அத்தோடு வீரமும் பெருமிதமும் கலந்திருக்கும்.

அப்படித்தான் அமைந்தது, இளைய பெருமாளின் இப்போதைய பேச்சு. இராமபிரான் கானகம் வந்ததற்குக் காரணம் மூவர் என்று கணக்கிடுகின்றான் இந்த இளையவன். ஆனால், இது எதனால் நடந்தது என்று ஆராயும் அறிவினனாக இல்லை இலக்குவன். ஏன்? தன் அண்ணன் மேல் கொண்ட அன்பு, ஆராயும் எல்லா அறிவையும் அடக்கிவைத்து விட்டது. இராம பக்தி - அண்ணன்பால் கொண்ட அன்பு ஒன்றே, இலக்குவன் உள்ளத்தை ஆட்கொண்டு நின்றது. அதனால்,

> **"ஒருமகள் காதலின் உலகை நோய்செய்த**
> **பெருமகன் ஏவலின், பரதன் தான்பெறும்,**
> **இருநிலம் ஆள்கைவிட்டு இன்று,என் ஏவலால்**
> **அருநரகு ஆள்வது காண்டி-ஆழியாய்."** (2413)

என்று கூறும் அளவுக்குத் துணிந்துவிட்டான் இலக்குவன்.

---

ஒருமகள்-கைகேசி: பெருமகன் - தசரதன்:

தன் அன்புத்தெய்வமாக விளங்கும்அண்ணனை 'ஆழியாய்' என்று அழைத்து தான் செய்யப் போகும் காரியத்தைப் பற்றிச் சொல்கின்றான் இந்த இளைய வீரன். அண்ணனாகக் கருதும் போது, 'ஆழி' என்பது, ஆணைச்சக்கரம் என்று பொருள். 'நீதான் கோசல நாட்டுச் சிம்மாசனத்தில் அமர்ந்து ஆணைச்சக்கரம் செலுத்த வேண்டியவன். அதனைப் பறித்தவன் இந்தப் பரதன்: அதற்கு உடந்தையாக யிருந்து சூழ்ச்சி செய்தவர் அவனுடைய தாய் கைகேசியும். தந்தை தசரதனும் ஆவர்: அவரவர்கள் செய்யும் காரியங்களுக்கு ஏற்ப அவரவர்களுக்குத் தண்டனை கிடைக்கும் தசரதன் உயிர் நீத்து, தண்டனையைப் பெற்றுக் கொண்டு விட்டான்: இப்போது, இங்கு உன்னோடு போரிடவந்திருக்கும் இந்தப் பரதனை நரகத்துக்கு நான் அனுப்பப் போகின்றேன்' என்றகருத்தில் பேசினான் இலக்குவ வீரன்.

ஆழியாய்—இராமபிரானுடைய முன்னைய நிலையை வைத்துக் கவனித்து. (நாராயணன்) இதற்குப்பொருள் காண்பதானால், 'சக்கராயுதத்தை ஏந்தியவனே' என்று பொருள் கொள்ள வேண்டும். 'மழுங்காத சக்கர நல்வலத்தன்' (நாராயணன்) இப்போது அந்தச் சக்கராயுதத்தை மறைத்துக் கொண்டு இராமபிரானாக அவதாரம் செய்துள்ளான். பக்தர்களுக்குப் பகைவர்களாக வருபவர்களை அழித்து, பக்தர்களைக் காக்க முன் வந்து நிற்பது இந்தச் சக்கராயுதம். (ஆழி)' தொழுங் காதல் களிறு அளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினான்' என்பது நம்மாழ்வார் அனுபவம்.

---

ஆழிசக்கரம்:

அந்தச் சக்கரத்துக்குச் 'சுதர்சனம் 'என்று பெயர். பரதன் சுதர்சன அம்சம்: இலக்குவன் ஆதி சேடன் அம்சம்: சத்துருக்கன் வலம்புரிச் சங்கு அம்சம். 'உன் கையிலிருந்த சுதர்சனமே, இப்போது பரதனாகத் தோன்றிய பிறகு, உன்னோடு போர் செய்ய வந்திருக்கின்றது: நீ என்ன கட்டளையிடுகின்றாயோ, அதனைத் தன் தலை மேல் ஏற்று, உனக்குப் பணி செய்ய வேண்டிய இந்தச் சுதர்தசனம், உன்னை எதிர்க்க வந்திருக்கின்றது என்றால் அதனை எப்படிப் பொறுப்பது? என்று, பூர்வாசிரம நிலையை நினைத்து இவ்வாறு பேசினான் என உட்பொருள் காணும் நிலையில் அமைந்துள்ளது 'ஆழியாய்' என்ற சொல்.

'தசரதன், பெருமகன் தான்! (பெரியவன்) ஆயினும், கைகேசியின் மேல் கொண்ட ஆசையினால் (ஒருமகள்காதலின்) உலக மக்களுக்கே, எதிர்பாராத ஒரு பெரும் துன்பத்தைக் கொடுத்து விட்டானே! (உலகை நோய் செய்த) உலகைப் பெருந்துன்பத்தில் ஆழ்த்திய அந்தப் பாவியின் (ஏவல்) ஆணை-கட்டளையினால்தானே இந்தப் பரதன் (இரு நிலம்) கோசல நாட்டை ஆள எண்ணியுள்ளான். இப்போது (என் ஏவலால்) எனது அம்பின் ஏவுதலால். அந்தப் பரதன் அருநாடு ஆளப் போகின்றான். இதை இப்போது நீ பார்க்கப் போகின்றாய்' என்று ஆணித்தரமாகப் பேசினான். யார்? தம்பி இலக்குவன் யாரைபார்த்து? தன் அண்ணன் இராமனைப் பார்த்து. இவ்வளவும் முழுமையாகத் தவறானவை தான்!

ஒருவரை அணுகிநின்று பார்த்தால், அவரது குணம் உள்ளபடி விளங்கும். தூரத்தில் நின்று நடந்த சூழ் நிலையை மட்டும் மனத்தில் வைத்துக் கொண்டு. உலகியல் செயல்களாகக் கருதிப் பார்த்தால், எண்ணம் தவறானதாகத்தான் இருக்கும். அத்தகைய தவறான எண்ணத்தினன் ஆனான் இலக்குவன் இப்போது. எவன் ஒருவன், இராமபக்தியினால் உந்தப் பெற்று, புனிததவக் கோலம் தாங்கி, வந்த அரசு, தீவினைப்பயன் எனக்கருதி அதனை இராமபிரான்னிடமே திருப்பிக் கொடுக்க வருகின்றானோ, அந்தப் புனிதனை. பாவியாகக் கருதினால், அது எவ்வளவு பெரியதவறு.

வந்த பரதன் எந்த வகையிலும் தவறு செய்தவன் அன்று, தவறே செய்யாத புண்ணியப் பரதனைப் பாவியாகக் கருதி, வேண்டாத வெறுப்புப் பேச்சுகளைப் பேசிய இலக்குவனே இப்போது, தவறியவன்: பாவி. பாவத்துக்குத் தண்டனை உண்டு. தவறு, பிறகு திருத்தம் பெறும்.

இலக்குவன், தான் பரதனைப்பற்றிஎண்ணியது மிகமிகத் தவறானது என்பதை உணர்ந்தான் பிறகு. அறிந்த போதுதான், அறியாமைதானே வெளி ஏறும். அதுவரை, தானே மனித உள்ளத்தை ஆட்சி செய்யும் இந்த அறியாமைப் பேய். பேய் பிடித்தவன் பேச்சு வெறும் பிதற்றலாகத்தானே இருக்கும்? அதனைப் பெரியோர்கள் கேட்பார்களா? கேட்கமாட்டார்கள். ஆனால் அன்புள்ளவர்கள் கேட்பார்கள்? கேட்டு, பிதற்றலைத் திருத்துவார்கள்.

அப்போது, தவறு. திருந்தும்: அறியாமை அகலும். அத்தகைய திருத்தம் பெற்றான் இலக்குவச் செம்மல். திருந்திய பிறகு, பரதன் இல்லாத நேரத்தில், இதே இராமபிரானிடத்தில் பண்புப் பரதனை எவ்வளவு உயர்வாகப் பேசியுள்ளான். அந்தப் பேச்சு, இலக்குவனது மாற்றத்துக்கு எடுத்துக் காட்டு.

இலங்கையில் கடுமையான போர். இந்திரசித்தன். தனது மாயையை முன்னிறுத்திக் கொண்டு தன் போர் வன்மையைக் காட்டிக்கொண்டுள்ளான். அத்தகைய மாயைச்செயல்களுள் ஒன்றாக 'அயோத்தியில் உள்ள பரதனையும் கொல்லப் போகின்றேன்' என்ற கருத்தை வெளியிட்டது. இதனைக் கேள்வியுற்ற இராமபிரான், 'பரதனைக் காக்க அயோத்திக்குச் செல்ல வேண்டுமே எப்படிச் செல்வது?' என்று அதற்குரிய வழிமுறைகளைக் கேட்டான். அப்போது இலக்குவன், பரதனைப் பற்றிக் கூறுகின்றான்.

'ஐயனே! பரதனைப் போரில் வெல்வதற்கு, இந்த இந்திர சித்தனால் முடியாது. ஏன்? மூன்று உலகங்களும் சீறிவந்தாலும் பரதனை வெல்லமுடியாது. இந்திரசித்தன்தான் பரதனால் அடிபட்டு எமன் உலகு செல்லப் போகின்றான் இது உறுதி' என்று கூறி அண்ணனைத் தேற்றினான் தம்பி இலக்குவன். 'ஐய! பரதனைப் போரில் ஆர்க்க எவ்விடற்கு உரியான் போன இந்திரசித்தே அன்று; தெவ் இடத்து அமையின், மும்மை உலகமும் தீந்தறாதோ? வெவ் இடர்க் கடலின் வைகல்: கேள்' என விளம்பலுற்றான்.

---

வெவ் இடர்- கொடியதுன்பம்: வைகல் - தங்காதே. தீந்து அறுதல் - அழிந்து ஒழிதல்: தெவ் இடம்-பகைப் புலம்.

"தீக்கொண்ட வஞ்சன் வீச,
திசைமுகன் பாசம் தீண்ட,
வீக்கொண்டு வீழ, யானோ
பரதனும்? வெய்ய கூற்றைக்
கூய்க்கொண்டு, குத்துண்டு, அன்னான்
குலத்தொடு நிலத்தன் ஆதல்,
போய்க்கண்டு கோடி அன்றே?'
என்றனன் புழுங்கு கின்றான் (8920)

பரதன், தனது வீரத்தைக் காட்டிலும் பன் மடங்கு மேம்பட்டவன் என்பதை இதன் மூலம் உணர்த்துகின்றான் இலக்குவன். ஏன்? தனது வீரத்தோடு பரதன் வீரத்தை ஒப்பிட்டுப் பார்ப்ப தால்.

இலக்குவன், இந்திர சித்தன் விட்ட நாகபாசத் தால் கட்டுண்டு கீழே வீழ்ந்தான். 'பரதன், இந்திர சித்தன் விடுவ'தாகக் கூறிய பிரம்மாத்திரத்தையே முறியடிக்கும் ஆற்றல் பெற்றவன், இந்த வன்மை யான பிரம்மாத்திரத்தை விடப் போகின்ற இந்திர சித்தன்தான் பரதனால் குத்துண்டு சாகப் போகின் றான்? என்று பரதனின் வீரத்தைப் பாராட்டிப் புகழ்ந்து பேசுகின்றான் இளைய வீரன். 'அதனால் நீ பரதனைப் பற்றிக் கவலைப்படவேண்டாம்' என இராமபிரானுக்குத் தேறுதல் மொழியும் கூறினான் திருத்தம் பெற்ற இலக்குவன்.

---

தீக்கொண்ட - தீமையைக் கொண்ட: திசைமுகன் பிரம்மன்: கூற்று - எமன்: கூய்க்கொண்டு- கூவிக்கொண்டு.

திருச்சித்திர கூடத்தில், அவ்வளவு வேகமாக. கோபமாகப் பரதனைப் பற்றிப் பேசிய இலக்குவன், போர்க்களத்தில் இவ்வளவு மாற்றம் பெற்றவனாய்ப் பேசியது எப்படி? மாற்றத்துக்குக் காரணம் என்ன?

**இராமபிரான் அறிவுரை :**

சினம், நெருப்பு போன்றது.

"சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்
ஏமப் புணையைச் சுடும்" (குறள் 306)

என்று, சினத்தீ எப்படிச் சுடும் என்பதை வள்ளுவம் தெளிவாகக் கூறுகின்றது.

தீ ஒரு இடத்தில் தோன்றினால், அதனை உடனே தண்ணீர்விட்டு, அவிக்கவேண்டும்: இல்லை என்றால் பிற இடத்தில் பரவி எல்லாவற்றையும் அழிக்கும். சினத்தீயை எப்படி அவிப்பது? "அறிவு என்னும் நீரால் அவித்து ஒழுகலாற்றின் பிறிது ஒன்றும் வேண்டாதவம்."

இலக்குவன் உள்ளத்தில் சீற்றத் தீ கொழுந்து விட்டு எரியத் தொடங்கிவிட்டது. அதனைக் கண்டான் இராமபிரான். உடனே, தனது அறிவாகிய நீரை அங்கு செலுத்தி, அந்தச் சீற்றத் தீயை அணைக்க முயன்றான் இராமபிரான். தம்பி இலக்குவனிடம் அம்முயற்சிக்கு வெற்றியும் கிடைத்தது.

"இலக்குவ! உலகம்ஓர் ஏழும் ஏழும்,நீ,
"கலக்குவென்" என்பது கருதி னால்,அது,
விலக்குவது அரிது: அது விளம்பல் வேண்டுமோ?
புலக்குஉரித்து ஒருபொருள், புகலக் கேட்டியால்."
(2416)

---

புலக்கு—புலனுக்கு, அறிவுக்கு: விளம்பல்—சொல்லுதல்.

என்ற முன்னுரையோடு தனது அறிவுரையைத் தொடங்கினான் இராமபிரான். கோப உணர்வினனை அறிவுரையைக் கேட்கவைக்க வேண்டுமானால், முதலில் அவன் செயலைப் பாராட்ட வேண்டும். இது, உள இயல் தத்துவம். இத்தத்துவப்படி, 'இலக்குவ! கலக்குவது கருதினால், அதுவிலக்குவது அரிது' என்று இராமபிரான், இலக்குவனது வீரச் செயலைப் பாராட்டினான். ஆனால், அறிவுகொண்டு ஆராய்ந்து பார்க்கக் கூடியது ஒன்று உண்டு, அதனை நான் சொல்கின்றேன். நீ அதனைக் கவனமாகக்கேள்' என்று சொல்லி, பரதனது இயல்பை விரிவாக விளக்கத் தொடங்கினான் இராமபிரான்.

கோபம் மனத்தில் எழும் ஒருகொடிய உணர்வு, இது, அறிவு ஆராய்ச்சிக்கு இடம் கொடுக்காது: அறிவை அடக்கும்: தான் அடங்காது. அடங்கும், எப்போது? எதற்காக அக்கோபம் தோன்றியதோ, அந்தக் காரியத்தை முடித்த பிறகு. இப்போது, இலக்குவன் உள்ளத்தில் எழுந்த சீற்றம், சித்திர கூடம்வரும் பரதனை, அப்படையுடன் அழிக்கும் நோக்கம் கொண்டது. இந்நோக்கம் நிறைவேறுமா? நிறைவேறவில்லை. ஆனால் கோபத் தீ அடங்கியது. எப்படி? இராமன் கூறிய அறிவு நீரால் அந்தக் கோபத் தீ அவித்து அடக்கப் பெற்றது.

'தம்பி! நம் இரகு வம்சத்தில் தோன்றியவர் யார் தவறு செய்தவர்? தருமம் நீங்கியவர் நம் குலத்தினர் ஒருவரும் இல்லை. அப்படியிருக்க, நம் குலத்து உதித்த பரதன் மட்டும் எப்படித் தவறு செய்பவனாவான்? யாரைத் தவறு செய்பவன் என்று கூறுகின்றாயோ அந்தப் பரதன்தான் நம் குலத்தினர் யாரினும் உயர்ந்தவன்.

'எனைத்துஉள மறை அவை இயம்பற் பாலன;
பனைத்திரள் கரக்கரிப் பரதன் செய்கையே;
அனைத்திறம் அல்ல அல்ல; அன்னது
நினைத்திலை, என்வயின் நேய நெஞ்சினாய்?
(2418)

'பரதன் எவ்வளவு உயர்ந்தவன் தெரியுமா? வேதத்துக்கு எவ்வளவு உயர்வுண்டோ? அவ்வளவு உயர்வு பரதனுக்கு. ஏன்? வேதம் என்ன நீதிகளைச் சொல்லுகின்றதோ அவ்வளவும் பரதனிடம் உண்டு. பரதன் செயல்களுக்கு அப்பாற்பட்டு வேறு எதையும் வேதம் சொல்லவில்லை வேதத்தில் சொல்லப் பட்டுள்ள அறவுரைக்கு ஒரு எடுத்துக்காட்டு வேண் டுமானால் பரதனிடம்தான் வரவேண்டும். பரதன் ஒருவனே, நீதி நெறிக்கு இலக்கியமாக நிற்பவன். வேதம் தூய்மையானது. அந்தத் தூய்மைக்குத் தூய்மையானவன் பரதன்.

'இதனை நீ உணராதது, உன் குற்றம் அல்ல! நீ என் மேல் வைத்த அன்புதான், பரதனை உணர விடவில்லை.'

'தம்பி! பரதன் இப்போது இங்கு படையுடன் வருவது எதற்குத் தெரியுமா? எந்த நாட்டை அவன் அபகரித்தான் என்று நினைக்கின்றாயோ அந்த நாட்டை எனக்கே தருவதற்குத்தான் வருகின்றான். தந்து, இராஜ மரியாதையுடன் என்னை அழைத்துச் செல்வதற்துத்தான் படையுடன் வருகின்றான் பரத நம்பி, நம்பியின் வருகைக்குக் காரணம் நீ நினைத் தது அன்று.'

'சேண் உயர் தருமத்தின் தேவை, செம்மையின்
ஆணியை, அன்னது நினைக்கல் ஆகுமோ?
பூண் இயல் மொய்ம்பினாய்! போந்தது ஈண்டு.எனைக்
காணிய: நீ இது பின்னும் காண்டியால்.' (2421)

---

நேயம்-அன்பு

என்று. பரதன் இயல்பினை, இப்போதைய வருகையை மேலும் தெளிவு படுத்தினான் இராமபிரான்.

**தருமத்தின் தேவு :**

"பரதன் அறத்தின் வடிவினன். அறம் என்ற ஒன்று உலகத்தில் உண்டு. அது, என்றும் எங்கும் உலவும் அருவப் பொருள். அது, 'ஒரு உருவம் பெற்று உலகத்தில் உலாவ வேண்டும்: அப்போது தான் மக்கள் நம்மை உணர்வார்கள்' என நினைத்தது. அந்த நினைவினை, அறம், இந்தப் பரதன் மூலம் நிறைவேற்றிக் கொண்டுவிட்டது. அதனால், இந்த நம்பியை, பரதன் என்று அழைக்காமல் 'அறக்கடவுள்' என்றே அழைக்கலாம். தருமம் அருவமாகயிருந்தபோது, யாருக்கும் எட்டாத புரியாத மிக உயரத்தில் இருந்தது. (சேண்உயர்) அந்தத் தரும தேவதை-அறக்கடவுள் இப்போது. இந்தப் பரதன் வடிவத்தைப் பெற்றுக்கொண்டு விட்டதால், நம்மாலும் கண்டு வழிபடுதற்குரிய எளிய தெய்வமாயிற்று." 'இதனை நீ உணர வேண்டும்.'

**செம்மையின் ஆணி :**

"அதுமட்டும் அல்ல! பரதன் ஒரு ஆணி. ஆணி-உறுதி. அது ஒருகருவி. செம்மை-நேர்மை. நேர்மை என்ற ஒன்றுக்கு உறுதி தருபவன் இந்தப் பரதன். 'நேர்மை' என்பது உள்ளத்தைச் சேர்ந்த ஒரு அருவப் பொருள். அகத்தில் உள்ள ஒன்றுக்குப் புறத்தில் இருந்து உறுதி அளிப்பவன் பரதன்."

'ஆணி' அச்சாணி, உறை ஆணி என இருவகைப் பொருளில் உரைக்கப்படும்.

தேர், நன்கு அலங்கரிக்கப்பட்டுள்ளது. அவ்வளவு அலங்காரமான பெரிய தேர் ஓடுவதற்கு நான்கு பெரிய சக்கரங்கள் அமைந்து உதவுகின்றன. அந்தச் சக்கரங்களும் கடையாணி இல்லை என்றால் நகர முடியாது. சக்கரங்கள் அச்சில் சேர்க்கப்பட்டுள்ளன. சேர்ந்துள்ள அச்சில் சக்கரங்கள் உருண்டால்தான் தேர் ஓடும். அந்தத் தேர் ஓட்டத்துக்கு உதவுவது சக்கரத்தின் அச்சில் செருகப்பட்டுள்ள ஆணி. அதற்கு அச்சாணி என்றும் கடையாணி என்றும் பெயர். இது இல்லை என்றால், தேர் ஓட்டம் இல்லை. யாவரும் காணும்படியாக ஓடும் அந்தத் தேருக்கு இன்றியமையாத அச்சாணி, தன்னை அதிகம் வெளியில் யாரும் காணமுடியாதபடி சிறிய உருவத்தில்தான் இருக்கும்

செம்மை - நேர்மை என்பது உலகில் உலா வரவேண்டிய ஒரு பெரிய தேர். இதற்கு அச்சாணி போன்றவன் பரதன். பரதன் இல்லை என்றால் உலகில் செம்மை - நேர்மை என்பதையே பார்க்க முடியாது. நேர்மைக்கு ஒரு எடுத்துக்காட்டு பரதன் ?

**உறையாணி :**

'தங்கத்தின் மாற்றை உறைத்துப் பார்ப்பதற்கு உதவும் கருவிக்கு உறையாணி என்று பெயர். அந்த ஆணியில் உறைத்துப் பார்த்தால்தான், தங்கத்தின் மாற்று (மச்சம்) எவ்வளவு உள்ளது என்பது தெரியும். அதுபோல, உலகில் யார் தன்னை நேர்மையாளன் (செம்மையன்) என்று சொல்லிக் கொள்கின்றானோ, அவன் செயலின் நேர்மையை அளந்து காணும் கருவியாக உள்ளான் பரதன்.' என்பதாகும்?

**ஆணி வேர்:**

'மரம் எவ்வளவு உயரமாக யிருந்தாலும், அது, கீழே சாயாமல் இருக்க வேண்டுமானால், அம் மரத்தின் பக்க வேர்களும், அடியில் கீழ் நோக்கி வளர்ந்து கொண்டு செல்லும் ஆணிவேரும் பலமாக யிருக்க வேண்டும். மரத்தைச் சாயாமல் நிறுத்திக் கொண்டுள்ள ஆணிவேர், தன்னை வெளியில்காட்டிக் கொள்வது இல்லை. அது போல, உலகில் செம்மை நேர்மையாகிய மரம் இருக்கிறதென்றால், அது பரதனாகிய ஆணிவேரைப் பெற்றிருப்பதால்தான், செம்மை என்ற மரத்துக்கு ஆணிவேர் பரதன் என்பதாகும்.

'பரதன். தன்னை விளம்பரப்படுத்திக் கொள் ளாமல், ஆரவாரம் இன்றி அமைதியுடன் இராம கைங்கர்யம் செய்பவன். நீ ஆரவாரத்தோடு அக் கைங்கர்யம் செய்பவன். என்பது கருத்து. இப்படிப் பட்ட உயர் பண்பாளனாகிய பரதனை நீ தவறாக மதிப்பிடலாமா? நீ வேண்டுமானால் பார்: அவன் என்னைக் காண்பதற்குத்தான் வருகின்றான். போந்தது, ஈண்டு எனைக் காணிய: நீ இது பின்னும் காண்டி? என்று. இலக்குவன் மனம் தெளி வடையும் வண்ணம் இராமபிரான் பரதனைப் பற்றி விளக்கமாக எடுத்துரைத்தான்.

'தருமத்தின் தேவு': 'செம்மையின் ஆணி' என்று பரதனைப் பற்றிச் சொன்னது யார்? அறத்தின் மூர்த்தியாக விளங்கும் இராமபிரான் இது, யாதினும் உயர்பெரும் சிறப்பல்லவா!

# (14)

# அடித்தலமே முடித்தலம்

## பரதன் தோற்றம்:

'தொழுது உயர் கையினன்; துவண்ட மேனியன்:
அழுது அழி கண்ணினன்; 'அவலம் ஈது' என
எழுதிய படிவம் ஒத்துஎய்து வான் தனை,
முழுது உணர் சிந்தையான் முடிய நோக்கினான்
(2423)

பரதனைப் பற்றி இராமபிரான் இலக்குவனிடம் சொல்லி முடித்த அளவில், பரதனும் தன் தம்பியுடன் அங்கு வந்து சேர்ந்தான். அங்கு வந்த போதுபரதன் தோற்றம் எப்படியிருந்தது என்பது பற்றிக் கூறுகின்றது இந்தக் கவிதை.

அறக்கடவுளின் உருவம் என்று சொல்லப்பட்ட பரதன், இப்போது அவலத்தின் (துன்பத்தின்) வடிவம் என்று சொல்லத்தக்க நிலையில் இராம இலக்குவர் இருக்கும் இடம் வந்து சேர்ந்தான். அறக்கடவுள் இப்போது அவலத் தோற்றமாக வருவது ஏன்?

---

அவலம் — துன்பம்; சித்தையான் — மனத்தினன். (இராமபிரான்)

நேர்மை தவறாத செயல் நடக்கும் இடத்தில் அறக்கடவுள் வாழும். மக்களிடத்தில் நேர்மை குன்றுமானால், அறக்கடவுளின் முகம் வாடும். அதுவும் அரண்மனையில் நேர்மை-முறைமை தவறு மானால் தரும தேவதையின் முக வாட்டம் சொல்லுந்தரத் தக்கது அன்று.

அயோத்தி மாநகரத்து அரண்மனையில், இரவில் நடந்த ஒரு செயல் கொடூரமானது. அதன் அடிப் படையில் கோசல நாட்டு அரசாங்கத்தில். இரகு வம்சத்தில் மரபை மீறிய ஒரு செயலுக்கு வித்திடப் பட்டுவிட்டது. இது நேர்மையற்றது: நாட்டு மக்களுக்கு விருப்பம் இல்லாதது: தர்மத்துக்கு விரோதமானது.

இந்த அரசுக்கு முறையாக முடிசூட வேண்டி யவன், குலமுதல்வனாகிய இராமபிரான், அவன், இப்போது ஏற்பட்டுள்ள அரச ஆணையின்படி, நகரத்தைவிட்டு வெளியேறவேண்டும். முறைமைக்கு உரியவன் வெளிஏறும் போது, விதிமுன் சென்றது: தருமம் பின் இரங்கி ஏகியது. தருமம், அவனுக்குப் பின்னால் இரக்கத்துடன்-வருத்தத்துடன் சென்றது.

வெளியே செல்பவனைக் கொண்டுதான் அயோத் தியில் அரச தருமம் நிலை நாட்டப்பட வேண்டும். அதனால்,வெளியேறிச் சென்றவன் மீண்டும் வந்தால் தான், தருமதேவதை முகம் மலரும் அதுவரை வாட் டத்துடன்தான் இருக்கும்.

அரசமரபை நிலைநாட்ட முற்பட்டிருப்பவன் இப்போது பரதன்.அதனால் அவன் அறவடிவினன் எனமதிக்கப்பட்டான். இரகுவம்சத்து அரசதரு மத்தை நிலைநாட்ட வேண்டிதான், இராமபிரானை அழைத்துச்செல்வதற்கு வருகின்றான் இந்தப்பரதன்.

பரதன் இங்கு வந்துள்ள நோக்கம் நிறைவேறும் வரை, உள்ளத்தில் துன்பம் இருக்கத்தானே செய்யும்! அதனால், அவன் வடிவம், அவலமாகத் தோற்றமளிக்கின்றது. அறத்தின் மூர்த்தியாகிய இராமபிரானால் 'சேண் உயர் தருமத்தின் தேவு, என்று சொல்லப்பட்ட பரதன், துன்பத் தோற்றத் தினனாகக் காணப்படுதற்கு இதுவே காரணமாகும்.

## முழுது உணர் சிந்தையான்:

இந்த அவலத் தோற்றத்தை நோக்கினவன் யார்? எப்படி நோக்கினான்? இதற்கு, கவிதையின் ஈற்றடி விடை தருகின்றது. முழுவதையும் உணர்ந்து கொள்ளும் ஆற்றல் பெற்ற மனத்தினன்தான், இந்த அவலத் தோற்றத்தினனை நோக்கினான். நோக்கும் போது, தோற்றத்தின் முடி முதல் அடி வரை முழுவதையும் கவனித்தான் சிந்தையான். நோக்குதல்-கருத்துடன் கூர்ந்து பார்த்தல். வெறும் பார்வை, உள்ளத்தில் தங்காது. நோக்கம், நோக்கியவன் சிந்தையில் தங்கும்.

நோக்கிய இராமபிரான் திருவுள்ளத்தில் இந்த அவலத்தோற்றம் தங்குகின்றது. இந்த அவலம்-துன்பம் நீங்க வேண்டுமானால், இராமபிரான் அயோத்தி செல்லவேண்டும். அப்படிச் செல்வது, தந்தை தசரதனது வாய்மையை மீறியதாகும். 'நாம் வாய்மையை மீறமுடியாதே: வந்தவன் அவலத்தை எப்படிப் போக்குவது? நம்தம்பி மேற்கொண்டசெயலும்தருமத்துக்கு உட்பட்டது: நம் செயலும் தருமச் செயலே:

எதனைத்தள்ளுவது?எதனைக்கொள்ளுவது?தருமம் சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டுவிட்டதே! என்செய்வது! என்ற சிந்தையினன் ஆயினான் இராம பிரான் இப்போது. அதுவும் பரதனது அவலத் தோற்றத்தை முடியக் கண்ட பிறகு (முழுமையாக நோக்கிய பிறகு! இந்தச் சிந்தனை மிகுதியாயிற்று இராமபிரானுக்கு.

இவ்வளவு கருத்தையும் வாசகர்கள் சிந்திக்க வேண்டும் என்ற நோக்கில்தான், கம்பநாடன், 'முழுது உணர் சிந்தையான் முடிய நோக்கினான். என்று இந்தக்கவிதையை முடித்துள்ளான். சந்திப்பு, அறத்தின் மூர்த்திக்கும் தருமத்தின் தேவுக்கும். சந்திப்பின் நோக்கம், முடியில் (அரசமுடி) உள்ளது. இது முடியுமா? முடிந்து ஆக வேண்டும் என்பது தருமத் தேவின் (பரதன்) நோக்கம். அந்நோக்கத்தை நிறைவேற்ற முடியாதே என்பது அற மூர்த்தியின் (இராமன்) ஏக்கம்.

இந்தச் சந்திப்பில், அறத்தின்மூர்த்தியும் (இராம பிரானும்) தருமத்தின் தேவும் (பரத நம்பியும்) தத்தம் கொள்கைக்காக வாதாடப் போகின்றனர்: இந்த வாதப்போரில் யாருக்கு வெற்றி? யாருக்குத் தோல்வி? இரண்டு கொள்கைகளும் சம வலிமை உடையன. ஆனால், முடிவில் ஏதேனும் ஒன்று வென்றுதான் ஆக வேண்டும்: மற்றொன்று தோற்றுத்தான் ஆகவேண்டும். வந்ததருமத்தேவுக்கு வெற்றியா? இருந்த அறமூர்த்திக்கு வெற்றியா? இருவருக்கும் வெற்றி. எப்படி?

அப்படி, சுவைததும்ப இந்த நிகழ்ச்சியை காவியத்தில் அமைத்து வைத்துள்ளான் கம்பநாடன். அவன் கவிச்சக்கரவர்த்தியல்லவா? பரதனும் சக்கரவர்த்தித் திருக்குமாரன்தான்! இராமபிரானும் அவ்வாறே! 'யார் தோற்றாலும் சக்கரவர்த்திதோற்றான் என்றுதானே வரும்; அதனால், கவிச் சக்கரவர்த்தி யாரையும் தோற்கவிடவில்லை.

'தோலாத தனி வீரன், இராமபிரான் மட்டும் அல்ல! பரதனும் கூட அத்தகைய வீரன்தான்' என்பதை, கம்பநாடன் இந்தநிகழ்ச்சியின் முடிவில்நிலைநாட்டியுள்ளான். இந்தச்சந்திப்பின் தொடக்கத்தில், தொழுது உயர்கையினனாய், அவலத் தோற்றத்தினனாய் வந்த பரதன், முடிவில், 'யாதும் ஓர் துன்பு இலனாய், படித்தலத்து இறைஞ்சினனாய் விடை பெற்றுச் செல்கின்றான். அதனால், வந்த பரதனுக்கு வெற்றிதானே: துன்பக் கோலத்தினானாய் வந்தவனை இன்பக் கோலத்தினனாய் ஆக்கி அனுப்பிவைத்தது இந்த இராமபிரானுக்கும் வெற்றிதானே!

இந்த வெற்றியில், தருமமும் சங்கடத்தினின்றும் தப்பித்துக் கொண்டு விட்டது என்று கூறலாம். அப்படி, கற்பாரை, கேட்பாரைக் கவரும் வண்ணம், சுவையோட்டம் குறையாமல், ஆர்வம் மிகுமாறு கதையினை நடத்திச் செல்லும் கவிதைக் கலைத்திறன் படைத்தவன் கவிச்சக்கரவர்த்தி.

வந்த பரதன் தோற்றத்தை, தான் நோக்கியது போன்று, தம்பி இலக்குவனையும் நோக்கச்செய்கின்றான் இராமபிரான்.

## இலக்குவன் மாற்றம் :

'இளையஜய! நீ. தேர்ப் பெருந்தானையாய் பரதன் சீறிய போர்ப் பெருங்கோலத்தைப் பொருந்த நோக்கு' என்று, இராமபிரான் இலக்குவனைப் பார்த்துக் கூறினான். 'இதுவா, போர்க் கோலம்? கவனித்துப்பார்.' என்று இலக்குவன் உணரும் வண்ணம் சுட்டிக் காட்டினான் இராமபிரான்.

இலக்குவனும் உண்மை உணர்ந்தான். தான் உணர்ந்த உண்மை நிலை வெளியில் தெரியும் வண்ணம் நின்றான் இலக்குவ வீரன். எப்படி?

எல்ஒடுங்கிய முகத்து இளவல் நின்றன்ன—
மல் ஒடுங்கிய புயத்தவனை வைது எழும்
சொல் லொடும் சினத்தொடும் உனர்வு சோர்தர,
வில்லொடும் கண்ணநீர் நிலத்து வீழவே. (2425)

'இவ்வளவு சிறந்த தூயவனை, எவ்வளவு கேவலமாக எண்ணிவிட்டோமே' என்ற எண்ணம். இலக்குவன் உள்ளத்தை உருக்கிவிட்டது. உருகிய உள்ளம், உணர்வு நீராகக் கண்களினின்றும் வடிந்தது: வீரச் செயலுக்காக எனப் பிடித்த வில்லும், கையினின்றும் நழுவி மண்ணில் விழுந்தது: பரதனைவைது எழுந்தசொல், தானாகச் சோர்ந்தது: அத்தோடு கோப உணர்வும் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது: அதனால் இளவலின் முகத்து ஒளியும் மழுங்கியது. இத்தலையை தோற்றத்தினனாய், தன் செயலுக்கு நாணி நின்றான் இலக்குவ வீரன். இது, இந்த இலக்குவத் தம்பியின் உள்ள மாற்றத்தைக் காட்டுகின்றது, இந்த மாற்றத்துக்குக் காரணம், பரதனது பண்பாட்டுத் தோற்றமேயாகும்.

---

எல்-ஒளி.

## தூதுப் பரதன்

பரதன் இராமபிரானிடம் வந்ததை. ஒரு தூதுவனாக வந்தான் என்று கவிச்சக்கரவர்த்தி, கற்பனை நயம் படக் கூறுகின்றான். பரதனது திருவுள்ளக் கருத்தை வெளிப்படுத்தும் போக்கில் இக்கற்பனை அமைந்துள்ளது.

இலட்சுமியின் நிலையை அஷ்டலட்சுமி எனக் கருதுவது பாரதப் பண்பாட்டுச் சமயக் கருத்து. எட்டு இலட்சுமிகளில் ஒன்று இராஜ்ய இலட்சுமி. அரசுத்திருமகள். மனித வாழ்க்கை வளம்பெற அமைவது எல்லாம், செல்வம் எனப்படும். அச்செல்வம், இலட்சுமித் தெய்வமாக வணங்கப்படுவது இந்து மரபு. இந்த இந்திய சமயத்தத்துவ மரபை அடிப்படையாக்கிக் கொண்டு உருவானது கம்பன் நாடன் தரும் இந்தக் கற்பனை. கற்பனை என்பது, கண்ணுக்குத் தெரியாத ஒன்றைக் கட்புலனாகுமாறு காட்டுவது என்று திறனாய்வாளர் கூறுவர்.

'கோசல நாட்டு இராஜ்ய லட்சுமிதான், பரதனைத்தனது தூதுவனாக இராமபிரானிடம்அனுப்பி வைத்துள்ளான்' என்று கவிஞன் கூறுகின்றான். தூது அனுப்பிய தன் நோக்கம், இராமபிரான், திரும்ப வந்து இராஜ்யலட்சுமியான தன்னை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்பது. ஏன் ஏற்கவேண்டும் என்ற காரணத்துடன் கவிதை அமைந்துள்ளது. இதோ. அது:

**கோதுஅறத் தவம்செய்து, குறிப்பின் எய்திய,**
**நாதனைப் பிரிந்தனள்; நலத்தின் நீங்கினாள்,**
**வேதனைத் திருமகள் மெலிகின்றாள், விடு**
**தூது என, பரதனும் தொழுது தோன்றினான்.**

---

கோது-குற்றம்: குறிப்பு-கருத்து: நாதன்-தலைவன்: வேதனை–துன்பம்.

அரசுத்திருமகள் என்பது கற்பனைதான். ஆனால், அது, பாரதப் பண்பாட்டின் அடிப்படையில் உருவானது. அந்த இராச் சியலட்சுமி, குற்றம் அற்ற தவம் செய்தாள், எதற்கு? இராமபிரானைத் தனக்கு நாதனாக—கணவனாகப் பெறுவதற்கு. ஆனால், அந்தநாதனோ, இப்போது பிரிந்துபோய் விட்டான், அதனால், வேதனை (துன்பம்) மிகுகின்றது. மிகுந்த துன்பம், இராச்சிய இலட்சுமியை மெலிய வைத்து விட்டது. வேதனையில் மெலிகின்றாள் திருமகள். இந்த வேதனை தீரவேண்டுமென்றால், நாதனாகிய இராமபிரான் இங்கு அயோத்திக்கு வரவேண்டும். இத்தகையதனது கருத்தைச்சொல்லி பெருமானைத் தன்னிடம் அழைத்து வருவதற்காக, இந்தஇலட்சுமி, பரதனைத் தூதுவனாக அனுப்பிவைத்தாள். 'தூது எனப் பரதனும் தொழுது தோன்றினான்'—என்ன அழகான கற்பனை! கதை காவியமாக வடிவெடுப் பதற்கு இத்தகைய கற்பனையும் ஒன்றாகும்.

### பரதனின் முதல் பேச்சும், செயலும் :

'அறம்தனை நினைந்திலை ; அருளை நீத்தனை ;
துறந்தனை முறைமையை; என்னும் சொல்லினான்
மறந்தனன், மலரடி வந்து விழுந்தனன்
இறந்ததன் தாதையை எதிர் கண்டென்னவே.

அரசத்திருமகளின் தூதுவனாகவந்த பரதன் முதலில், இருந்த இராமபிரான் திருவடிகளைவணங் கினான். இதனைக் கவிதை, 'மறந்தனன் மலரடி வந்துவிழுந்தனன்' எனக்கூறுகின்றது, தன்மெய்யை மறந்தான்; விழுந்தான் பரதன் மெய்யை — உடல் உணர்வை மறந்தால் கீழே விழுந்துதானே ஆக வேண்டும்!

மெய்ம் மறக்கும் நிலை ஏன் ஏற்பட்டது? கீழே விழும் நிலை ஏன் ஏற்பட்டது? 'சொல்லினான்' என்ற கவிதைச்சொல், அந்தக் காரணத்தைக் குறிப் பாகக் காட்டுகின்றது.

சொல்லினான். என்னசொல்? இராமபிரானையே குறை கூறியசொல், 'பெருமானே! நீ, அறத்தை நினைக்கவில்லை: உனக்கே உரிய அருள் தன்மை யையும் தள்ளிவிட்டாய். அரச மரபையும்-முறைமை யையும் ஒதுக்கிவிட்டாய்.' என்று அறத்தின் மூர்த்தி யையே பார்த்துக் கூறினால், இது குறைகாணும் சொல் அல்லவா?

தனக்கு வழிபடும் தெய்வமாக விளங்கும் இரா மபிரானது எண்ணத்திலும், சொல்லிலும் செயலிலும் குறைகாண்பதாக அமைகின்றது பரதனது முதல் பேச்சு இத்தகைய சொல்லினனாகயிருப்பதால் (குறைகூறிவிட்டோமே) தன் மெய்ம்மறந்து கீழே விழுந்தான் பரதன். விழுந்தஇடம் இராமபிரான் திருவடியாயிற்று.

இப்படி, பாரதந்திரனாய்(தலைவனைச் சார்ந்து ஒழுகுதல்) வாழும் பரதன், சுவாதந்திரனாய் (தன்னு ரிமை பெற்றவன்) நிற்கும் இராமபிரானைப் பார்த்து' அவன் நினைவு முதலியவற்றில் குறைகாணலாமா? இது முறையா? இது நீதியா?

இது, குறையாகப் பேசியவன் குறையா? பேசப் பட்டவன் குறையா? இருவரும் குறையற்றவர்கள் : நிறைவுடையவர்களே, எப்படி?

அறம், அருள், முறைமை என்ற மூன்றும் நற்குணவரிசைப் பட்டியலுக்கு உரியவைதான். இவை மூன்றும் இந்த இருவரிடமும் நிரம்ப உண்டு. ஏன்? ஒருவர் அறத்தின் மூர்த்தி. மற்றொருவர் தருமத்தின் தேவு. வித்தியாசம் இல்லை அல்லவா? பின் ஏன் குறை கூறப்படுகின்றது?

அந்த மூன்று நற்குணங்களும் செயல்படும் விதத்தில் குறை காணப்படுகின்றது. கோசல நாட்டு அரசை, தான் ஏற்பது, தனது பரதந்திர நிலைக்கு (தலைவன் சொற்படி நடத்தல்) மாறுபாடாக அமைவதால், பரதன் அதனை வெறுத்தான். அரசபதவி மனிதனை, சுவதந்திரனாக (தன்னுரிமை உள்ளவனாக)வளரச் செய்துவிடும், அவ்வளர்ச்சி, பரதந்திர நிலையை அழித்து விடும். தனது பாரதந்திரிய வாழ்வுக்குத் தடையாக அமைவது, இராமபிரான் இப்போது கானகம் வந்ததுதானே, என பரதன் எண்ணுவதால்தான் இப்படிக் குறையாகச் சொன்னான்.

இந்தக் குறை இவர்கள் வாழ்க்கையில் அமைவதற்குக் காரணமாக இருந்தவன் தந்தை தசரதன். அந்தத் தசரதன் வந்து, தான் சொன்னதை மாற்றினால் எல்லாக் குறையும் நிறைவாகவே அமையும். அதனால், இராமபிரானைக் கண்டது, இறந்த தனது தந்தையை நேரில் கண்டது போலாயிற்று பரதனுக்கு.

இவ்வாறு, பாத்திரங்களின் நற் குணங்களை வெளிப்படுத்தும் முறையில் அமைந்துள்ளது இந்தக் கவிதை.

## இராமபிரான் பரதனைத் தழுவுதல்:

'உண்டுகொல் உயிர்' என ஒடுங்கினான் உருக்
கண்டனன்; நின்றனன்—கண்ணன் கண் எனும்
புண்டரீகம் பொழி புனல் அவன் சடா
மண்டலம் நிறைந்துபோய் வழிந்து சோரவே.

(2428)

அயாவுயிர்த்து, அழுகணீர் அருவி மார்பிடை,
உயாவுற, திருவுளம் உருக புல்லினான்-
நியாயம் அத்தனைக்கும் ஓர் நிலயம் ஆயினான்-
தயாமுதல் அறத்தினைத் தழீஇயது என்னவே

(2429)

இந்த இருகவிதைகளும், தன் பாதங்களில் விழுந்த பரதனிடம், இராமபிரான் தனது அன்பை எவ்வாறு காட்டினான் என்பதைத்தெரிவிக்கின்றன. இராமபிரான் பரதன்பால் கொண்டிருந்த அன்பு இரு செயல்களாக வெளிப்பட்டது. ஒன்று, கண்ணீரால் பரதன் சடாமுடியை நனைத்தது: மற்றொன்று பரதனைத் தன் மார்பாரத் தழுவிக் கொண்டது.

பரதனது மெலிவு, அவன் உடலில் உயிர் உள்ளதா என்று சந்தேகிக்கும் படியான அளவுக்கு இருந்தது. இது, அண்ணனைப் பிரிந்த பிரிவால் தம்பிக்கு ஏற்பட்ட மனத்துயரின் வெளிப்பாடாகயிருந்தது: மற்றொரு வகையில் பரமாத்மாவைப் பிரிந்த ஜீவாத்மா நிலைக்கு எடுத்துக் காட்டாகவும் இருந்தது.

இந்த மெலிந்த உருவைக் கண்டதும். இராமபிரானின் கண்களினின்றும் நீர் வடியத் தொடங்கியது: அது, தன் பாதங்களில் மெய்ம் மறந்து கிடக்கும்,

பரதனது சடாமுடியை நனைத்துவிட்டது. முன்பு ஒரு காலத்தில் இந்தத் திருவடியில் பெருகிய கங்கையாறு சிவபிரான் சடாமுடியைச் சேர்ந்து வழிந்து பெருகியது. இப்போது, இந்த அவதார நிலையில் கண்களினின்றும் கங்கையாறு போன்று பெருகிவரும்நீர் தன் திருவடிகளில் கிடக்கும் பரதனது சடைமுடியை நனைத்து வழிந்து ஓடுகின்றது.

"கண்டனன்! நின்றனன்' (கண்டு நின்றான்) என்ற சொற்கள், பரதன். அடியில் கிடந்தான் என்பதை வலியுறுத்துகின்றன.

"மாசுஅடைந்த மெய்யன்' அல்லவா இந்தப் பரதன். அதனால், தனது கண்ணீரால் முதலில் பரதனைத் திருமஞ்சனமாட்டினான் இராமபிரான்; பிறகு கீழே மெய்ம் மறந்து கிடக்கும் பரதனைத் தூக்கி, தன் மார்பாரத் தழுவிக்கொண்டான்.

அப்படித் தழுவிக்கொண்டது எவ்வாறு இருந்தது என்பதைக் கம்ப நாடன் ஒரு உவமையின் மூலம் விளக்குகின்றான். அவ்வுவமை, கதைப் போக்குப் பொருளை உள்ளடக்கிக் கொண்டதாக அமைந்துள்ளது.

தழுவிக் கொண்டவன் 'நியாயம் அத்தனைக்கும் ஓர் நிலயம் ஆயினவன்.' எல்லா நீதிகளுக்கும் இருப்பிடமாய இராமபிரான். இதன் குறிப்புப் பொருள் 'தழுவிக் கொள்ளப்படும், பரதன் 'அரச முறை' என்ற ஒரு நியாயத்துக்கு மட்டும் வாதாட வந்திருப்பவன்' என்பதாகும்.

இந்தத் தழுவல் 'தயாமுதல் அறத்தைத் தழுவியதுபோன்று இருந்தது என்பதாகும்.

தயாமுதல் - அருளை உடைய முதற்கடவுள். அறம் - தருமதேவதை. தழுவிக் கொண்டது கருணைக் கடவுள். தழுவப்பட்டது, அதனுள் ஒன்றாகிய தரும தேவதை. அருளுள் அறம் அடங்கும் என்பது கருத்து.

இராமபிரான் உலகத்துத் துன்பங்கள் அனைத்தையும் நீக்க வந்த கருணைக் கடவுள்: பரதன் கோசல நாட்டு அரச மரபை மட்டும் காக்க வந்த தருமத்தின் தேவு. ஆகவே, பரதன் கொண்ட கொள்கை, இராமபிரான் ஏற்றுவந்துள்ள பெருங் கொள்கைகளுள் ஒன்றாக அடங்கும். அதனால் இராமபிரான் சொல்வதைத்தான் பரதன் ஏற்றுக் கொள்ளவேண்டும் என்பது குறிப்பு.

**வினாவும் விடையும் :**

புல்லினன் நின்று,அவன் புனைந்த வேடத்தைப்
பல்முறை நோக்கினான்; பலவும் உன்னினான்;
"அல்லலின் அழுங்கினை; ஐய! ஆளுடை
மல்உயர் தோளினான வலியனோ" எனறான்.
(2430)

அயோத்தியிலிருந்து வந்துள்ள தம்பி பரதனைப் பார்த்ததும், தன்னுடைய தந்தையின் நலம் பற்றி விசாரிக்கும் ஆர்வம் இராமபிரான் திருவுள்ளத்தில் எழுந்தது. இது, மனித இயல்பு. இந்த அவதாரத்தில்-மனித வாழ்வில் தசரதன் தந்தை உறவினன் இராமபிரானுக்கு. கானகத்திற்குப் புறப்படும்போது, தன் தந்தையிடம் சொல்லிக் கொள்ளவும் இல்லை. அதனால் தந்தையின் நலம் வினாவும் ஆர்வம் மிகுதியும் தோன்றியிருக்கும். அதனை விசாரிக்கத் தொடங்கும் முன்பு, தன்னால் அனைத்துக் கொள்ளப்பட்ட (தழுவிக்கொள்ளப் பட்ட) தம்பியின் தவக் கோலத்தை உற்றுநோக்கினான் இராமபிரான்.

---

உன்னினான் - நினைத்தான்: புல்லினான் - தழுவினான்.

பலமுறை நோக்க வைத்தது பரதன் தவக் கோலம். அதனால், இராமபிரான் திருவுள்ளத்தில் பல விதமான சிந்தனைகளைத் தோற்றுவித்தது அத் தவக்கோலம். 'அரச கோலத்தினனுக்கு இந்தத் துறவுக் கோலம் ஏன்? தசரதன் ஆளுடை மன்னன்: பரதன் கேகயத்திலிருந்து வரும் வரை தசரதன் தானே கோசல நாட்டு மன்னனாகயிருந்திருக்க வேண்டும்? பரதன் வருவதற்குள் ஏதேனும் நாட்டில் போர் நடந்திருக்குமா? தசரதன் என்ன ஆகியிருப் பான்? இந்தக் குழப்ப நிலையில் நமக்கு ஏன் அரச பதவி என்று இவன் எண்ணிவிட்டானா? அதனால், தவக்கோலத்தோடு வாழ்வதே சிறந்ததெனக் கருதி காடு நோக்கினானோ இவன்? என்பன போன்ற சிந்தனைகள், மனிதவாழ்வுக்கேற்ப இராமபிரான் திருவுள்ளத்தில் தோன்றியிருக்க வேண்டும். 'புனைந்த வேடத்தை பல் முறை நோக்கினான்' என்பதிலும் 'பலவும் உன்னினான்' என்பதிலும் இவ்வளவு கருத்துக்கள் அடங்கியுள்ளன.

பரதனது தவக்கோலம், அவன் பெருமையை மேலும் பல் மடங்கு உயர்த்தியுள்ளது இராமபிரான் திருவுள்ளத்தில். இந்த சிந்தனைக்குப் பிறகு தான், 'மல் உயர் தோளினான் வலியனோ?' எனக் கேட் டான் இராமபிரான். 'தசரதன் நலமா?' என்பது தான். கவிதையில் 'வலியனோ'? எனவந்துள்ளது. அதற்குப் பரதன் கூறிய பதிலிலும் அவனது பண்பு டைமை தெரிகிறது. 'ஐய! நின், பிரிவுஎனும் பிணியி னால். என்னைப் பெற்ற, அக் கரியவள் வரம் எனும் காலனால், தனக்கு உரிய மெய்ந்நிறு விப் போய் உம்பரான்' என்பது பரதன் கூறிய பதில்.

---

உம்பர்-மேலுலகம்: பிணி-நோய்: கரியவள்-மனம் இருண்டவள்: (அறிவில்லா தவள்-கைகேயி)

'தசரதன் இப்போது மேலுலகத்தன். தந்தையை ஒரு நோய் தாக்கியது: அந் நோய், உமது பிரிவு என்ற பெருநோய். நோய் வந்தாலும் தப்பித்துக் கொண்டு விடலாம் மருத்துவரின் உதவியால். ஆனால், பிரிவு என்னும் நோயால் பிணிக்கப்பட்ட தந்தையின் பக்கம் மருத்துவர் யாரும் இல்லை. அதற்குப் பதிலாக எமனே பக்கத்தில் நின்றான் அவன் நோயுற்றவன் பக்கத்தில் யாரையும் வர விடவில்லை. அந்த எமன், என்னை மகனாகப் பெற்ற கைகேசியின் வடிவில் நின்று, தான் வந்த வேலையை முடித்துக் கொண்டு விட்டான். என்னைப் பெற்றவள் அன்புத் தாயாக செயல்பட்டிருந்திருந்தால், அந்த எமன் இவளைத் தனதுகருவியாக்கியிருக்க முடியாது. அவள். 'கரியள்' இருண்ட நெஞ்சினள்; அறிவற்றவள்; அன்பினை, தீய மந்தரையிடம் அடகு வைத்தவள், உயிர் பிரிக்கும் எமன் வேலை, என் தாயின் மூலம் நடந்திருக்கின்றது.'

'நம் தந்தை, மேல் உலகத்தன் ஆவதற்கு நாம் இருவரும் காரணமாகின்றோம். 'நீர் தசரதனுடைய உயிரினும் இனிய அன்பு மைந்தன்: உம் பிரிவு உயிரின் பிரிவாயிற்று. நான் கைகேசியின் பாச மகன். எனது பிறப்பு, அவளை எமனாகச் செயல் பட வைத்தது.

'அதனால் மைந்தர்களாகிய நாம் இருவரும் தந்தையின் மரணத்துக்குக் காரணமானவர்கள் ஆகின்றோம். நாம் இருவரும் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாமல் அயோத்தியிலேயே இருந்திருந்தாலும் தந்தை நம்மை விட்டுப் பிரிந்திருக்கமாட்டார்.

'அதனாலும், தந்தையின் மரணத்துக்கு நாம் காரணமாகின்றோம், தந்தை நம்மை விட்டுப் பிரிவதற்கு நாமே காரணமாகயிருந்தாலும், அவரது வாழ்க்கைக் குறிக்கோளும் மரணக் காரணத்தில் ஒரு பங்கு பெறுகின்றது. அரச மரபையும் வாய்மையையும் தமது வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தார் தந்தையார். சோதனை வந்தது வாழ்க்கையில். அப்போது இரண்டையும் நிலை நாட்ட எண்ணினார். மரபை நிலை நாட்ட நீர் உதவ வேண்டும்: வாய்மையை நிலை நாட்ட என்னை நான் தியாகம் செய்ய வேண்டும். அது எனது பரதந்திர (தலைவனைச் சார்ந்து ஒழுகுதல்) வாழ்க்கை நிலைக்கு விரோதமானது.

'ஆகவே, வாய்மையையும் காக்க முடியவில்லை: மரபையும் காக்கமுடியவில்லை: என எண்ணித்தமது உயிரையே விட்டார். உயிரை விடும்போது, தமக்கே உரிய மெய்யை—வாய்மையை உலகத்தில் நிலை நாட்டிச் சென்றுள்ளார்?' என்று பரதன் கூறினான். அப்பதிலில் அவனது இத்தகைய உள்ளக்கிடக்கை முழுதும் அடங்கிக் கிடக்கின்றது. 'தனக்கு உரிய மெய் நிறுவிப் போய் உம்பரான்' என்ற கவிதைத் தொடர் இவ்வளவையும் சிந்திக்க வைக்கின்றது.

தன்னைப் பெற்ற தாயைக் கரியவள் (அறிவில்லாதவள்: மூதேவி) என்று சொல்லியுள்ளான் பரதன். இது சரியா? சரிதான்! மகனுக்கு விருப்பம் இல்லாத ஒரு காரியத்தை, தனது அன்புக்குரிய கணவனது உயிரைப் பிரித்து, சாதித்தாளே இந்தக் கைகேசி, அதனால், அவள் மகனது வெறுப்புக்கு உரியவளாகின்றாள்: நாட்டை ஆளும் அரசபதவியில் தனக்குப் பற்றில்லை என்ற கருத்துப்பட இந்தப் பதில் அமைந்

திருப்பதால், இது பரதன் பண்பாட்டைக் காட்டுகின்றது. அடுத்து வரும் பதில், பரதனது உள்ளத்து உணர்வின்வேகத்தையும், வந்ததன் குறிக்கோளையும் வெளிப்படுத்துகின்றது.

**அந்தக் கேள்வி:**

'வரதன் துஞ்சினான்; வையம் ஆணையால்
சரதம் நின்னதே; மகுடம் தாங்கலாய்,
விரத, வேடம், நீ என்கொல் வேண்டுவான்?
பரத! கூறு'எனப் பரிந்து கூறினான் (2470)

தந்தையின் மரணச் செய்தியைக் கேட்ட இராமபிரான், கொண்ட மனித நிலைக்கு ஏற்ப, தந்தையை நினைத்துப் புலம்பினான். முறையான நீர்க்கடன் முதலியன முடிந்தன. பரதன் புனைந்த வேடத்தைப் பல்முறை முன்பு நோக்கியவன் ஆதலால், அது பற்றி இப்போது விசாரிக்கின்றான் இராமபிரான்.

'தாழிருஞ் சடைகள் தாங்கி, தாங்கரும் தவம் மேற்கொள்ள வேண்டும்' என்பது எனக்கு இடப்பட்ட கட்டளை. ஏவினன் அரசன்' என்று கைகேசி ஆணை இட, 'இன்றே போகின்றேன்' என்று சொல்லிவிட்டு நான் காட்டுக்கு வந்தேன். அப்படியிருக்க இவன் இந்தத்தவ வேடம் மேற்கொள்ளயாது காரணமாகயிருக்கும்" என்பது இராமபிரான் திருவுள்ளத்தில் எழுந்த ஐயம்.

அந்த ஐயம் தீர 'நீ விரத வேடம் என் கொல் வேண்டுவான்? என்று பரதனைப் பார்த்துக் கேட்டான் இராமபிரான். 'அரசஆணை எனக்குத்தான் சடாமுடி: உனக்கு அரசமுடி.

---

சரதம்-உண்மை: வரதன்- வேண்டியதைத் தருபவன் (தசரதன்)
பரிந்து- அன்புகொண்டு,

அரச முடி சூட வேண்டிய தலையில் சடாமுடி ஏன்? இது, அரசன் ஆணையை மீறியதாகாதா? உனக்குத் தான் அரச முடி என்று சொன்னான் வரதன் (தசரதன்) அவன் வேண்டியதெல்லாம் தருபவன். உன் தாய், 'என் மகனுக்கு நாடாளும் உரிமை வேண்டும்' என்று கேட்டாள். அரசனும் உன் தாயின் வேண்டுகோளின் படி அரசை உனக்குக் கொடுத்து விட்டு இறந்து போனான். அந்த ஆணையின்படி கோசல நாடு (வையம்-உலகம்) உன்னுடையதே, இது உண்மை. அந்த ஆணையின் படி நீ முடி சூட வேண்டியது தானே! அதற்கு மாறாக இந்தச் சடா முடித்தவக் கோலம் எதற்காக' என்று அன்போடு கேட்டான் இராமபிரான்.

**பரதன் பதில்:**

என்றலும் பதைத்து எழுந்து, கைதொழா
நின்று, தோன்றலை நெடிது நோக்கி, நீ
அன்றி யாவரே அறத்து உளோர்? அதில்
பின்று வாய் கொலாம்? என்னப் பேசுவான் (2471)

'உனக்குத் தவவேடம் ஏன்' என்று இராம பிரான் கேட்டவுடன் மனம் துடி துடிக்க எழுந்தான் பரதன். இராமபிரான் கேட்ட கேள்வி பரதனது மனத்தைத் துடிக்க வைத்து விட்டது ஏன்? தனது உள்ளப் போக்கைப் புரிந்து கொள்ளாமல் கேட்கப் பட்ட கேள்வி என்பதால் பரதன் மனம் துடித்துப் போயிற்று. எழுந்தான்: எதிரில் நிற்கும் தோன்ற லாகிய இராமபிரானைத் தனது கைகள் கூப்பித் தொழுதான்; பிறகு நன்கு நோக்கினான்.

'இந்த உலகத்தில் நீ அல்லாமல் அறவழியில் நடப்பவர் யார் இருக்கிறார்கள், நீயே அவ்வற நெறியினின்றும் பின்னிடுவாயோ' என்று தனது பேச்சுக்கு முன்னுரை வகுத்துக் கொள்கின்றான் பரதன்.

முதலில், தவ வேடத்துக்குக் காரணம் வருகின்றது. பெரியோர் மனத்துக்குப்பொருந்தாதனவாகிய வரங்களால். உனக்குத் தகாத (நினக்குஒன்றாநிலை) தவக்கோலத்தை உனக்குத் தந்து, அரசனையும் கொண்றவள், என்னைப் பெற்றெடுத்த கைகேசி. அந்தப் பாவியின் மகனாகிய நான், புனிததவக் கோலம் பூணுதல் தகாதுதான். ஆனால் இப்போது பழி முட்டையைச் சுமந்துள்ளயான், இத்தவக் கோலத்தின் மூலம் அப்பழியைக் கழிக்கவில்லை என்றால், வேறு எப்படி இப்பழி நின்று ஏறுவேன் என்று கூறினான் பரதன்.

'நோவ தாக இவ் வுலகை நோய்செய்த
பாவ காரியின் பிறந்த பாவி யேன்,
சாவது ஓர்கிலேன்; தவம்செய்வேன் அலேன்;
யாவது ஆகிஇப் பழி நின்று ஏறுவேன் (2473)

'இந்த உலகத்தையே பெருந்துன்பத்துக்கு உள்ளாக்கிய பாவியின் வயிற்றில் பிறந்த ஒரு பாவி நான். என்னால்தானே இந்த உலகத்துக்கு இவ்வளவு பெரிய துன்பம் வந்தது. உலகம் துன்பம் சுமக்க, நான் பழி சுமந்தேன் இந்தப்பழியைக் கழிப்பதற்கு நான் இறந்திருக்கவேண்டும். அதைச் செய்யவில்லை. தவமும் செய்பவில்லை என்றால், வந்த பழியைத்துடைப்பது எப்படி!'

'மூத்தவனுக்குரிய அரசை இளையவன்பறித்துக் கொண்டான்' என்று உலகம் சொல்லும் பழிச்சுமை நீங்க இந்த விரதவேடம் தாங்கினேன்'என்று தனது தவவேடத்துக்குக் காரணம் கூறினான் பரத நம்பி.

'கோசல அரசுக்கு முதல் மகனாய்ப் பிறந்த காரணத்தால் உனக்கே உரித்தான அரசை நீயே துறந்து, துறவியாகக்கானகம் வந்தாய். அதற்காக' நான், நீதியின் திறம்பி, அறத்தைவாளினால்கொன்று தின்றது ஒப்ப இவ்வரசை ஆளத் தொடங்குவேனா? நான் இந்தக் காரியத்தை மறந்தும் கூட செய்ய மாட்டேன்' என்றான் பரதன்.

"வாளின்கொன்று அறம்தின்றான் எனஅரசது
ஆள்வனோ?"

என்பது பரத நம்பியின் ஆணித்தரமான கேள்வி

இவ்வாறு பேசிவரும்போதே பரதன் உள்ளத்தில் ஒரு எண்ணம், அது.

தொகை இல் அன்பினால் இறைவன் துஞ்ச, நீ
புகையும் வெஞ்சுரம் புகுத, புந்தியால்
வகை இல் வஞ்சனாய் அரசு வவ்வ, யான்
பகைவனே கொலாம்? இறவு பார்க்கின்றேன்.

(2476)

என்பதாகும். இந்தக் கோசலப் பேரரசைக் கவர்வதற்கு ஒரு பகைவனைப் போன்று அரசுக்கு உரியவர்கள் சோர்கின்ற சமயத்தை எதிர் பார்த்தவனாக அல்லவா ஆகிவிட்டேன்! அன்பின் மிகுதியால் தசரதன் (இறைவன்) இறந்தான்: அரசுக்கு உரிய இராமபிரான் கானகம்சென்றான். இது ஏற்ற சமயம்.

---

இறவு - சோர்கின்ற சமயம் : சுரம் - காடு

இப்படி வஞ்சனையால் அரசைக் கவ்வநினைத்திருப் பவன் பகைவன். யான் அத்தகையவனா? என்று கூறுகின்றான் பரதவீரன்.

இது, பரதனது அடக்கத்தையும், அன்பையும் ஆழ்ந்த அறிவையும் காட்டுகின்றது, முடிவாக,

**'உந்தை தீமையும், உலகு உறாதநோய்**
**தந்த தீவினைத் தாய்செய் தீமையும்,**
**எந்தை! நீங்க மீண்டு அரசு செய்க' எனா, (என்று)**
**சிந்தை யாவதும் தெரியக் கூறினான். (2477)**

தனது மனக்கருத்தில் உள்ளதை தெளிவாகத் தெரிவிக்கின்றான் பரதவள்ளல். 'உமது தந்தை தசரதன் செய்த தீமையும், உலகுக்குத் துன்பம் விளைவித்த, எனது தாய் செய்த தீமையும் நீங்க வேண்டுமானால் அதற்கு ஒரே வழி உள்ளது. அது, நீர் மீண்டும் அயோத்தி வந்து ஆட்சி பீடம் அமர்ந்து அரசாட்சி செய்வதுதான்' இதுதான் பரதனின் முடிவான பதில்.

## வாய்மையும் மரபும்:

பரதன் அரச மரபைக் காக்க வேண்டும் என் பதில் எவ்வளவு உறுதியாகயிருக்கின்றான் என்பதையும், அதனை அவன் வெளியிடும் சொற்களின் அடியில் உள்ள துயரத்தையும் கண்டான் இராம பிரான். உடனே துணுக்கம் எய்தினான். இதனைக் கம்பநாடன்.

**"சொற்ற வாசகத் துணிவு உணர்ந்தபின் இற்றதோ**
**இவன்மனம் என்று எண்ணுவான்"**

என்று கவிதையாக்குகின்றான்.

பரதனது உள்ளம் இற்று விட்டதோ, என்ற ஐயத்துடன் கூடிய அச்சம், இராமபிரான் மனத்தில் தோன்ற வேண்டுமானால் அவன் துயரம் எவ்வளவு ஆழமுடையதாக இருந்திருக்கும்?

இராமபிரான், பரதனை எவ்வாறு தேற்றுவது எனச் சிந்தித்தான். சிந்தனையின் முடிவில் ஒரு பழைய நிகழ்ச்சி தோன்றியது. அதனைச் சொல்லி, அரசு பரதனுடையதுதான் என்று உறுதிப் படுத்தி விடலாம் என எண்ணினான் இராமபிரான். அப்படி பரதன் ஒத்துக் கொண்டால் தந்தையின் வாய்மையை நாம் காப்பாற்றி விடலாம் எனவும் திட்டமிட்டான் இராமபிரான். அதனைத் தனது மனத்தில் இருத்திக் கொண்டு, அரசு உரிமை பரதனுக்கே என்பதைத் தெளிவு படுத்துகின்றான் பெருமான்.

'வரன்நில் உந்தைசொல் மரபினால், உடைத்
தரணி நின்னதுஎன்று இயைந்த தன்மையால்
உரனின் நீபிறந்து உரிமை ஆதலால்,
அரசு நின்னதே; ஆள்க' என்னவே.' (2485)

பரதன், தான் பழியைச்சுமப்பதாக எண்ணுவது இராமபிரானுக்கு உரிமையான அரசைத்தான் பெறுவதாக இருப்பதுதான். அரசு சட்டப் படியும் அரசன் ஆணையின் படியும் பரதனுக்கே உரிமையுடையது என்பதை நிரூபித்துக் காட்ட முற்படுகின்றான் இராமபிரான். இதற்கு ஆதாரமாகயிருப்பது தசரதன், கேகயர் கோனிடம் கொடுத்த கன்யா சுல்க வாக்குறுதியாகும். அதனை உறுதிப்படுத்துவதாக அமைந்துள்ளது இந்தக் கவிதை.

'வரத்தால் உன் தந்தை கொடுத்த வாக்குறுதியின்படி கோசல நாடு (இத்தரணி) உனதாகும்படி பொருந்திவிட்டது.' என்பது முன் இரண்டடியின் பொருள். வலிமை பொருந்திய நீ பிறந்துவிட்டதால் உன் தாய்க்குரிய இவ்வரசு உனக்கு உரிமை வழி வந்ததாகும். ஆதலின் இந்த அரசு உன்னுடையதே யாகும். ஆகவே நீயே சென்று அரசைஆள்க 'என்று சொன்னான் இராமபிரான். இது, பரதனால்ஏற்றுக் கொள்ளப்படும் எனவும் நம்பினான் இராமபிரான்.

இராமபிரான் நம்பிக்கை வீண்போகவில்லை, பரதன், இராமபிரான் சொன்னதை ஏற்றுக்கொண்டு விட்டான். இதற்குப் பிறகு பரதனது வாதமே மாறுகின்றது,

**பரதன் வேண்டுகோள்:**

'முன்னர் வந்து உதித்து உலகம் மூன்றினும்
நின்னை ஒப்பிலா நீ, பிறந்து பார்
என்னது ஆகில், யான்இன்று தந்தனென்
மன்ன! போந்து நீ மகுடம் சூடு' எனா, (2486)

'மலங்கி வையகம் வருந்தி வைக, நீ,
உலம் கொள் உனக்கு உறுவ செய்தியோ?
கலங்குறா வணம் காத்தி போந்து,' எனா,
பொலம் குலாவு தாள் பூண்டு வேண்டினான். (2487)

கோசல நாடு பரதனுக்கு உரிமை உடையது என்பது உண்மைதான். தனது உடைமையை யாருக்கு வேண்டுமானாலும் கொடுக்கும் உரிமை உடையவனுக்கு உண்டல்லவா? இம்முறையில் தனது வாதத்தை வைத்தான் பரதன் ...

'இவ்வுலகம் என்னுடையது என்று நீயே கூறினாய்: அதை நான் ஏற்றுக்கொள்கின்றேன். இப்போது எனக்கு உரிமையான இந்தக் கோசலஅரசை நானே உனக்குத் தருகின்றேன்: நீ வந்து முடிசூடிக் கொள்க'. என்று பரதன் இராமபிரானிடம் வேண்டிக்கொண்டான். மேலும், இராமபிரான் அயோத்தி வந்து முடிசூடிக் கொள்ள வேண்டிய காரணத்தையும் சொல்லி,அப்பெருமானிடம் சரணம் புகுகின்றான் பரதநம்பி.

'இந்த உலகம் முழுவதும் துன்பத்தில் மூழ்க, நீ உனக்கு இசைந்தபடி தவத்தை மேற்கொள்ளலாமா? இது தகுதியன்று. உலகத்துன்பத்தை நீக்குவதற்காயினும், அயோத்தி வந்து அரசை ஏற்றுக் கொள்க: நீ அங்கு வராது போனால், உலகத்துன்பத்தை வேறு யார் நீக்குவார்? நீ அருளுடையவன் அல்லவா? அரசை ஏற்க அருள் புரிக' என்று சொல்லிக்கொண்டு இராமபிரானுடைய இரண்டு திருவடிகளையும் பிடித்துக் கொண்டு சரணம் அடைந்தான் பரதநம்பி.

சரணம் அடைந்தவர்களின் வேண்டுகோள் எந்தகையதாயினும் அது ஏற்றுக்கொள்வதற்கு உரியதுதான் அதுவும் இப்போது பரதனால் விண்ணப்பிக்கப்பட்ட வேண்டுகோள் உலகத்துன்பத்தை நீக்குவதற்குரியதாகும். அப்படியிருந்தும், இராமபிரான் சரணாகத வத்ஸலனாகயிருந்தும், பரதனின் வேண்டுகோள் ஏற்கப்படவில்லை. ஏன்? இராமாவதாரத்தின் நோக்கம், இதைவிட பெரிய காரியங்களைச் செய்வதற்காகும்.

இங்கு ஸ்ரீவசனபூஷணவாக்கியம் ஒன்று நினைக்கத்தக்கதாகும். "இவன் அவனைப் பெற நினைக்கும் போது பிரபத்தியும் உபாயமன்று: அவன் இவனைப் பெற நினைக்கும்போது பாதகமும் விலக்கன்று: இவையிரண்டும் ஸ்ரீ பரதாழ்வான் பக்கலிலும், ஸ்ரீ குகப் பெருமாள் பக்கலிலும் காணலாம். ஸ்ரீ பரதாழ்வானுக்கு நன்மைதானே தீமையாய்த்து: ஸ்ரீ குகப் பெருமாளுக்குத் தீமைதானே நன்மையாய்த்து." என்பது பிள்ளை லோகாசார்யரின் திருவாக்கு.

"ஸ்ரீ பரதாழ்வானுக்கு நன்மை தீமையாய்த்து" என்ற வாக்கியம் இங்கு பொருத்திப் பார்த்தற்கு உரியது.

**இராமபிரானின் அன்பு ஆணை :**

பரதனது, புது விதமான, வாதத்துக்குள் அடங்காத வேண்டுகோள் உரையைக் கேட்டான் இராமபிரான். இனி. இராமபிரானும் அன்பினால் பரதனுக்குஒருகட்டளை இடஎண்ணினான். அன்புக் கட்டளையை பரதன் மீறமாட்டான் என்றநம்பிக்கை இராமபிரானுக்கு. முன்பு. தன்னைவிடாது தொடர்ந்து வந்த குகனையும், அன்பினால் இடும் ஆணை வழியினால்தான் சிருங்கி பேரத்துக்குத் திருப்பி அனுப்பினான் இராமபிரான்.

'வாய்மை என்னும் ஈது அன்றி. வையகம்
'தூய்மை என்றும் ஒன்று உண்மை சொல்லுமோ?
தீமைதான், அதின் தீர்தல் அன்றியே,
ஆய் மெய்யாக; வேறு அறையல் ஆவதே.' (2489)

'எந்தை ஏவ,ஆண்டு ஏழொடு ஏழ்எனா,
வந்த காலம்நான் வனத்துள் வைக, நீ
தந்த பாரகம் தன்னை மெய்ம்மையால்
அந்த நாள்எல்லாம் ஆள், என் ஆணையால்' (2490)

இராமபிரான் இடும் அன்பு ஆணை, பரதன் கூறிய கூற்றையே. அடிப்படையாக்கிக் கொண்டு அமைகின்றது. 'தசரதன், உம்பரானாக, (மேலுலகத்தானாக) ஆகும்போது தனக்கு உரிய மெய்யை (வாய்மையை) நிறுவிப் போனான்' என்று பரதன் கூறியிருந்தான். தந்தை, தனது வாழ்க்கையில் எதனைக் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தாரோ, அதனைத்தான் மைந்தர்களும் தமது வாழ்க்கையின் குறிக்கோளாக்கிக் கொள்ள வேண்டும்.

'அந்த வாய்மையை நாம் கடைப்பிடிக்க வேண்டுமானால் நான் சொல்வதை நீ ஏற்க வேண்டும்.' என்று சொல்லி வாய்மையின் சிறப்பினை முதலில் கூறுகின்றான் இராமபிரான்.

'மனிதன் தூய்மையோடு வாழவேண்டும். அந்த மனத் தூய்மையைக் கொடுப்பது வாய்மையைத் தவிர வேறு ஒன்றும் இல்லை: தீமை என்பது எது என்றால் அந்த வாய்மையினின்று வழுவுதல்தான். வாய்மையிருந்தால் தீமை இல்லை: தூய்மை உண்டு. தீமையை அகற்றி, தூய்மையைத் தரக் கூடிய வாய்மையை நாம் வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டும் அல்லவா?' என்று வாய்மையின், இன்றியமையாமையை முதலில் பொதுவாக எடுத்துக் கூறினான் இராமபிரான். இராமபிரான் கூறுவதாக இந்தக் கவிதையில் கவிச்சக்கரவர்த்தி, இரு திருக்குறள் கருத்துக்களை இணைத்து வைத்துள்ளான். அவை, தூய்மையையும் வாய்மையையும் வற்புறுத்துவன.

'புறந்தூய்மை நீரான் அமையும்: அகந்தூய்மை
வாய்மையான் காணப் படும்' (298)

'தூஉய்மை என்பது அவாஇன்மை: மற்றது
வாய்மை வேண்ட வரும்.' (264)

என்பன அத்திருக்குறளாகும் 'தந்தை,' புண்ணியத்துறைகளாடி ஏழ் இரண்டாண்டின்வா' என்று எனக்கு ஆணை இட்டுள்ளான். அந்த ஆணையை அரசின் கட்டளையை-தந்தையின் வாக்குறுதியை-வாய்மையை நான் காப்பாற்ற வேண்டும் அல்லவா? அந்த வாய்மையை நான் வாழ்க்கையில் கடைப்பிடிப்பதற்கு, இப்போது நீதான் எனக்கு உதவ வேண்டும். அந்த உதவியை நான் இப்போது உன்னிடம் நாடுகின்றேன். என்ன உதவி?

'நீ எனக்குக் கொடுத்த கோசலப் பேரரசை (பாரகம் தன்னை) நான்உனக்குக்கொடுக்கின்றேன்: வாய்மை தவறாதபடி, நான் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வாழும் வரை, அந்த அரசினை ஆட்சிசெய்க: இது என் அன்பு ஆணை: ஆணையை ஏற்றுக் கொள்க' என்றான் இராமபிரான்.

மேலும் இதற்குக் காரணமும் காட்டுகின்றான் இராமபிரான். 'உனக்கு இப்போது அரசின் மேல் விருப்பம் இல்லைதான்: அது எனக்குத்தெரியும். (தூய்மை என்பது அவா இன்மை) நானும் அப்படித் தான் இருந்தேன். ஆனால், தந்தை 'நீ இந்த அரசை ஏற்றுக்கொள்ள வேண்டும்' என்று அன்பு ஆணை பிறப்பித்தார்: அப்படியே நான் அரசை ஏற்க இசைந்தேன்.

நான், மூத்தவராகிய தந்தையின் ஆணைக்குக் கட்டுப்பட்டது போன்று, நீயும், மூத்தவனான எனது அன்பு ஆணையை ஏற்பதுதான் முறையாகும் என்று விளக்கமாகக் கூறினான் இராமபிரான்.

இராமபிரான் காரண காரியத்தோடு இவற்றை எடுத்துக் கூறியும், பரதனது உலகப் பற்றற்ற தன்மை, அரசை ஏற்க இடம் கொடுக்கவில்லை பரதனுக்கு. 'அனையதேல் ஆள்பவர் ஆள்கநாடு: நான் பணிபடர் காடு உடன் படர்தல் மெய்' என்று கூறி, தனது உறுதியில் தவறாது நின்றான் பரதன். இனி என் செய்வது? இரு சகோதரர்களும் அவரவர் நிலைகளினின்றும் சிறிதும் விட்டுக் கொடுப்பவராக இல்லை. இந்த நிலையில் நடுவில் ஒருவர் வந்துதான் ஆக வேண்டும். வந்தனர். யார்? வானவர்கள்.

**வானொலி :**

வானவர்கள் வந்தனர். இங்கு அல்ல! வானுலகத்தில் ஒன்று கூட வந்தனர். வானவர் கூட்டம் யோசித்தது. இராமாவதார நோக்கம் நிறைவேற வேண்டும் என்றால், அண்ணன் காடு செல்வதும் தம்பி நாடு செல்வதும்தான் நடக்க வேண்டும் எனத் தீர்மானித்தனர். தங்களது தீர்மானத்தை,

**"ஏத்தஅரும் பெருங்குணத்து இராமன் இவ்வழிப்**
**போத் தரும்: தாதை சொல்புரக்கும் பூட்சியான்;**
**ஆத்த ஆண்டு ஏழினொடு ஏழும் அங்நிலம்**
**காத்தல் உன்கடன்: இவைகடமை" என்றனர்.**

(2505)

இவ்வாறு தெரிவித்தனர்.

---

போத்தரும்-செல்வான்: பூட்சி-கொள்கை.

'தம்பி! நீ கேட்டாயா இதனை? அதனால் நான் சொல்வதைக் கேள்.' என்று சொல்லி, இராமபிரான் அவன் (பரதன்) துணைமலர்த்தடக்கை பற்றினான். தனது வழிபடுதெய்வமாக விளங்கும் இராமபிரானே தன் கைகளைப் பற்றிக் கொண்டு கேட்டுக்கொள் ளும்போது, பரதனால் எப்படி மறுக்கமுடியும். மறுக் கமுடியவில்லை. இருப்பினும், அதற்கு வஞ்சினம்: ஒரு வேண்டுகோள் வருகின்றன பரதனிடமிருந்து.

**வஞ்சினம் :**

'ஆம் எனில், ஏழ்இரண்டு ஆண்டில், ஐய! நீ
நாமநீர் நெடுநகர் நண்ணி, நானிலம்
கோமுறை புரிகிலை என்னின், கூர்எரி
சாம் இது சரதம்: நின் ஆணை சாற்றினேன்' (2507)

'பெருமானே: உமது ஆணையாக இதைக்கூறு கின்றேன்: பதினான்கு ஆண்டுகள் கழிந்ததும் உடனே வந்து அரசை ஏற்கவேண்டும். ஒருவேளை இதற்குத் தவறினால், நான் நெருப்பில் வீழ்ந்து எனது உயிரை மாய்த்துக் கொள்வேன்' என்று தனது சபதத்தை வெளிப்படுத்தினான் பரத வீரன்.

**வேண்டுகோள் :**

இதனைக் கேட்ட இராமபிரான், இவன், யாதும் ஓர் துன்பிலன், என்று அவனது துணிவை நோக்கி, அன்பினனாய் உருகினனாய் "அன்னது ஆக" என்று கூறினான். "அப்படியே ஆகட்டும்" என்ற இராமபிரான் பதிலுக்குப்பிறகு, "செம்மையின் திருவடித்தலம் தந்து ஈக" என்று தனது வேண்டு கோளை விடுத்தான் பரத நம்பி.

**அடித்தலமும் முடித்தலமும் :**

"தலம்" என்றால் இடம் என்று பொருள் அடி நிற்கும் இடம் பாதுகை: முடித்தலம்-முடியாகிய இடம். இராமபிரானது திருவடிக்கு இடமாகிய பாதுகை, பரதனது முடியை இடமாகக் கொள்கின்றது. பரதன் வேண்டுகோளுக்கு இணங்க, இராமபிரான் 'எம்மையும் தருவன இரண்டும் நல்கினான்' அந்தப் பாதுகை எல்லா உலக இன்பங்களையும் தருபனவாகும். அவைகளைப் பெற்றுக் கொண்டான் பரதன். இப்போது பரதனது நிலை எப்படி உள்ளது. அதைக் கவிச்சக்கரவர்த்திகம்பன் எவ்வளவு அழகாகக் கூறுகின்றான். இதோ, அக் கவிதை,

**'அடித்தலம் இரண்டையும், அழுத கண்ணினான்,**
**'முடித்தலம் இவை' என முறையின் சூடினான்;**
**படித்தலத்து இறைஞ்சினன், பரதன் போயினான்**
**பொடித்தலம் இலங்குறு பொலம் கொள் மேனியான்?**
(2510)

பாதுகை என்ற வடசொல், இங்கு,

அடித்தலம் எனத் தமிழ்ப் படுத்தப்பட்டுள்ளது. பரதன் மாசு அடைந்த மெய்யனாகவும், நற்கலையில் மதி என்ன நகையிழந்த முகத்தினனாகவும், கற்கனியக் கனிகின்ற துயரினனாகவும், இங்கு வந்தான்: இப்போது, ஆனந்தக் கண்ணீரனாகத்திரும்புகின்றான். அழுகையை ஆனந்தமாக்கியது எது? அவனது முடித்தலத்தில் இராமபிரானது அடித்தலம் இருப்பது., என் சென்னிக்கு அணியாகச் சேர்த்தினேன்' என்றார்போல, பரதன் தனது தலைக்கு அணியாக்கிக் கொண்டான் இராமபிரானது பாதுகையை.

இராமபிரானது அன்பு ஆணை 'முடி சூடுக' என்பது தானே! அதனால், திருவடித்தலத்தையே பாதுகையையே, அரச முடியாக மதித்து, தனது தலையில் வைத்துக்கொண்டான் பரதன். இந்த அரசு (கோசலசாம்ராஜ்யம்) முடி சூடும் அரசு அல்ல! 'அடி சூடும் அரசு' என்ற புதுமையை உலகுக்கு உணர்த்தி விட்டான் பரதன்.

பரதன், தனது தலைக்கு எது வரக்கூடாது? எதுவரவேண்டும்? எனஎண்ணினானோ, அவ்வாறே அந்த அரச முடி வரவில்லை; அத்தலம் வந்தது. இதனால் இராமபிரானது ஆணையையும் ஏற்றதாயிற்று; தனது பாரதந்தர்யநிலைக்குப் (தலைவனைச் சார்ந்து அவன் சொற்படி நடத்தல்) பாதகமில்லாதபடியும் ஆயிற்று.

அடித்தலத்தை முடித்தலமாகப் பரதன் ஏற்றுக்கொண்டதால், 'நாம் சொன்னதை அப்படியே ஏற்றுக் கொண்டானே' என இராமபிரானும் மகிழ்ந்தான்: 'நாம் சொன்ன வஞ்சினத்தை ஏற்றுக் கொண்டும், வேண்டுகோளின் படிதிருவடித்தலமும் இராமபிரான் தந்தானே' என்று பரதவள்ளலும் மகிழ்ந்தான்.

முடி சூடி அரசு ஆள்வதை விட, இறைவன் திருவடியைச் சூடி அரசு ஆள்வதுதான் ஆனந்தத்தைத் தரும். உணர்ந்தவர்களுக்குத்தான் இதன் பெருமை தெரியும். இதன் பெருமையையும், இதனால் கிடக்கும் ஆனந்தத்தையும் அறிந்தவன் ஒருவன் உண்டு. அவன்தான் அரக்கர்குலத்து வீடணன்.

**வீடணன் :**

அண்ணன் இராவணனது தீச்செயலை வெறுத்து இராமபிரானிடம் வந்து சேர்ந்தான் வீடணன். தன்னை அடைக்கலப்பொருளாக ஏற்றுக் கொள்ள வேண்டும் எனக் கேட்டுக் கொண்டான் வீடணன். ஏற்றுக்கொண்ட இராமபிரான், தனது தம்பி இலக்குவனைப்பார்த்து,'துஞ்சல்இல்நயனத்து ஐய! தவறு இலாப்புகழான் தன்னைச் சூட்டுதி மகுடம்' என்று கூறினான். இதனைக்கேட்டவன், விளைவினை அறியும் மேன்மை வீடணன். 'அரசமுடி (மகுடம்) மேன்மை தராது' என உணர்ந்தான் வீடண அறிஞன். அதனால், இராமபிரானைப் பார்த்து, 'இளையவற் கவித்த மோலி என்னையும் கவித்தி' என்று வேண்டிக்கொண்டான். 'இளைய வனாகிய பரதனுக்கு அரச முடியாக எதனைத்தந் தாயோ அந்தத்திருவடித் தலத்தையே, எனக்கும் தந்தருள்க' என்பது மேன்மை அறியும் வீடணனது வேண்டுகோள். திருவடித்தலம் - பாதுகைதான், எம்மையும் நல்குவன' என்பதைப்பரதன் உணர்ந் திருந்தது போல, வீடணனும் உணர்ந்திருந்தான் என்பதை இந்நிகழ்ச்சி உறுதிப் படுத்துகின்றது.

பெருமாள் திருவடியாக இருப்பது நம்மாழ்வார் என்று சொல்வது வைணவ சம்பிரதாயக்கொள்கை. பரதனும், வீடணனும் இராமபிரான் திருவடி நிலை களை வேண்டினர். அதனால் இவர்கள் ஆழ்வான் என்ற பட்டம் பெற்றனர். பரதாழ்வான்: விபீஷ ணாழ்வான் என்றுதான் இவர்கள் இருவரும் அழைக்கப்படுவார்கள். இராமாயணக்கதாப் பாத் திரங்களில் வேறுயாருக்கும் ஆழ்வான் பட்டம் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**பரதாழ்வான் :**

பாலபாரதி என்பவர் மிகச்சிறந்த கவிஞர்: வைணவப்பக்தர். அவர் இராமகாதையைதிருப்புகழ்' அமைப்பில் ஒரு அருமையான நூலாக இயற்றி யிருக்கின்றார். அதற்கு இராமசெயத்திருப்புகழ் என்று பெயர். திரு பாலசுந்தர நாய்க்கர் என்ற அறிஞர் இதன் பதிப்பாசிரியர்-திருமலை தேவஸ் தானம் இந்நூலைப்பதிப்பித்துள்ளது. அதில் முதல் பாடல், பரதனை, பரதாழ்வான் எனக்கூறுகின்றது.

"பனிமேலே படுத்தவனைத்
தனுவேதா னெடுத்தவனைப்
பகைசேர் தாடகைக்குமுதற் கணையேனைப்
பகையாதே துணித்தவனைத்
திருவோடே மணத்தவனைப்
பரதாழ்வான் இருக்கவனத் திடையே போய் (1)
பாரரசு நத்திடாத
பேரிளவல் உச்சி சூடு
பாதுகை அளித்த பாதம் அடை வேனோ" (231)

என்று இராம செயத் திருப்புகழ் இந்த நிகழ்ச் சியைப் பாடுகின்றது.

இந்த நிகழ்ச்சியைப் பெரியாழ்வாரும் தமது பிரபந்தத்துள் அருளிச் செய்துள்ளார். அது பரதாழ்வானது உள்ளத்து உணர்வு ஒன்றைப் புலப்படுத்துகின்றது. அதே சமயம் இராமபிரானின் பெருமையையும் தெரிவிக்கின்றது.

"மர வடியை த்தம்பிக்கு வான்பணையம் வைத்து,"
(4.9.1)

என்பதுதான் அந்தப் பாசுரத் தொடர். (மரவடி-பாதுகை: வான்-சிறந்த) பணையம்-அடமானப் பொருள்)

பரதன், இராமபிரானிடம் வரும்போது இராமபிரானின் வருகையைத் தவிர வேறு எதையும் ஏற்றுக்கொள்வதில்லை என்ற நோக்கத்தோடுதான் வந்தான். ஆனால் திரும்பிப்போகும் போது. இராமபிரானை அழைத்துச் செல்லாமலேயே மகிழ்ச்சியோடு சென்றானே? மகிழ்ச்சிக்கு என்ன காரணம்? அந்தக் காரணத்தைத் தெரிவிக்கின்றது பெரியாழ்வாரின் பாசுரம்.

கேட்டதைவிட, பெற்றது பெரும் பொருளாக யிருந்தால் மகிழ்ச்சிதானே! கேட்டது இராமபிரான் வருகையை: பெற்றது மரவடியை. "நின்னின் சிறந்தவை நின்தாள் இணை" என்று சொல்லப் படுபவையல்லவா? இராமபிரானைவிட, அவன் திருவடித்தலம் உயர்ந்தது. உயர்ந்ததைப் பெற்றான்: மகிழ்ந்தான் பரதன்.

மரவடி, அதனைத் தந்தவனினும் மதிப்புடையது- உயர்வுடையது என்பதனை, 'பணையம்' என்ற சொல் விளக்குகிறது.

உலகியலில் கூட ஒருவன் பணம் பெறவேண்டுமானால், பணம் கொடுப்பவனிடம், அதைவிட மதிப்புடைய ஒரு பொருளை அடமானமாக வைக்கின்றான். அது போன்று, பரதனிடமிருந்து தன்னை விடுவித்துக்கொள்வதற்காக, தன்னைவிட உயர்ந்த பொருளாகிய மரவடியை - பாதுகையைப் பரதனிடம் பணையமாக வைத்தான் இராமபிரான்.

---

(வான் பணையம்-உயர்ந்த அடமானம்)

இதனை விளக்கவந்த, திருவாய் மொழிப் பிள்ளை என்ற ஆசாரியர், 'அல்பத்ரவ்யத்துக்காக, பஹுத்ரவியத்தை பணையம் வைப்பாரைப் போலேயிறே வான் பணையம் என்றது' என்று கூறுகின்றார். 'மதிப்பில் குறைந்த பொருளைப் பெறுவதற்கு, மதிப்பில் மிகுந்த பொருளை அடமானமாக்குவது என்பதைக் குறிக்க, வான் பணையம் என்பது வந்தது.' இது இதன் பொருள் விளக்கம்.

**மாசு நீக்கிய மரவடி :**

மரவடியைப் பணையமாக வைத்து, கானகம் செல்வதால், இராமபிரான் தந்தையின் சொல்லைக் காவாது, அரசு ஏற்றான் என்ற மாசு நீங்க மரவடி உதவியிருக்கிறது என்பது வெளிப்படையாகத் தெரிகின்றது. அதற்கும் மேலாக, 'பரதனுக்கு வந்த மாசினையும்-பழியையும் நீக்கியிருக்கிறது இந்த மரவடி' என்று விளக்கம் தருகின்றார் வியாக்கியானச் சக்கரவர்த்தி பெரிய வாச்சான் பிள்ளை அவர்கள்.

'முன்பு கீழோலை வைத்து, தாயைக் கொண்டு ராஜ்யத்தை வாங்கித் தமையனைக் காடேறப் போக விட்டான் என்று உலகினர் பழி சொல்வர்: இராமபிரானை அழைத்து வந்திருந்தால், இப்போது லோகோபவாதம் முதிர்ந்தவாறே, பின் தொடர்ந்து சென்று கண்ணைப் பிசைந்து, காலிலே விழுந்து மீட்டுக்கொண்டுவந்தான் என்றும் பழி தூற்றுவர்.' இது ஆசாரியர் தரும் விளக்கம்.

ஆகவே பரதனுக்கு வர இருந்த மாசினையும்-பழியையும் அகற்றியது இந்த மரவடி. இத்தகைய மரவடியின் பெருமையை, வேதாந்த தேசிகர் சொல்லியிருப்பது "எம்மையும் தருவன" என்பதற்கு விளக்கமாக அமைகின்றது.

---

கீழோலை-தாய்க்கு மறைவாகக் கடிதம் எழுதுவது: லோகோபவாதம்-உலகினரின் பழிச்சொல்: முதிர்ந்தது-பெருகியது:

'திருவடி நிலைகளின் முழுப்பெருமையையும் எழுதவேண்டுமானால். வானமே எழுதப்படும் ஏடாகவும், ஏழுகடல்களும் மையாகவும், ஆயிரம் திருமுகங்களை உடைய திருமாலே அவைகளைச் சொல்பவராகவும் அமையவேண்டும். அப்படியிருந்தால்தான் அடித்தலத்தின்-மரவடியின் பெருமையை எழுத இயலும்' என்பது சுவாமி தேசிகன் அருளிய பாதுகைப் பெருமை ஏன் அவை எம்மையும் இன்பம் நல்குவன அல்லவா? பாதுகையின் பெருமை இது. இதனைச் சூடிய பக்தனாகிய பரதாழ்வான் பெருமை எவ்வளவு இருக்கும்? அதனை அளவிட்டுச் சொல்ல முடியுமா? பரதாழ்வான் பெருமையையோ புகழையோ அளந்து கூறும் அளவு கருவி உலகில் இல்லை. இல்லவே இல்லை. அது, 'மொழியைக் கடக்கும் பெரும் புகழ்' என்று வேண்டுமானால் கூறி மகிழலாம்.

**பாதுகை பெற்ற பரதாழ்வான்:**

> 'நந்தியம் பதியிடை, நாதன் பாதுகம்
> செந்தனிக் கோல்முறை செலுத்த சிந்தையான்
> இந்தியங்களை அவித்து இருத்தல் மேயினான்,
> அந்தியும் பகலும் நீர் அறாத கண்ணினான்
>
> (2515)

பாதுகை பெற்ற பரதாழ்வான், அயோத்தி நகருக்குள் புகவில்லை. அதற்கு வெளியில் உள்ள நந்திக்கிராமத்தில்தான் தங்கினான்: இங்கிருந்து கொண்டே கோசல நாட்டை நன் முறையில் ஆண்டான். ஆனால், நாட்டை ஆளும் அரசன்எப்படி யிருப்பானோ அப்படி அரசகோலத்தோடு சிம்மாசனத்தில் அமரவில்லை. புலன் இன்பங்களைத் துறந்து, ஒருதவமுனிவன் போன்றுதான் இருந்தான்

பாதுகையை இராமபிரானின் பிரதிநிதியாக அமைத்துக் கொண்டான் பரதாழ்வான். ஆள்வது பரதனா? இராமபிரானா? என்று கேட்டால், இருவரும்தான். எப்படி? இராமராச்சியப் பிரதிநிதி பாதுகை. அதற்குப் பக்கத்தில் அமர்ந்து, செயல்படுபவன் பரதன். அரசாங்க ஆணைகளில், "இராமபிரானுக்காக பரதன்" என்றுதான் கைச்சாத்திடப்படும். கையெழுத்து பரதனுடையது. ஆனால், அது, இராமபிரானுக்காக. இப்படி ஆட்சி.

சத்தியத்தில் வெற்றி பெற்றவர் இராமர் என்றும் சட்டபூர்வமாக வெற்றி பெற்றவன் பரதன் என்றும் கூறலாம். அதோடு இராமருடைய பாதுகைகளின் மூலம் ராஜ்யத்தை ஆளும் அவர் திறமை, தைரியம், அறிவு, கண்காணிப்பு ஆகிய எல்லாச் சக்திகளையும் அவன் பெற்றதாக வால்மீகி கூறுவார், என்று மகா்கனம் ஸ்ரீநிவாச சாஸ்திரியர் தெரிவிக்கும் கருத்து, இதற்குப் பொருத்தமாக உள்ளது. +

இதன் மூலம், தசரதனது கொள்கையாகிய வாய்மையும் மரபும் காக்கப்படுகின்றது. இராமபிரான் பாதுகை அவன் பிரதிநிதியாகயிருப்பதால், மூத்த மகனுக்கு அரசு என்ற மரபு காக்கப்பட்டது: கைகேசியிடம், 'நின் மகன் ஆள்வான்' என்று தசரதன் கொடுத்த வாக்குறுதிக்கேற்ப, பரதன் அரசியலில் செயல்படுவதால், வாய்மை காப்பாற்றப் பட்டது. மேலும், தசரதன் பணித்த ஏவலின்படி இராமபிரான் ஏழிரண்டாண்டுக்கு காடு செல்வதாலும் தசரதன் வாய்மை காப்பாற்றப்பட்டுள்ளது.

மேலும், தசரதனின் குறிக்கோளை இந்த இருவரும் நிறைவேற்றியிருப்பதால் தந்தைக்கேற்ற மைந்தர்கள் என்பதும் இதன் மூலம் நிரூபணமாகின்றது.

---

+ ராமாயணப் பேருரைகள் பக். 132.

(15)

# திருவடி புனைந்த செல்வன்

**செல்வம்:**

செல்வது எதுவோ, அது செல்வம். செல்வது எதற்கு? தான் சென்றபின், அந்த இடத்தை நிரப்ப வேறு ஒன்றைக் கொண்டு வந்து நிரப்புவதற்கு. வருவது, சென்றதைக் காட்டிலும் பயன் அளிப்ப தாய்-இன்பம் தருவதாக அமையவேண்டும். வந்தது இன்பம் தந்தால், சென்ற ஒன்றைப் பற்றிக் கவலை யில்லை. அப்படிச் சென்று கொண்டேயிருப்பதையும் அதன் காரணமாக, இனபம் வந்து கொண்டேயிருப் பதையும் தான், செல்வமாகவும் செல்வத்தின் பயனா கவும் உலகம் கணிக்கின்றது.

இந்தச் செல்வம், கண்ணால் காணக் கூடிய உருவப் பொருளாகயிருப்பவை; வரும் பயனும் அப் பொருளினவே. இது நீங்கும் செல்வம். இதன் பயனாக வருவனவும் நீங்குவனவே, புறப் பொரு ளாகிய செல்வம், புறப்பொருளால் அனுபவிக்கும் இன்பத்தைத் தான் கொடுக்கும். இன்பம் எங்கு உண்டோ, அதன் அடியிலேயே துன்பம் ஒட்டிக் கொண்டிருக்கும்.

நீங்கும் செல்வத்தால் வரும் இன்பமும், நீங்கும் தானே! அதனால், நீங்காத ஒன்றை நிரந்தரமாக யிருக்கும் படிப்பெற விரும்பினால், நீங்காச் செல்வத் தைத் தேடுவதற்கு முற்பட வேண்டும். அப்படி ஒரு செல்வம் உண்டா? உண்டு. அதற்குத்தான் 'நீங்காத செல்வம்' என்று பெயர். அதுதான் மனத்துக்கு நிறைவைக் கொடுக்கும் 'செல்வம்' என்பது சிந்தனை யின் நிறைவே 'நம்பாரத நாட்டுச் சான்றோர்கள் கண்ட அனுபவத் தத்துவப் பொன்மொழியாகும்.

இத்தகைய உயர்ந்த செல்வத்தைப் பெற்றவன் பரதன். அதனால்தான், அப் பெருமகனை, கவிச்சக் கரவர்த்தி, செல்வன் என்று கூறுகின்றான். பரதன் கோசல நாட்டுப் பேராசைப் பெற்றதாக மக்களால் மதிக்கப்படும் போது, செல்வன் என்ற பெயருக்கு உரியவனாக இல்லை. அந்த அரசச் செல்வத்தை- அரச முடியை வெறுத்து ஒதுக்கிய பிறகுதான், செல் வனாகின்றான் பரதன். அரச முடி, பரதனது சிந்த னையை நிறைவு செய்யவில்லை. பிறகு நிறைவு செய்தது எது? ஆண்டவன் அடி.

சிந்தைக்கு நிறைவு கொடுப்பது தான் செல்வம் என்றால், பரதனது சிந்தைக்கு நிறைவு கொடுத்தது இராமபிரானது திருவடித்தலம். அதுதான் இவனுக் குச் செல்வமாயிற்று. அரச முடி தருவது இன்பம். இது, நீங்கும். ஆண்டவன் அடி தருவது ஆனந்தம். இது நீங்காதது. இன்பத்துக்கு எதிர்ப்பதம் உண்டு அது, துன்பம் என்பதாகும். ஆனந்தத்துக்கு எதிர்ச் சொல் இல்லை. அது நீங்காதது; நிரந்தரமானது.

நீங்கும் செல்வத்தை நீக்கி நீங்காச் செல்வத்தைப் பெற்றவன் இந்தப் பரத நம்பி. இதனைத் தனக்கே உரிய கலை வண்ணத்தோடு கவிதையில் வடித்துத் தருகின்றான் கம்ப நாடன். இதோ அந்தக் கவிதை

''மின்மினி ஒளியின் மாயும்
பிறவியை வேரின் வாங்க,
செம்மணி மகுடம் நீக்கி,
திருவடி புனைந்த செல்வன்
தம்முனார், கமலத்து அண்ணல்
தாதையார், சரணம் தாழ,
எம்முனார் எனக்குச் செய்த
உதவிஎன்று, ஏம்ப லுற்றான்.'' (6499)

பரதன் எதனைப் போக்கினான்? எதனைப் போற்றினான்? ஏன் அப்படிச் செய்தான்? இதற்கு விளக்கம் தருகின்றது இந்தக் கவிதை. போக்கியது-நீக்கியது. மகுடம் புனைந்தது திருவடி. ஏன்? மகுடம் அரசச் செல்வம், பிறவியைப் பெருக்குவது: வரும் ஆனந்தத்தைவாராமல் தடுப்பது: ஆனந்தத்தை அறுத்து அல்லலை வளர்ப்பது. திருவடியோ, பிறவியைப் போக்குவது: ஆனந்தத்தை ஆக்குவது: அல்லலை அகற்றுவது. அதனால், நம் பரதநம்பி, செம்மணி மகுடம் நீக்கினான்: திருவடி புனைந்தான் செல்வனாகிச் சிந்தை நிறைவு பெற்றான்.

பிறவியை அடியோடு போக்குவதற்கு, மகுடம் தன் தலைக்கு வராதபடி நீக்கினான் பரதன். ஆண்டவன் திருவடியே, பிறவியைப் போக்கிப் பேரானந்தம் அளிக்க வல்லது என்பதை நன்கு உணர்ந்தவன் செல்வன் பரதன். இந்தச் செல்வனைக் கொண்டு தான் இராமபிரானே அறிமுகம் ஆகின்றான் இங்கு.

---

மகுடம்-சிரீடம்: (அரசமுடி) கமலத்து அண்ணல்-பிரம்மன்: தாதை-தந்தை: முனார்-அண்ணன்: ஏம்பல்-களிப்பு

'திருவடி புனைந்த செல்வன் தம்முனார் (இராமபிரான்) பரதனது வாழ்க்கைக் குறிக்கோள் முழுவதையும் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ள ஒரு அருமையான தமிழ் வளம் நிறைந்த தொடர் இது.

திருவடி தொடர்பினால் கிடைக்கும் பேரானந்தம், உலக இன்பத்துக்கு அப்பாற்பட்டது மட்டுமல்ல! 'நலம் அந்தம் இல்லதோர் நாடாகிய, பரமபதம்கொடுக்கும் ஆனந்தத்திற்கும் மேம்பட்டது. இதனை நன்கு தன் அனுபவத்தில் கண்டவர் நம்மாழ்வார். ஆழ்வாரது பக்தியை மெச்சி, பெருமாள் அவருக்கு முன் வந்து நின்றான்: 'பரமபதம் தருகின்றேன்: ஆழ்வாரே வாரும்' என்று கூறி பரமபதத்துக்கு அழைத்தான். அதற்குத்தரும் ஆழ்வார் பதில், திருவாய் மொழிப் (2.9.1) பாசுரமாக வருகின்றது.

**'எம்மா வீட்டுத் திறமும் செப்பம், நின்**
**செம்மா பாதப்பற்புத் தலைசேர்த்து ஒல்லை**
**கைம்மா துன்பம் கடிந்த பிரானே!**
**அம்மா அடியேன் வேண்டுவது ஈதே'**

'எனக்கு வேண்டுவது உனது தாமரைமலர் போன்ற திருவடிதான்: நீ கொடுக்கயிருக்கும் பரமபதமும் எனக்கு வேண்டாம்' என்று ஆழ்வார் ஆண்டவனிடம் கூறுகின்றார்.

பரதனும் ஆழ்வான் தானை! அதனால் இராமபிரானிடம் 'செம்மையின் திருவத்தலம் தந்து ஈக' என்று பரதன் கேட்டான்: அதனைத் தலையில் தரித்துக் கொண்டான்: திருவடி புனைந்த செல்வனாக விளங்குகின்றான். திருவடித்தலம்தான் பரதன் பெற்ற பெருஞ் செல்வம்.

---

செப்பம் - சொல்லமாட்டேன் : பாதப்பற்பு-திருவடித் தாமரை: ஒல்லை-விரைவாக: கைம்மா - யானை கடிந்த-நீக்கிய.

**பாதுகா தேவி:**

செல்வமாகயிருந்து ஆனந்தம் அளிப்பதைத் தெய்வமாக மதித்துப் போற்றுவது இந்து சமய முறை. அதன் அடிப்படையில்தான், செல்வத்தை இலட்சுமி என்ற தெய்வமாகப்போற்றுகின்றோம். இங்கு, பரதனுக்குச்சிந்தையின் நிறைவாகயிருக்கும் செல்வம், பாதுகை. (திருவடித்தலம்) அதனால், அந்தத்திருவடித்தலத்தைச்சிம்மாசனத்தில்அமர்த்தி, பாதுகா தேவியாகப் பாவித்து, பூசனை செய்து வழிபடுகின்றான் பரதன். பக்தி பூர்வமாகப் பரதன் செய்யும் பாதுகா தேவி வழிபாட்டை மானசீகமாகக் கண்டான் கம்பன் நாடன்: அக்காட்சியைக் கவிதை களில் வடிக்கின்றான்.

'நந்தியம் பதியின் தலை நாள்தொறும்
சந்தி இன்றி நிரந்தரம், தம்முனார்
பந்தி அம் கழல் **பாதம் அருச்சியா**
இந்தி யங்களை வென்றிருந் தான் அரோ' (1154)

'அன்பு உருக்கொண்டது ஆம் எனல் ஆகுவான்'
"கனத்த கந்தமும் காயும் கனிகளும்
வனத்த அல்ல அருந்தல் இல் வாழ்க்கையான்"
'நோக்கின் தென்திசை அல்லது நோக்குறான்"
"கண்ணின் நீர்க்கு ஓர் கரைஎங்கும் காண்கிலான்"
'அனையன் ஆய பரதன், அலங்கலின்
புனையும் தம்முனார் **பாதுகைப் பூசனை**
நினையும் காலை' (1159)

என்பன, கம்பன்காட்டும்பரதாழ்வான்,பாதுகை பக்தனாய் செயல்படும் காட்சி. 'சந்தி இன்றி நிரந்தரம்' என்பது பரதனது ஆழ்ந்த அன்பைக் காட்டுகின்றது.

---

சந்தி-காலை, பகல், மாலை என்ற சந்தியாகாலங்கள். இவை இறைவனுக்குப் பூசை செய்யும் காலம். அலங்கல்-மலர்மாலை.

காலை, நண்பகல், மாலை என்ற மூன்று காலங்கள் பூசை செய்வதற்கு வகுக்கப்பட்டவைகள். பரதாழ்வான் பாதுகாதேவியின் மேல் கொண்ட அளவற்ற பக்தியினால், எல்லா நேரங்களிலும் தொடர்ந்து,விடாமல்பூசைசெய்துகொண்டே இருக்கின்றான். பூசனை என்பது. திருமஞ்சனம், திருஅலங்காரம், திருஆராதனை, திருஅர்ச்சனை என்ற முறையில் அமையும். பாதுகாதேவிக்குச் செய்யும் திருமஞ்சனப் புனிதநீர், பெருக்கெடுத்துசரயூநதியில் சென்று கலக்கின்றது. அது இப்போது தூயபெருநீர் நதி ஆகிவிட்டது. அப்புனிதநீர்-சரயூநதியாகக் கடலில் சென்று கலக்கிறது. அதனால், கடல் புனிதமும் வன்மையும் பெற்றுக் கொண்டுவிட்டது. இதெல்லாம் பாதுகை பக்தனுக்குத் தெரியாது. அதனைத் தெரிவிக்க இந்த ஆழ்வானைப் போன்றே, திருவடிப் பக்தனாகச் செயல்பட்ட ஒருவன் அயோத்தி வருகின்றான், அவன்யார்? வரும் சூழ்நிலை என்ன?

**திருக்கரமும் திருவடியும்:**

இராமபிரானது திருக்கரத்தைவிட திருவடி சிறப்புடையது: பெருமைஉடையது: வலிமைபெற்றது இதனை மெய்ப்பிப்பது பரதாழ்வான் செய்யும் பாதுகாதேவிப் பூசனை. எப்படி?

மிதிலையில் திருக்கல்யாண உற்சவம். ஏற்பாடு, சனகப் பேரரசனுடையது. இராமபிரான், மணவறையில் நுழையும் முன்பு, திருவடிப்பாதுகாப்புக்கு ஒரு தேவியையும், நுழைந்த பின்பு திருக்கரம் பற்ற ஒரு பிராட்டியையும் அப்பெருமானுக்குக் கொடுத்தான் சனகப் பேரரசன். திருக்கரம் பற்றியவள் சீதாபிராட்டி: திருவடி பற்றியவள் பாதுகாதேவி.

திருக்காம் பற்றிய சீதாபிராட்டி, வாழ்க்கையில் படமுடியாத துன்பங்களுடன், சோகத்தாளாய நங்கையாகப் பத்துமாதம் சிறை வாழ்க்கையை அனுபவித்தாள். திருவடி பற்றிய பாதுகாதேவியோ 14 ஆண்டுகள் சிம்மாசனத்தில் அமர்ந்தாள். நாள் தோறும் எல்லாக் காலத்திலும் ஒரு பரமபக்தனால் பூஜிக்கப்பட்டாள். அந்தப் பூசனைப் புனித நீர், நதிகளையும் கடலையும் புனிதப் படுத்தியது: வலிமைப் படுத்தியது.

பாதுகாதேவியின் பூசைப் புனித நீர், கடல் நீரையும் வன்மை பெறச் செய்த தன்மையை யார் அறிவார்? யாரால் அறியமுடியும்? அறிந்தவர் ஒருவர் உண்டு. அவர்தான், திருக்கரம் பற்றிச் சிறையிருந்த செல்வியாகிய சீதாபிராட்டியால், ஆசீர்வதிக்கப் பெற்ற ஆஞ்சநேய மூர்த்தி. அந்த வீர அனுமான்-பக்த அனுமான் தான், மஞ்சனப் புனித நீரால், உப்புக் கடல் நீர், தப்பாமல் பெற்ற புனிதத்தன்மையையும் வன்மையையும் அறிந்தவன். தான் அறிந்தது மட்டுமல்ல, அறிந்ததை யாரிடம் சொல்லவேண்டுமோ அந்தப் பக்தனிடமே சென்று சொன்னவன். கண்டதும் சொன்னதும் எங்கு? எப்படி?

**கடற்கரைச் செயல்:**

திருக்கரம் பற்றிய சீதாபிராட்டியை மீட்பதற்கு இராமபிரான் கடல் கடக்க வேண்டியிருந்தது. 'எப்படிக் கடலைக் கடப்பது? இந்தச் சிந்தனையில் ஆழ்ந்தான் இராமபிரான். அப்போது. வீடண அறிஞன், 'கடல் அரசனாகிய வருணனை அழைத்து கடலில் அணைகட்ட அனுமதி பெறவேண்டும்; அதற்கு அவனை வரவழையுங்கள்.' என்று யோசனை கூறினான்.

அதற்கேற்ப, இராமபிரானும் எடுத்த மனித வேடத்திற்கியைய வருணனை நோக்கித் தவம் கிடந்தான். அதற்குத் தர்ப்பசயனம் என்று பெயர். அது திருப்புல்லணை ஆயிற்று. ஆனால், அந்தவருணன் வரவில்லை. ஏன்? இதற்குக் காரணம் காண முயன் றார்கள் நம்பூர்வாசார்யர்கள். பக்திபூர்வமாக ஆராய்ந்தார்கள் கண்டார்கள் காரணத்தைஅவர்கள்.

'இங்கு சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட தகுதி இருவரிடமும் இல்லை. அதனால், சரணாகதிபலிக்க வில்லை இராமபிரான்தான் சரண்யன்: வருணன் தான் சரணாகதன். இப்போது, இராமபிரான்சரணா கதன் ஆனான். வருணன் சரண்யனாகக் கருதப்படு கின்றான். சரணாகதன், அகிஞ்சனனாய் இருக்க வேண்டும். அதாவது 'நின்னருளாம் கதியன்றி மற்றொன்றில்லேன்' என்ற நிலையினனாகயிருக்க வேண்டும். இப்போது சரணாகதனாகச் செயல்படும் இராமபிரான் இத்தகுதியினனா? இல்லையே? சரண் யன் எப்படியிருக்க வேண்டும்?" சாமர்த்தியம், அறிவாற்றல், எதையும் யாருக்கும் கொடுக்கும் அருளும் நிரம்பப் பெற்றவனாகயிருக்க வேண்டும். இப்போது சரண்யனாகப் பாவிக்கப்படும் வருணனி டத்தில் இத்தகுதி உண்டா? இல்லையே! அதனால் தான் சரணாகதிபலிக்கவில்லை? நம்பூர்வாசார்யர் கள் கண்ட பக்தி அனுபவ ஆய்வு இது.

**அக்னி அத்திரம்: (அக்கினியாஸ்திரம்)**

'நாம் சரணம் அடைந்தும், கடல் அரசன் வருணன் வரவில்லையே' என்று சீற்றம்கொண்டான் இராமபிரான். அதனால், அக்கினி அத்திரத்தால் இந்தக் கடல் நீரை வற்றச் செய்து படைகளைத் தரையில் நடத்திச் செல்லலாம் என எண்ணினான்.

சீற்றத்தின் வேகத்தோடு புறப்பட்டது, அக்கினி அத்திரம் இராமபிரான் வில்லினின்றும். அக்கினி அத்திரம் கடல் நீரில்பாய்ந்தது. அதன் குறிக்கோளாகிய, நீரை வற்றச் செய்தல் காரியம் நடக்கவில்லை. இராமசரம் (அம்பு) குறிக்குத்தப்பாது' என்பது பழமொழி. ஆனால், வைத்த குறி இப்போது தப்பிப் போய் விட்டது. கடல் நீர், அக்கினி அத்திரத்தால் கொதித்ததேயன்றி, வற்றவில்லை ஏன்? அங்கு இருப்பவர் யாருக்கும் இதன் காரணம் புரியவில்லை புரிந்தது ஒரு பக்தனுக்கு அவனுக்கும் அப்போது புரியவில்லை. மற்றொரு பக்தனைச் சந்தித்த பிறகு தான், இந்தப்பக்தனுக்குப்புரிந்தது. புரிந்துகொண்ட பக்தன் அனுமான்: புரியும் படி, செயலாற்றியவனும் பக்தன். அவன் பரதாழ்வான். இருவரும் திருவடி பக்தர்கள் அல்லவா?

**பக்தர்கள் சந்திப்பு:**

பாதுகை பக்தனாகிய பரதாழ்வான் இருப்பிடம் அயோத்தி மாநகரத்து நந்திக் கிராமம். இராம பக்தனாகிய அனுமன். இராமனுடன் இருந்து அப் பெருமான் இட்ட கட்டளையைச் செய்து கொண்டிருப்பவன்: 'ஏவல் கூவல் பணிசெய்வேன்' என்று தன்னைச் சொல்லிக் கொள்பவன். இப்படிப்பட்ட அனுமனுக்கு, இராமபிரானால் ஒரு பணி இடப் பட்டது. அதுதான், பரதனைச் சென்று சந்திக்கும் பணி.

இலங்கையுத்தம் முடிந்த பிறகு, பதினான்கு ஆண்டுகள் கழியும் நிலையில், முன்கூட்டித் தனது வரவைப் பரதனுக்குத் தெரிவிக்குமாறு அனுமனை அனுப்பிவைத்தான் இராமபிரான். விரைந்து சென்றான் அனுமான். அனுமனது வேகத்துக்கு மேல் வேகமாக அயோத்தியில் ஒருகாரியம் நடந்து கொண்டிருந்தது.

பதினான்கு ஆண்டுகள்கழிந்ததாகத் தீர்மானம் செய்த பரதன், தான் சொன்ன வஞ்சினப் படி, அக்கினிப் பிரவேசம் செய்ய முடிவு செய்தான்: அம் முடிவுப் படி அக்கினி குண்டத்தைச் சுற்றவும் தொடங்கிவிட்டான்.

இதனைக் கேள்வியுற்றாள், 'அரியை ஈன்ற ஒப்புளமுத ஒண்ணாத கற்புடையவளாகிய' கோசலைப் பிராட்டி. ஓடி வந்தாள். 'மைந்தனே! நின் உயிர் போயினால் எல்லாம் போகும். எண்ணில்கோடி இராமர்கள் வந்தாலும் உன் அருளுக்கு ஒப்பாக மாட்டார்கள்! என்று பரதன் பெருமையைச் சொல்லிச் சொல்லித் தடுத்துப் பார்த்தாள். தடுத்துநிறுத்த முடிய வில்லை. தடுத்து நிறுத்தவந்தான், கோசலைப் பிராட்டியின் மைந்தனாகிய இராமபிரானால் அனுப்பப்பட்ட தூதுவன். இந்தத் தூதுவன், சொல்லின் வல்லாளனாகையால். இப்போது என்ன சொல்ல வேண்டுமோ அதனைச் சொல்லிக் கொண்டே, பரதன் முன் வந்து நின்றான். அவன் தான் பக்த அனுமான். சொன்னது என்ன?

**'அய்யன் வந்தனன்; சூரியன் வந்தனன்;**
**மெய்யின் மெய்அன்ன நின் உயிர் வீடினால்**
**உய்யுமே அவன்'? என்று உரைத்து உன்புகா**
**கய்யினால் எரியைக் கரியாக்கினான்,- (10189)**

சிறையில் உயிர்விடயிருந்த சீதாபிராட்டியின் முன்னால். 'அண்டர் நாயகன் அருள் தூதன் யான்' என்று சொல்லிக் கொண்டு தோன்றினான் இந்தப் பக்த அனுமான் இங்கு 'அய்யன் வந்தனன்' எனச் சொல்லிக் கொண்டு வந்தான். அதனால் பரதன் உயிர்பிழைத்தான்.

---

சூரியன் - மேலோன்: (இராமபிரான்) மெய் - வாய்மை: கரி-சாட்சி. (கரியாக்குதல்-அவத்தல்)

**அனுமனும் பரதனும்;**

பரதனைப் பார்த்ததும் அனுமனுக்கு ஒரு ஐயம் இலக்குவனும் தம்பி: பரதனும் தம்பி. இலக்குவன் இராமபிரானோடேயே இருந்துவாழ்ந்தான். பரதன் பிரிந்திருந்து எப்படி வாழ முடிந்தது? இந்தக் கேள் வியைக் கேட்டு விட்டான் அனுமன் பரதனிடம்.

பரதாழ்வான் பதில், ஏற்கனவே, அனுமன் உள்ளத்தில் இருந்தஐயத்தைஅகற்றிவிட்டது. 'நான் இராமபிரானை விட்டுப் பிரிந்தாயிருந்தேன்? அப் பெருமானுடைய பாதுகை இது, இதற்குப் பூசை செய்வதன் மூலம், இராமபிரானுடன் நெருங்கிய வனாகவேயிருந்தேன்.' என்று பதில் கூறினான் பாதுகை பக்தன் பரதன். இதைக் கேட்டதும், 'எல்லாம் புரிந்தது புரிந்தது' என்று துள்ளிக் குதித்தான் பக்த அனுமான். இது அங்கு இருந்தவர் யாருக்கும் புரியவில்லை. புரியவைத்தான் அனுமான்.

பாதுகையின் திருமஞ்சனப் புனித நீர் சரயூ நதியின் மூலம் கடலில் கலந்துவிட்டது. அதனால், கடல் ஆற்றல் பெற்றுவிட்டது. அதனால்தான், இராமபிரான் அன்று விட்ட அக்கினி அத்திரம், கடல் நீரை வற்றவைக்க முடியவில்லை என்றுதான் உணர்ந்த உண்மையைத் தெளிவுபடுத்தினான் வீர அனுமான். கை அம்பை, கால் அம்பு (அப்பு-நீர்) வென்றுவிட்டது. திருக்கரத்தினும் திருவடி, பெருமை உடையது என்றஉண்மை பரதாழ்வானால் உலகுக்கு உணர்த்தப்பட்டுள்ளது.

இப்படி எல்லாம், பாதுகையின் பெருமையைப் பாடிப்பாடி ஆனந்த வெள்ளத்தில் மூழ்கும் ஆசார்யர் ஒருவர் உண்டு அவர்தான், சுவாமி ஸ்ரீமந்நிகமாந்த மஹா தேசிகன் ஆவார். இவ்வாறாக, பரதாழ்வான், அகத்தால் பாதுகை பக்தனாகவும், புறத்தால் அடி சூடும் அரசனாகவும் வாழ்ந்து விளங்கினான். வாழ்க அவன் புகழ்: வளர்க அவன் பெருமை என்று சொல்லி, பரதாழ்வானை நாம் என்றென்றும் வணங்கி மகிழ்வோம்.

திருவடி புனைந்த செல்வன், தனது சத்துருக் கனனைப்பார்த்து, கோசலப் பேரரசை நீ ஏற்றுக் கொள்கஎன்றுகூறினான். அப்போதுசத்துருக்கனன் கூறுவதாக அமைந்த கவிதைகள் கற்பார் மனத்தில் என்றும் நிற்க வேண்டியவைகள்.

பரதன் சொன்னதைக் கேட்ட சத்துருக்கன்
வருந்தி நொந்து உரைத்தல்

1. கேட்ட தோன்றல், கிளர்தடக் கைகளால்
தோட்ட தன்செவி பொத்தி, துணுக்குறா,
ஊட்டு நஞ்சம் உண்டான்ஒத்து உயங்கினான்;
நாட்டமும் மனமும் நடுங்கா நின்றான். (10170)

2. விழுந்து, மேக்குஉயர் விம்மினன் வெய்து
உயிர்த்து.
எழுந்து, 'நான் உனக்கு என்ன பிழைத்துளேன்?
அழுந்து துன்பத்தினாய்' என்று அரற்றினான்-
கொழுந்து விட்டு நிமிர்கின்ற கோபத்தான்.
(10171)

3. கான்ஆள நிலமகளைக் கைவிட்டுப்
போனானைக் காத்து, பின்பு
போனானும் ஒருதம்பி: "போனவன்
தான்வரும் அவதி போயிற்று" என்னா,
ஆனாத உயிர்விடஎன்று அமைவானும்
ஒருதம்பி: அயலே நாணாது,
யானாம்இவ் அரசுஆள்வென்? என்னே,
இவ்அரசாட்சி! இனிதே அம்மா! (10172)

4. "மன்னின்பின் வளநகரம் புக்குஇருந்து
வாழ்ந்தானே, பரதன் என்னும்
சொல்"நிற்கும்" என்றுஅஞ்சி, புறத்துஇருந்தும்
அருந்தவமே தொடங்கி னாயே!
"என்னின்பின் இவன்உளனாம்" என்றே,உன்
அடிமை உனக்கு இருந்த தேனும்,
உன்னின்பின் இருந்ததுவும். ஒருகுடைக்கீழ்
இருப்பதுவும் ஒக்கும் என்றான்.
(10173)

இராமபிரான் தனது அடையாளப் பொருளாகக் கொடுத்தனுப்பிய மோதிரத்தை அனுமனிடம் பெற்றான் பரதன். அப்போதைய பரதன் மகிழ்ச்சிநிலை:

1. காட்டிய மோதிரம் கண்ணில் காண்டலும்,
முட்டு தீ வல்விடம் உற்று முற்றுவார்க்கு
ஊட்டிய நல்மருந்து ஒத்த தாம்அரோ.
ஈட்டிய உலகுக்கும் இளைய வேந்தற்கும்.
(10195)

2. மோதிரம் வாங்கி, தன் முகத்தின்மேல்
அணைத்து,
'ஆதரம் பெறுவதற்கு ஆக்கையோ? எனா,
ஓதினர் நாண்உற, ஓங்கினான்-தொழும்
தூதனை முறைமுறை தொழுது துள்ளுவான்.
(10197)

3. ஆதிவெந் துயர்அலால், அருந்தல் இன்மையால்,
ஊதுறப் பறப்பதாய் உலர்ந்த யாக்கைபோய்,
'ஏதிலன் ஒருவன்கொல்' என்னல் ஆயது:
மாதிரம் வளர்ந்தன, வயிரத் தோள்களே.
(10198)

4. அழும்:நகும். அனுமனை ஆழிக் கைகளால்
தொழும்: எழும்:துள்ளும் வெங்களி துளக்கலால்;
விழும்அழிந்து: ஏங்கும்போய் வீங்கும்
வேர்க்கும்; அக்
குழுவொடும் குனிக்கும்: தன்தடக்கை
கொட்டுமால். (10199)

5. 'ஆடுமின்! ஆடுமின்!' என்னும்: ஐயன்பால்
ஓடுமின். ஓடுமின்!' என்னும்: பாவிகாள்!
பாடுமின், பாடுமின்! என்னும்: 'பாவிகாள்!
சூடுமின், சூடுமின், தூதன் தாள்!' எனும்.
(10200)

6. வேதியர் தமைத்தொழும்: வேந்தரைத் தொழும்:
தாதியர் தமைத்தொழும்: தன்னைத்
தான்தொழும்:
ஏதும்ஒன்று உணர்குறாது இருக்கும்:நிற்குமால்:
காதல் என்றதுவும்ஓர் கள்ளின் தோன்றிற்றே!
(10202)

## (16)

## பரதன் புகழாரம்

"ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ் அல்லால்
பொன்றாது நிற்பது ஒன்று இல்,"

என்ற திருக்குறள் மொழிக்கு ஏற்பவும்,

"புகழ்எனின் உயிரும் கொடுக்குவர்
பழிஎனின் உலகுடன் பெறினும் கொள்ளலர்."

என்ற புறநானூற்றுப்பொன்மொழிக்கு ஏற்பவும் வாழ்ந்தவன் பரதநம்பி. அவனுடைய பெருமையை நேரில் கண்டவர்களும் அவனைப் புகழ்ந்தார்கள்: அதனைக் கேட்டவர்களும் புகழ்ந்தார்கள்.

அவரவர்களது தகுதிக் கேற்பவும், பக்குவத்திற் கேற்பவும் சூழ் நிலைக் கேற்பவும் பரத வள்ளலுக்குப் புகழாரம் சூட்டியுள்ளார்கள்.

அவற்றை எல்லாம் ஒன்றாகச் சேர்த்துவைத்து படித்து இன்புறுவது நம் வாழ்க்கையை அவ்வாறே உயர்த்திக் கொள்ளப் பயன் படலாம்.

**இதோ அத்தொகுப்பு :**

## கவிக் கூற்று

மரகத மலை என வளர்ந்த தோளினான்
தாள் தொடு தடக்கைஅத் தருமமே அனான்
தூய வாசகம் சொன்ன தோன்றல்
வள்ளல்
இளைய அண்ணல்
துன்று தாரவன்
கொற்றவேல் நெடுங்குமரன்
கூற்று உறழ் வரி சிலைக் குரிசில்
செம்மை நல் மனத்து அண்ணல்
கோக்குமரன்
துரிசு இலாத்திருமனத்தான்
தாமரைச் செங்கணான்
தீட்டரு மேனிமைந்தன்
அருள் தருவாரி அன்ன செவ்வழி உள்ளத்து அண்ணல்
தூண் தர நிவந்த தோளான்
இந்தியங்களை வென்றிருந்தான்
அன்பு உருக்கொண்டது ஆம் எனல் ஆகுவான
செல்வத்தை வென்ற போதத்துவீரன்
பரிவு அமைந்த திருமனத்தான்
இராமன் சேவடி சூடிய சென்னியன்
பாடுறு பெரும்புகழ்ப் பரதன்
ஈன்றவள் பகை ஞன்
திருவடிபுனைந்த செல்வன்
ஊழிதிரியினும் பேராப் பெருமை யோன்
தவம் புரிந்து ஆற்றல் தாழ்ந்த பரதன்

## இராமபிரான்

பங்கமில் குணத்து எம்பி.
இவ்வையம் மையல் தோன்றா நெறிவாழ்
துணைவன்
ஏனைத் துள மறை அவை இயம்பற்பாலன

பனைத்திரள் கரக்கரிப் பரதன் செய்கையே.
சேணுயர் தருமத்தின் தேவு
செம்மையின ஆணி
பரதன் பெரிதும உத்தமன்.

## இலக்குவன்

பரதனை அமரின் ஆர்க்க
எவ் விடற்கு உரியான் போன இந்திரசித்தே அன்று
………மும்மை உலகமும் தீந்தது.
தீக்கொண்ட வஞ்சன் வீச திகை முகன் பாசம் தீண்ட
வீக்கொண்டு விழயானோ பரதனும் ?

## சீதாபிராட்டி

வரதா! இளையோய்! மறு ஏதும் இலாப் பரதா

## கோசலைப் பிராட்டி

மும்மையின் நிறை குணத்தவன்
நின்னினும் நல்லன்.
"முன்னை நும்குல முதலுளோர்கள் தாம்
நின்னை யாவரே நிகர்க்கும் நீர்மையார்?"
"தரும நீதியின் தன்பயன் ஆவதுஉன்
கருமமே அன்றிக் கண்டிலம், கண்களால்;
அருமை ஒன்றும் உணர்ந்திலை: ஐய! நின்
பெருமை, ஊழி திரியினும், பேருமோ?"
"எண்ணில் கோடி இராமர்கள் என்னினும்
அண்ணல் நின் அருளுக்கு அருகு ஆவரோ"

## கைகேசி

பன்னரும் பெரும் புகழ்ப் பரதன்

## கூனி

கல்வியும், இளமையும், கணக்கில் ஆற்றலும்
வில்வினை உரிமையும், அழகும், வீரமும்
எல்லைஇல் குணங்களும் பரதற்கே.

**வசிட்டன்**

மறு இல் மனத்தான்

**விசுவாமித்திரன்**

தள்ளரிய பெருநீதித்தனியாறு புக மண்டும்
பள்ளமெனும் தகையான்: பரதன் எனும் பெயரான்

**அவையினர்**

'மன்னிளந் தோன்றல்கள் யார் உளர் நின்னின்
தோன்றினார்.'

'ஏந்தல் வேந்து'

'ஏழினோடு ஏழ்எனும் உலகம் எஞ்சினும்
வாழிய நின்புகழ்'

**குகன்**

'ஆயிரம் இராமர் நின் கேழ் ஆவாரோ?'

'மன்புகழ் பெருமை நுங்கள்
மரபினோர் புகழ்கள் எல்லாம்
உன் புகழ் ஆக்கிக் கொண்டாய்
உயர்குணத்து உரவுத் தோளாய்'

**வாலி**

வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்த
வள்ளல் தூயவன் மைந்தன் நீ!
பரதன்முன் தோன்றினாயே,

**வீடணன்**

இளையவற்க வித்த மோலி என்னையும் கவித்தி

**இந்திரசித்து**

'இவன்கொலாம் பரதன் முன்னோன் தன் பெருந்தம்பி?

இக்கால அறிஞர்கள் சிலரின் புகழ் மொழிகள்.
மகாகனம் ஸ்ரீநிவாச சாஸ்திரியார் அவர்கள்.

'பரதனுடைய இயல்பு தனித் தன்மையோடு கூடியது: அதற்கேற்ப அவன் நடக்கும் பொழுது அவனிடம் அனைவருக்கும் ஒரு பெரு மதிப்பு உண்டாகும். எவ்வளவு பெருந்தன்மையுடனும் உதாரகுணத்துடனும் ராமரிடம் நடந்துகொண்டான்! அவனது தீர்மானமும், தமையனைத் தன் வழிக்குக் கொண்டுவருவதற்கு அவன் காட்டிய சமயோசித புத்தியுத்திகளும் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றன அல்லவா? பரதனிடம் நமக்கு அன்பைக் காட்டிலும் மரியாதையே அதிகம் தோன்றும். "நீ மிகவும் பெரியவன்: மிகவும் உயர்ந்தவன்' என்று வணக்கத்தோடு கூறுவோம். ( )

பேராசிரியர் திரு, அ.ச ஞானசம்பந்தன் அவர்கள், "அப்பழுக்கு அற்றவனும், மனிதப்பண்பாட்டின் முடியாய் விளங்குபவனும்' பகைவனும் குறை கூற முடியாத பண்பாடுடையவனும் ஆகிய ஒரு பாத்திரத்தைப் படைத்து விட்டான் கவிஞன். கவிதைஉலகின் ஒப்பற்ற படைப்பாவான் பரதன'. O

செந்தமிழ்ச் சொற்கொண்டல். திரு. ஆ. இராமபத்திரன் அவர்கள். 'திருமாலின் அவதாரமான இராமபிரானை ஒருபுறம் நிறுத்தி அத் தெய்வப் பிழம்பின் கூறான பரதனைத் தனியே பிரிந்துபக்தி நெறி வித்தகனாகக்காட்டி, இராமனெனும் ஆண்டானுடன் பரதனெனும் அடியவனை உவமையால் ஒன்று படுத்தி, இருவரையும் ஒரு நிலையில் காட்டி பின் தன் பண்பாலும், தியாகத்தாலும் ஆண்டானையும் விஞ்சிநிற்கும் **அடியவனின்** பெருமையை மலை மேல்இட்ட விளக்காக ஒளி வீசச் செய்த பெருமை மகாகவிஞர் கம்பருக்கு உரியது.' +

---

( ) ராமாயணப் பேருரைகள் - பக் 181
O தம்பியர் இருவர் – பக் 55
+ நம்பியும் தம்பியும் - பக் 292

# கருத்துகள் வழங்கிய நூல்கள்.

கம்பராமாயணம் - சென்னைக்கம்பன் கழகப் பதிப்பு

கம்பராமாயணம் - வை. மு. கோ. உரை.

ராமாயணப் பேருரை - ஸ்ரீ நிவாச சாஸ்திரிகள்.

காவ்யராமாயணம் - கே. எஸ். ஸ்ரீனிவாசன்.

செந்தமிழ்-மாதஇதழ் பதிப்பாசிரியர் - திரு. நாராயணையங்கார்.

துளசிதாஸ் இராமாயணம் - மொழிபெயர்ப்பு தி.வேங்கடகிருஷ்ணய்யங்கார்

ஸ்ரீவசனபூஷனம் - பிள்ளை லோகாசாரியார்

பாதுகாஸகஸ்ரம் – சுவாமிவேதாந்ததேசிகர்

திவ்யப்பிரபந்தம் வியாக்கியானம் - திருவாய்மொழிப்பிள்ளை பெரிய வாச்சான் பிள்ளை

திருவாய்மொழி,

சீவகசிந்தாமணி

சிலப்பதிகாரம்

திருவாய்மொழி ஈட்டின் B. R. புருஷோத்தம நாயுடு

இராமசெயத் திருப்புகழ்- பாலபாரதி

திருக்குறள்

புறநானூறு

தம்பியர் இருவர் பேராசிரியர். அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள்.

நம்பியும் தம்பியும் திரு. ஆ. இராமபத்திரன் அவர்கள்

தமிழாக்கம்.

இராமகதாரஸவாகினி - பகவான் ஸ்ரீசத்யசாயிபாபா

ஸ்ரீ :

# ஆசிரியரின் பிற நூல்கள்



1. இராமாவதாரம்
2. ஓவியப் புறா
3. படிவங்கள் எப்படியோ ?
4. கம்பனும் சடையனும்
5. தேசிய காப்பியம்
6. தெய்வமாக் கவிகள்
7. பெருந் தெய்வம்
8. ஞானநாயகன்
9. சாதி நெறியும் நீதி நெறியும்
10. வெற்றியும் தோல்வியும்
11. வைணவக் களஞ்சியம்
12. வைணவச் செல்வம்
13. வைணவ வாழ்வு
14. பாரதி கண்ட பாரதத் தாய்
15. விவேகானந்தரும் தேசியமும்
16. திருமணப் பாமாலை
17. ஆர்வவிளக்கு அம்மணி அம்மாள்
18. எங்கள் குல விலக்கு
19. நெய்குடம்
20. தினசரி தியானம்
21. வாழித் திருநாமம் விளக்கம்
22. தேசிகர் நூற்றந்தாதி உரை
23. தேசிகர் அடிப்பொடி
24. கீதாசாரத் தாலாட்டு
25. என் சிந்தனைக்குறிப்பின் ஒப்புமை மலர்கள்
26. வள்ளல் நாயகி
27. ஆழ்வார்களின் அருளிச் செயல்கள்
28. பிரபந்தசாரம் விளக்கம்
29. பெரும் புகழான்
30. [illegible]

